# பாஞ்சாலி சபதம்-

## உறைபொருளும் மறைபொருளும்

தொ. மு. சிதம்பரரகுநாதன்
ஆசிரியர்,
சோவியத் செய்தித்துறை,
சென்னை.




அண்ணாமலைப் பல்கலைக் கழகம்
1987

# பொருளடக்கம்

அண்ணாமலை நகர்
10-3-88

பேராசிரியர், தமிழாகரர், கலைமாமணி
டாக்டர் ஆறு. அழகப்பன் எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.
தமிழ்த்துறைத் தலைவர்,
இந்திய மொழிப்புல முதன்மையர்.
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

# அணிந்துரை

பாரதியார் நூற்றாண்டு நினைவு அறக்கட்டளையின்கீழ் 1987ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 23, 24 ஆகிய இரு நாளினில் நடைபெற்ற மூன்று பொழிவுகளே 'பாஞ்சாலி சபதம்—உறைபொருளும் மறைபொருளும்' என்ற தலைப்பில் நூலாக வெளிவருகின்றது. இப்பொழிவுகளை நிகழ்த்தியவர் திருமிகு தொ. மு. சிதம்பரரகுநாதன் அவர்கள். (Editor, Information Branch of the Consulate General of U. S. S. R. in Madras).

சொற்பொழிவாளர் நெல்லையிற் பிறந்தவர். விடுதலைப் போராட்டத்தில் சிறைப்பட்டதால் கல்லூரிப் படிப்பை இழந்தவர். தினமணி, சக்தி, சாந்தி இவற்றின் பத்திரிகை ஆசிரியர். சோவியத் செய்தித்துறையின் பத்திரிகைப் பிரிவின் முதலாசிரியர். தமிழ் எழுத்தாளர் சங்கத்தில் குறிப்பிடத்தக்கவர். சிறந்த கவிஞர், படைப்பாளி, நாடகத்திறனாய்வு வல்லுநர். பாரதியை முழுதும் இனங்கண்டுகொள்ள எழுதிவருபவர். நல்ல மொழிபெயர்ப்பாளர். புரட்சியாளர். 1. பாரதியும் ஷெல்லியும் 2. கங்கையும் காவிரியும் 3. பாரதி காலமும் கருத்தும் 4. பாரதி - சில பார்வைகள் என்பவை சிதம்பரரகுநாதன் அவர்களின் பாரதிபற்றிய ஆய்வு நூல்கள்.

நாட்டுமக்கள் அனைவரும் போற்றிப்புகழும் ஒப்பற்ற தேசியக் கவியின் படைப்பிலக்கியங்களில் தமது பார்வையைப் பதிப்பித்த ரகுநாதன் அவர்கள் அவரின் படைப்புக்களை வைத்தே அவரை இனங்காட்ட முயற்சித்ததின் விளைவே இம்மூன்று பொழிவுகளும். இப்பொழிவுகளை அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்

தமிழ்த்துறையில் நிகழ்த்தினார்கள். இவை, 'ஆறில் ஒரு பங்கும் அரசாங்கத் தடையும்' 'பாஞ்சாலி சபதம் — உறை பொருளும் மறை பொருளும்,' 'பாரதியின் கிருதயுகம்'-ஓர் ஆராய்ச்சி' என்பனவாகும்.

## 'ஆறில் ஒரு பங்கும், அரசாங்கத் தடையும்'

எனுந்தலைப்பில் முதற்பொழிவு அமைந்துள்ளது. இப்பொழிவின் கண் பாரதியின் நூல்கள் இரண்டைப்பற்றிச் சொற்பொழிவாளர் ஆராய்கின்றார். ஒன்று 'கனவு,' மற்றொன்று 'ஆறில் ஒரு பங்கு'. இவையிரண்டும் பாரதியின் ஆயுட்காலத்திலேயே அன்றைய ஆங்கில அரசால் தடை செய்யப்பட்ட நூல்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இவ்விரு நூல்களையும் அன்றைய அரசாங்கத்தினர் தடை செய்தமைக்குரிய வலுவான காரணங்களைக் கண்டறியும் ஆய்வு முயற்சியே முதற்பொழிவாக மலர்ந்துள்ளது. 'கனவு' என்ற கவிதையும் ஆறில் ஒரு பங்கு என்ற கதையும் சமுதாயக் கதையாகவும் கவிதையாகவும் தோன்றினாலும், தேசியப் போராட்டத்தில் ஈடுபடுவோர்க்குத் திருமணமும் துறவும் தடையாக அமையவேண்டியதில்லை எனும் கருத்தும் திருமணமானவர்களும் துறவு மேற்கொண்டோரும் தேசியப் போராட்டத்தில் வேட்கையுறும் உள்ளீடுகளைக்கொண்டதாலேயே இவ்விரு நூல்களும் தடைசெய்யப்பட்டன என்பதையும் ஆசிரியர் புள்ளிவிவரங்களுடன் எடுத்தாண்டுள்ளார்.

## 'பாஞ்சாலி சபதம்-உறைபொருளும் மறைபொருளும்'

எனுந்தலைப்பின்கீழ் இரண்டாவது பொழிவு அமைந்துள்ளது. நூலாசிரியர் பாஞ்சாலி சபத்தின் கதைப் பொருளை முதற்கண் நன்கு விளக்குகிறார். பின்னர் அதனுள் மறைந்து கிடக்கின்ற மறை பொருளான மகளிரும் சுதந்திரப் போராட்டத்தில் வீறுகொள்ளும் உள்ளுணர்வை உள்ளடக்கி நிற்பதைப் பல கூறுகளில் விளக்கிச் செல்கின்றார்.

## 'பாரதியின் கிருதயுகம்' - ஓர் ஆராய்ச்சி

என்னும் தலைப்பின்கீழ் மூன்றாவது பொழிவு அமைந்துள்ளது. பாரதி காண விழைந்த கிருதயுகத்தினை இப்பகுதிக்கண் ஆசிரியர் படம்பிடித்துக் காட்டியுள்ளார் கலியுகம் தொலையவேண்டிப் பாரதி நெடுங்காலமாகத் தவமிருந்த செய்தி இப்பகுதிக்கண் விளக்கப்பட்

டுள்ளது. சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் எனும் உன்னதக் கொள்கைகளை இந்திய மண்ணில் வேரூன்றச் செய்த பாரதியின் முயற்சி இப்பகுதிக்கண் எடுத்தாளப் பெற்றுள்ளது.

பாரதியார் நூற்றாண்டு நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவினை ஏற்படுத்துதற்கு நிதி கொடுத்துதவிய தமிழக அரசிற்கு இவ்வேளை எனது நன்றியறிதலைப் புலப்படுத்தி மகிழ்கின்றேன். மேலும் தமிழ்த்துறையின் 60 ஆவது நிறைவுவிழா ஆண்டான இவ்வாண்டில் இச்சொற்பொழிவு நூலாக வெளிவருவது மிக்க மகிழ்ச்சியைத்தருகிறது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பல்துறை வளர்ச்சியிலும் குறிப்பாகத் தமிழ்த்துறை வளர்ச்சியிலும் நாளும் சிந்தை செலுத்தி வருகின்ற நமது பெருமைமிகு இணைவேந்தர் டாக்டர் எம். ஏ. எம். இராமசாமி அவர்கட்கும், பல்கலைக்கழகப் புகழைச் சிறக்கச்செய்வதில் கவனம் செலுத்திவரும் நமது சீர்மிகு துணைவேந்தர் பேராசிரியர் இராம. சேதுநாராயணன் அவர்களுக்கும் தமிழ்த்துறையின் சார்பில் எனது உளமார்ந்த நன்றியறிதலைப் புலப்படுத்துகின்றேன். இந்நூலினை விரைவில் அச்சிற்குக் கொண்டுவரப் பெரிதும் முயன்ற தமிழ்த்துறை நூல் வெளியீட்டுப் பொறுப்பாளர், இணைப்பேராசிரியர், டாக்டர் வெ.பழநியப்பன் அவர்களும் பல்கலைக் கழகப் பதிப்புத்துறை பொறுப்பாளர் திரு. வெ. இலக்குமணன் அவர்களும் பாராட்டிற்கும் நன்றிக்கும் உரியவர்களாகின்றனர்.

# முன்னுரை

அண்ணாமலை யரசர் அமைத்த கலைக்கழகம்
கண்ணாரக் கண்டு களித்து.

தில்லைப் பதியுடையானான சிற்றம்பலநாதன் அல்லும் பகலும் அகமகிழ்ந்து ஆடிக்கொண்டிருப்பதாக, கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை பாடிப் பரவசம் அடைந்த இந்த அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில், தமிழ்நாட்டில் தமிழ்ப் பெருமகன் ஒருவரால் நிறுவப்பட்ட முதல் பல்கலைக் கழகத்தில், பல அறிஞர் பெருமக்களை ஈன்று புறந் தந்தும் உருவாக்கியும் வளர்த்தும் வந்துள்ள இந்தப் பல்கலைக் கழகத்தில், அறக்கட்டளைச் சொற்பொழிவொன்றை நிகழ்த்தும் அரிய வாய்ப்பினை எனக்களித்த பல்கலைக் கழகத்தின் ஆட்சிக் குழு வுக்கும், தமிழ்த்துறைக்கும் எனது இதயங்கனிந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும்; இலக்கியப் பணிபுரியும் பாதையில் எனக்கு வழிகாட்டி களாகவும் ஒளிகாட்டிகளாகவும் விளங்கிய, விளங்கி வருகின்றவர் களில் ஒருவரான மகாகவி பாரதியின் நினைவால் நிறுவப்பட்டுள்ள பாரதி நூற்றாண்டு நினைவு அறக்கட்டளையின் பேரால் என்னைச் சொற்பொழிவாற்ற அழைத்துள்ளமைக்கு நான் மிகுந்த மனமகிழ்ச்சி யையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

நாற்பதாண்டுகளுக்கும் மேற்பட்ட எனது இலக்கிய வாழ்வின் தொடக்க காலத்திலிருந்தே, இலக்கியம் பற்றிய எனது நோக்கை யும் எனது இலக்கியப் பணியின் போக்கையும் உருவாக்கி, என்னை வழிநடத்திச் சென்றதில், பாரதிக்கும் பெரும் பங்குண்டு. இதனால் நான் இலக்கிய வாழ்வை மேற்கொண்ட காலந்தொட்டே,

பாரதியைப் பலவாறு பயின்றும் ஆராய்ந்தும் வந்திருக்கிறேன். எனது இலக்கிய நோக்குக்கும் போக்குக்கும் ஏற்ப, வரலாற்று வளர்ச்சியின் பின்னணியில், பாரதியின் படைப்புக்களையும் பண்புகளை யும் ஆராய்ந்தும், அவற்றை வரலாற்று உண்மைகளோடு ஒப்பு நோக்கியும் நான் பாரதிபற்றிப் பல நூல்களையும் எழுதியிருக்கிறேன்.

எனது வாழ்க்கைக் கடமைகளில் ஒன்றாக நான் மேற்கொண் டுள்ள பாரதிபற்றிய இந்த ஆராய்ச்சியின் பயனாக, பாரதி நூற் றாண்டு விழா ஆண்டின் முடிவில் 'பாரதி – காலமும் கருத்தும்' என்ற ஒரு பெரு நூலை எழுதி வெளியிட்டேன். அந்த நூலில் பாரதி வரலாற் றாசிரியர்களும், பாரதி இலக்கிய விமர்சகர்களும் ஆராய்ச்சியாளர்களும் மறைத்துவிட்ட அல்லது மறுத்துவிட்ட, திரித்துவிட்ட அல்லது திரையிட்டு மூடிவிட்ட பாரதியின் இலக்கிய மற்றும் அரசியல் வாழ்க்கையின் ஓர் அம்சத்தைமட்டும், அதாவது இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்திய நாட்டின் தீவிரத் தேசியவாத இயக்கம் எழுச்சி பெற்றதோடு இணைந்து தோன்றிய ரகசியச் சங்கம் மற்றும் புரட்சி இயக்கம் ஆகியவற்றில் பாரதிக்கு ஈடுபாடும் அவற்றோடு இயக்கமும் இருந்தனவா என்ற ஒரு விஷயத்தைமட்டும் ஆராய்ந்து எழுதியிருந்தேன். இதனால் அந்த நூல் 1905ஆம் ஆண்டு முதல் 1911ஆம் ஆண்டு வரையிலுமான ஆறு ஆண்டுக் காலத்தில் பாரதியின் அரசியல் மற்றும் இலக்கியப் பணியின் பரிணாம வளர்ச்சியை இனம் கண்டு கூறும் நூலாகவே அமைந்துவிட்டது. பாரதி நூற்றாண்டு விழா ஆண்டான 1982இல் தமிழில் வெளிவந்த தலைசிறந்த நூல் என இந்நூலை, சாகித்திய அகாடமியும் சென்னையிலுள்ள 'இலக்கியச் சிந்தனை' என்ற அமைப்பும் தேர்ந்தெடுத்து, எனக்குப் பரிசுகள் அளித்துக் கௌரவித்தன.

'பாரதி — காலமும் கருத்தும்' என்ற எனது இந்த நூல், பாரதியின் அரசியல் மற்றும் இலக்கிய வாழ்வில் முற்பாதியை மட்டும் ஆராயும் ஒரு நூலாகவே அமைந்துவிட்டது; அந்த வாழ்க்கையின்

பிற்பாதி பற்றிய எனது ஆராய்ச்சியை நான் இனித்தான் எழுதி முடிக்க வேண்டும்.

பாரதி நினைவாக, நான் இங்கு ஆற்றவிருக்கின்ற மூன்று சொற்பொழிவுகளும், 'பாரதி — காலமும் கருத்தும்' என்ற நூலில் நான் கண்டுரைத்துள்ள உண்மைகளின் அடிப்படையில், பாரதியைப் பற்றி மேலும் சில உண்மைகளை இனம் கண்டறிந்து கூறுவதையே நோக்கமாகக் கொண்டவையாகும்.

1. பாரதியின் ஆறில் ஒரு பங்கும், அரசாங்கத் தடையும்
2. பாஞ்சாலி சபதம் — உறை பொருளும் மறை பொருளும்
3. பாரதியின் 'கிருத யுகம்' — ஓர் ஆராய்ச்சி

என்ற மூன்று தலைப்புக்களில் நான் சொற்பொழிவாற்றவிருக்கின்றேன் என்பதைக் கூறிக்கொண்டு, முதற் சொற்பொழிவைத் தொடங்குகிறேன்.

# 1

# ஆறில் ஒரு பங்கும், அரசாங்கத் தடையும்

மகாகவி பாரதியின் ஆயுட் காலத்திலேயே அன்றைய ஆங்கி லேயர் ஆட்சியினல் தடை செய்யப்பட்ட பாரதியின் நூல்கள் இரண் டாகும். ஒன்று : 'கனவு' ; மற்றொன்று 'ஆறில் ஒரு பங்கு'.

இவற்றில் 'கனவு' என்பது இப்போது வெளிவந்துள்ள பாரதியின் கவிதைத் தொகுதிகளில் 'சுயசரிதை' என்ற தலைப்பில் இடம்பெற் றுள்ள 49 பாடல்களைக் கொண்ட பகுதியாகும். இந்தப் பகுதி முதன் முதலில் 'கனவு' என்ற பெயரிலேயே வெளியிடப்பட்டது என்பது அரசாங்கம் வெளியிட்ட பதிப்பினலும் உறுதிப்படுகின்றது. அதில் 'கனவு' என்ற தலைப்பே இந்தப் பகுதிக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. (பாரதி நூல்கள், கவிதை, மூன்றும் பாகம், பல்வகைப் பாடல்கள், சென்னை அரசாங்க வெளியீடு, 1953, பக். 65) பாரதியின் வாழ்க்கைக் காலத்துக்குப் பின் இந்தப் பகுதியையும் சேர்த்து, 'ஸ்வசரிதையும் பிற பாடல்களும்' என்ற தலைப்பில், பாரதியின் கவிதைத் தொகுதி ஒன்றை முதன் முதலில் வெளியிட்ட பாரதி பிரசுராலயம் தனது பதிப்பின் முன்னுரையில், ''ஸ்வசரிதை' என்பது 1910 நவம்பரில் முதன் முதலில் அச்சிடப் பெற்றது'' என்று குறிப் பிட்டு, இச்சிறு நூலுக்குப் பாரதி எழுதியிருந்த முகவுரையையும் முழு மையாக வழங்கியுள்ளது. (ஸ்வசரிதையும் பிற பாடல்களும், முதல் பதிப்பு 1937. பக். 1). இதனல் அன்றைய ஆங்கிலேயே அரசாங்கம் தடை செய்திருந்த 'கனவு' என்ற நூல் 1910 இறுதி வாக்கில் வெளிவந்தது என்பது தெளிவு.

இரண்டாவது நூலான 'ஆறில் ஒரு பங்கு' இப்போது வெளி வந்துள்ள 'பாரதியின் கட்டுரைகள்' என்ற தொகுதிகளில், 'சமூகம்' என்ற பிரிவில் இதே தலைப்பின்கீழ் இடம் பெற்று வரும் சுமார் 40 பக்கங்கள் கொண்ட நெடுங்கதையாகும். இந்தக் கதை எப்போது நூல் வடிவில் வெளிவந்தது என்ற விவரம் இன்றும் சரிவரத் தெரிய வில்லை. எனினும் மேற்குறிப்பிட்ட இரு நூல்களையும் அன்றைய ஆங்கிலேய அரசாங்கம் 1911 அக்டோபர் 11 அன்று தடை செய்து,

இவற்றின் பிரதிகளைப் பறிமுதல் செய்யுமாறு உத்தரவிட்டது என்பதால், 'ஆறில் ஒரு பங்கு' என்ற நூலும் 1910 இறுதியிலோ, 1911 தொடக்கத்திலோ வெளிவந்திருக்கக்கூடும் என்று நாம் கூறலாம். (Order No. 1588, Judicial. Dated 11th October 1911 அரசு ஆவணக் காப்பகம், சென்னை).

இவ்விரு நூல்களும் பாரதியின் ஆயுட்காலத்தில் தடை செய்யப் பட்டிருந்தன என்பது, பாரதி வரலாற்றாசிரியர்கள் பலரும் குறிப் பிட்டுள்ள செய்தியேயாகும். இவை இரண்டையும் இன்று படித்துப் பார்க்கும் வாசகர்களுக்கு, இவை ஏன் தடை செய்யப்பட்டன என்பது புரிந்துகொள்ள முடியாத புதிரேயாகும். என்றாலும், பாரதி வரலாற் றாசிரியர்கள் எவரும் இதற்கான காரணத்தைக் கண்டு கூறவில்லை. பாரதி பற்றிய ஆராய்ச்சியாளர்களும் இதுவரை இந்தப் புதிரை விடுவிக்க முனையவும் இல்லை; முயலவும் இல்லை. இவற்றைத் தடை செய்வதற்கு அன்றைய ஆங்கிலேய ஆட்சியாளர்களுக்கு, அவர் களுக்கே உரிய வலுவான காரணம் ஏதாவது இருந்திருக்கத்தானே வேண்டும். அந்தக் காரணம் என்ன?

அதனைச் சுருக்கமாக ஆராய்வதே இந்தச் சொற்பொழிவின் நோக்கமாகும்.

## கதைச் சுருக்கம்

இவற்றில் முதலில் 'ஆறில் ஒரு பங்கு' என்ற கதையை எடுத்துக் கொள்வோம். இதில் கூறப்பட்டுள்ள கதைதான் என்ன? அந்தக் கதையின் சுருக்கம் இதுதான் :

கோவிந்தராஜன் ஒரு படித்த வாலிபன். அவனது தாயின் ஒன்று விட்ட அண்ணனான சுந்தரராஜுலு நாயுடுவின் மகள் மீனாம்பாள். இவர்கள் இருவருக்கும் மனம் ஒன்றிய காதல். என்றாலும், கோவிந்த ராஜனுக்கு ஒரு தர்மசங்கடமான நிலைமை. அவன் தேசிய இயக் கத்தில்—'வந்தே மாதர' மார்க்கத்தில்—ஈடுபாடு கொண்டவன். மீனாம்பாள் அவனது தேசிய இயக்க ஈடுபாட்டுக்கு விரோதியல்ல. அவளும் அந்த இயக்கத்தின் அனுதாபிதான். என்றாலும், தான் மீனாவைத் திருமணம் செய்துகொண்டால், அதனால் தேசிய இயக்கச் சேவைக்குக் குந்தகமே ஏற்படும் என்று கோவிந்தராஜன் கருதுகிறான். தேசிய இயக்கத்தில் ஈடுபட வேண்டுமென்றால், தான் திருமணம் செய்துகொள்ளாமல் பிரமசாரியாகவே இருந்துவிட வேண்டும்

என்று அவன் கருதுகிறான். இதை மீனாவிடமும் தெரிவிக்கிறான். ஆயினும் அவள் மீது தனக்குள்ள காதலை மறக்கவோ துறக்கவோ அவனால் முடியவில்லை.

இதற்கிடையில், அவன் 'வந்தே மாதர' மார்க்கத்தில் பற்றுடையவன் என்பதைத் தெரிய வந்த அவனது மாமனார் அவனுக்கு மீனாவைத் திருமணம் செய்து கொடுக்கும் எண்ணத்தையே கைவிட்டு விடுகிறார். அவளுக்கு வேறொரு வரனையும் பார்க்கிறார். அவளுக்கு வேறொருவனுடன் திருமணம் நடந்துவிட்டால், தான் தனது பிரமசரிய விரதத்தைத் தங்கு தடையின்றி மேற்கொண்டு, தேச சேவையில் ஈடுபட முடியும் என்பது கோவிந்தராஜனுக்குத் தெரிந்தும், அவன் மனம் மீனாவை மறக்கவும் மாட்டாமல், துறக்கவும் மாட்டாமல் அல்லாடுகிறது. இறுதியாக, மீனாம்பாளிடமிருந்து அவனுக்கு ஒரு கடிதம் வருகிறது. அந்தக் கடிதத்தில் அவள் தான் வேறொருவனுக்கு மனைவியாக விரும்பவில்லை என்றும், காளிதேவி தன் கனவில் வந்து உத்தரவிட்டபடி, தான் ஒரு பச்சிலையைத் தின்று தற்கொலை செய்து கொள்வதாகவும் எழுதியிருந்தாள். இந்த 'மரண ஓலை' யைக் கண்டதும், மீனா தற்கொலை செய்துகொண்டு மாண்டு விட்டாள் என்று முடிவு கட்டுகிறான் கோவிந்தராஜன். இதன் பின் அவன் சன்னியாசிபோலக் காஷாயம் தரித்துக்கொண்டு வட நாட்டுக்குத் தேசாந்தரம் சென்று விடுகிறான். எனினும் 'வந்தே மாதர' மார்க்கத்தை மட்டும் அவன் மறக்கவில்லை. போகும் இடங்களில் அவன் மக்களுக்கிடையே ஒற்றுமையையும் பலமும் ஏற்படுத்தினால் சுதந்திரம் சித்தியாகும் என்ற கருத்துடன் சில பிரசங்கங்களும் புரிகிறான். இதனால் போலீஸ் கண்காணிப்புக்கும் உள்ளாகிறான். இதன் பின் பல இடங்களைச் சுற்றிவிட்டு லாகூர் நகரத்துக்கு வந்து சேர்கிறான். அங்கு பஞ்சாப் தேசபக்தத் தலைவர் லாலா லஜபதி ராயையும் சந்திக்கிறான். அவரது அறிவுரையின்படி, கோசல நாட்டுப் பிரதேசத்தில் பஞ்சத்தால் வாடும் மக்களுக்கு உதவிகள் செய்யவும், நிவாரணப் பணிகளில் பங்கெடுக்கவும் செல்கிறான். பஞ்சப் பிரதேசங்களில் அவன் பணியாற்றி வந்தபோது, வயலில் பாடுபட்டு உழைக்கும் மக்கள் தாழ்த்தப்பட்டும் ஒடுக்கப்பட்டும் தாழ்ந்தவர்களாக ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் கொடுமையைக் காண்கிறான். அவர்களுக்குச் சேவை செய்யும் எண்ணம் அவனுக்கு உண்டாகிறது. அப்போது வங்காளத்தில் அஸ்வினி குமார தத்தர் என்ற தேசபக்தர், அங்குள்ள 'நாம சூத்திரர்' எனப்படும் தாழ்த்தப்பட்ட மக்களைச் சமூகத்துக்குள்

சேர்த்து அவர்களை உயர்விப்பதாகக் கேள்விப்பட்டு, அவரைக் காண அவன் வங்காளத்துக்குச் செல்கிறான்.

ஆனால் அவரது ஊரான பாரிஸாலுக்கு அவன் சென்றபோதோ, அவர் அங்கில்லை, காசியில் இருக்கிறார் என்ற தகவலை அவரது உதவியாளரான சதீச சந்திரபாபு என்பவரின் மூலம் தெரிந்துகொள்கிறான். மேலும், சதீசபாபு 'மதராஸி'யான தேசபக்தி மிகுந்த யுவதி ஒருத்தி பற்றிக் குறிப்பிடுகிறார். இதனைக் கேட்டதும் கோவிந்தராஜனுக்கு மீனாவின் நினைவு வந்துவிடுகிறது. மேலும், அந்த யுவதியைப் பற்றிச் சதீசபாபு கூறும் விவரங்கள், அவள் மீனாதானோ என்ற ஐயத்தை அவனுக்கு ஏற்படுத்துகிறது, அவள் நோய்வாய்ப்பட்டிருப்பதாகவும், அவள் பிழைப்பது அரிது என்றும், அவள் காசியில் இறக்க விரும்பிய காரணத்தால், அஸ்வினி குமார தத்தர் அவளைக் காசிக்கு அழைத்துச் சென்றிருக்கிறார் என்றும் சதீசபாபு தெரிவிக்கிறார். அவன் மனத்தில் மீண்டும் மீனாவின் மீது பரிவும் பாசமும் மேலிடுகிறது. அவன் உடனே காசிக்குச் செல்கிறான். அஸ்வினி குமார தத்தரையும் சந்திக்கிறான். அந்தப் பெண் மீனாதான் என்பதையும், அவளுக்கு ஆபத்தில்லை, பிழைத்துக் கொண்டு விட்டாள் என்பதையும் அவர் மூலம் தெரிந்து கொள்கிறான். என்றாலும், அவள் இறந்து போவாள் என்ற எண்ணத்தினால்தான், தான் தன் விரதத்தையும் கூட மறந்து அவளைக் காண வந்ததாகவும், அவளோடு இருக்க வேண்டும் என்ற எண்ணம் தனக்கில்லை என்றும், தான் திரும்பிச் செல்லப் போவதாதவும் அவன் அவரிடம் கூறுகிறான். அவரோ பெயரளவில் சன்னியாசம் மேற்கொண்ட அவனது போலிப் பிரமச்சரிய விரதத்தை அம்பலப்படுத்தி, மீனாவை மணந்து கொண்டு, ''முற்காலத்தில் ரிஷியும் ரிஷி பத்தினியுமாக வேத யக்ஞம் செய்ததுபோல், வாழ்நாள் முழுவதும் மாதாவின் பிரீத்யர்த்தமாக ஜீவ யக்ஞம் புரிந்து'' வாழுமாறு உபதேசம் செய்கிறார்.

''காளி தேவியின் கட்டளை என்னாகிறது?'' என்று கேட்கிறான் கோவிந்தராஜன். காளிதேவியின் கட்டளை அதுவல்ல என்று அஸ்வினி குமாரதத்தர் அவனுக்கு விளக்குகிறார். அவர்கள் ''இருவருக்கும் பரிபூரண ஹிருதய சுத்தி'' ஏற்படுவதற்கே இப்பிரிவு அவசியமாக இருந்தது என்று கூறி, அவர் அவர்கள் இருவரையும் சேர்த்து வைக்கிறார். இதன்பின் கோவிந்தராஜன் சன்னியாசி வேடத்தைக் கலைத்து, வேறு உடை தரித்துக் கொள்கிறான். பின்பு ''நான்கு

இதழ்களும்'' கூடுகின்றன. ''மாதாவின் சேவைக்காக'' இரண்டு உள்ளங்களும் ஒன்றுபடுகின்றன. ''பிரகிருதி வடிவமாகத் தோன்றிய மாதாவின் முகத்திலே புன்னகை காணப்பட்டது'' என்று கூறி முடிகிறது 'ஆறில் ஒரு பங்கு' என்ற கதை.

இந்தக் கதைச் சுருக்கத்தைப் பார்த்தாலும் சரி, மொத்தத்தில் கதை முழுவதையுமே படித்துப் பார்த்தாலும் சரி, ''தேச சேவை செய்ய வேண்டுமெனில் ஒருவன் பிரமசாரியாக இருந்தாக வேண்டிய அவசியம் இல்லை. காதலித்துக் கருத்தொருமித்த இருவர் தமக்குள் திருமணம் செய்துகொண்டு இருவருமே தேச சேவையில் ஈடு படலாம். அதனால் தேச மாதாவுக்கு ஒரு தொண்டனுக்குப் பதிலாக இரண்டு தொண்டர்கள் கிடைப்பார்கள்'' என்ற கருத்துத்தான் இந்தக் கதையில் வலியுறுத்தப்பட்டுள்ளது என்பது எவருக்கும் புலனாகும். அதே சமயம் அன்றைய வெள்ளை அரசாங்கம் தடை செய்யக் கருதிய அளவுக்கு, இது என்ன அத்தனை அபாயகரமான கருத்தா என்ற வியப்பும் ஏற்படும்.

## பாரதியின் கடிதங்கள்

சொல்லப் போனால், 'கனவு' என்ற தனது சுய சரிதையையும், 'ஆறில் ஒரு பங்கு' என்ற கதையையும் ஆங்கிலேய அரசாங்கம் தடை செய்த பின்னர், அவ்வாறு தடை செய்தது சரியல்ல என்பதைக் கூற வந்த பாரதியும்கூட, 'இவற்றில் என்ன அபாயகரமான கருத்து இருக்கிறது?' என்றுதான் வாதிட்டான்.

8—10—1912 அன்று அவன் 'ஹிந்து' பத்திரிகையின் ஆசிரியருக்கு எழுதி, அந்தப் பத்திரிகையில் வெளிவந்திருந்த அவனது கடிதம் ஒன்றில் இவ்வாறு எழுதியிருந்தான்.

To

The Editor of 'THE HINDU'

Sir,

I appeal to the people of India - in whose name the Government of India is carried on-against the injustice of the said government in proscribing my two innocuous Tamil booklets *KANAVU* (Dream), a poem, and *ARILORU PANGU* (One-sixth), a short story - obviously on the presumption that

சேர்த்து அவர்களை உயர்விப்பதாகக் கேள்விப்பட்டு, அவரைக் காண அவன் வங்காளத்துக்குச் செல்கிறான்.

ஆனால் அவரது ஊரான பாரிஸாலுக்கு அவன் சென்றபோதோ, அவர் அங்கில்லை, காசியில் இருக்கிறார் என்ற தகவலை அவரது உதவியாளரான சதீச சந்திரபாபு என்பவரின் மூலம் தெரிந்துகொள்கிறான். மேலும், சதீசபாபு 'மதராஸி'யான தேசபக்தி மிகுந்த யுவதி ஒருத்தி பற்றிக் குறிப்பிடுகிறார். இதனைக் கேட்டதும் கோவிந்த ராஜனுக்கு மீனாவின் நினைவு வந்துவிடுகிறது. மேலும், அந்த யுவதியைப் பற்றிச் சதீசபாபு கூறும் விவரங்கள், அவள் மீனாதானோ என்ற ஐயத்தை அவனுக்கு ஏற்படுத்துகிறது. அவள் நோய்வாய்ப் பட்டிருப்பதாகவும், அவள் பிழைப்பது அரிது என்றும், அவள் காசியில் இறக்க விரும்பிய காரணத்தால், அஸ்வினி குமார தத்தர் அவளைக் காசிக்கு அழைத்துச் சென்றிருக்கிறார் என்றும் சதீசபாபு தெரிவிக்கிறார். அவன் மனத்தில் மீண்டும் மீனாவின் மீது பரிவும் பாசமும் மேலிடுகிறது. அவன் உடனே காசிக்குச் செல்கிறான். அஸ்வினி குமார தத்தரையும் சந்திக்கிறான். அந்தப் பெண் மீனாதான் என்பதையும், அவளுக்கு ஆபத்தில்லை, பிழைத்துக் கொண்டு விட்டாள் என்பதையும் அவர் மூலம் தெரிந்து கொள்கிறான். என்றாலும், அவள் இறந்து போவாள் என்ற எண்ணத்தினால்தான், தான் தன் விரதத்தையும் கூட மறந்து அவளைக் காண வந்ததாகவும், அவளோடு இருக்க வேண்டும் என்ற எண்ணம் தனக்கில்லை என்றும், தான் திரும்பிச் செல்லப் போவதாகவும் அவன் அவரிடம் கூறுகிறான். அவரோ பெயரளவில் சன்னியாசம் மேற்கொண்ட அவனது போலிப் பிரமச்சரிய விரதத்தை அம்பலப்படுத்தி, மீனாவை மணந்து கொண்டு, ''முற்காலத்தில் ரிஷியும் ரிஷி பத்தினியுமாக வேத யக்ஞம் செய்ததுபோல், வாழ்நாள் முழுவதும் மாதாவின் பிரீத்யர்த்தமாக ஜீவ யக்ஞம் புரிந்து'' வாழுமாறு உபதேசம் செய்கிறார்.

''காளி தேவியின் கட்டளை என்னகிறது?'' என்று கேட்கிறான் கோவிந்தராஜன். காளிதேவியின் கட்டளை அதுவல்ல என்று அஸ்வினி குமாரதத்தர் அவனுக்கு விளக்குகிறார். அவர்கள் ''இருவருக்கும் பரிபூரண ஹிருதய சுத்தி'' ஏற்படுவதற்கே இப்பிரிவு அவசியமாக இருந்தது என்று கூறி, அவர் அவர்கள் இருவரையும் சேர்த்து வைக்கிறார். இதன்பின் கோவிந்தராஜன் சன்னியாசி வேடத்தைக் கலைத்து, வேறு உடை தரித்துக் கொள்கிறான். பின்பு ''நான்கு

இதழ்களும்'' கூடுகின்றன. ''மாதாவின் சேவைக்காக'' இரண்டு உள்ளங்களும் ஒன்றுபடுகின்றன. ''பிரகிருதி வடிவமாகத் தோன்றிய மாதாவின் முகத்திலே புன்னகை காணப்பட்டது'' என்று கூறி முடிகிறது 'ஆறில் ஒரு பங்கு' என்ற கதை.

இந்தக் கதைச் சுருக்கத்தைப் பார்த்தாலும் சரி, மொத்தத்தில் கதை முழுவதையுமே படித்துப் பார்த்தாலும் சரி, ''தேச சேவை செய்ய வேண்டுமெனில் ஒருவன் பிரமசாரியாக இருந்தாக வேண்டிய அவசியம் இல்லை. காதலித்துக் கருத்தொருமித்த இருவர் தமக்குள் திருமணம் செய்துகொண்டு இருவருமே தேச சேவையில் ஈடு படலாம். அதனால் தேச மாதாவுக்கு ஒரு தொண்டனுக்குப் பதிலாக இரண்டு தொண்டர்கள் கிடைப்பார்கள்'' என்ற கருத்துத்தான் இந்தக் கதையில் வலியுறுத்தப்பட்டுள்ளது என்பது எவருக்கும் புலனாகும். அதே சமயம் அன்றைய வெள்ளை அரசாங்கம் தடை செய்யக் கருதிய அளவுக்கு, இது என்ன அத்தனை அபாயகரமான கருத்தா என்ற வியப்பும் ஏற்படும்.

## பாரதியின் கடிதங்கள்

சொல்லப் போனால், 'கனவு' என்ற தனது சுய சரிதையையும், 'ஆறில் ஒரு பங்கு' என்ற கதையையும் ஆங்கிலேய அரசாங்கம் தடை செய்த பின்னர், அவ்வாறு தடை செய்தது சரியல்ல என்பதைக் கூற வந்த பாரதியும்கூட, 'இவற்றில் என்ன அபாயகரமான கருத்து இருக்கிறது?' என்றுதான் வாதிட்டான்.

8—10—1912 அன்று அவன் 'ஹிந்து' பத்திரிகையின் ஆசிரியருக்கு எழுதி, அந்தப் பத்திரிகையில் வெளிவந்திருந்த அவனது கடிதம் ஒன்றில் இவ்வாறு எழுதியிருந்தான்.

To

The Editor of 'THE HINDU'

Sir,

I appeal to the people of India - in whose name the Government of India is carried on-against the injustice of the said government in proscribing my two innocuous Tamil booklets *KANAVU* (Dream), a poem, and *ARILORU PANGU* (One-sixth), a short story - obviously on the presumption that

the latter are seditious. I hold that those who have reported to the Government that my booklets contain expressions which may not be permitted by its law are ignorant persons. I ask for a re-examination of the contents of these booklets by competent persons. I have already approached the Government of Madras on this subject both by means of private communication and writings in the press, but, so far, my efforts have been unavailing. I make this further appeal to the Indian people and demand justice to my booklets at their hands, not in my own interests so much – for these booklets, mean almost nothing to me from point of view of money and fame - as in the interests of what little freedom of the pen is left to us in British India. If you proscribe love poems and social reform stories on the ground that they issue from the pen of a suspected person, you greatly exceed your limits. I pray that the public press should take up this question.

8—10—1912 —Subramania Bharati

இந்தக் கடிதத்தின் தமிழாக்கம் வருமாறு :

எனது ஆபத்தில்லாத இரு சிறு நூல்களான 'கனவு' என்ற கவிதையையும், 'ஆறில் ஒரு பங்கு' என்ற சிறுகதையையும், அவை ராஜத்துரோகமானவை என்ற ஊகத்தின் பேரில், இந்திய அரசாங்கம் தடை செய்துள்ள அநீதிக்கு எதிராக, எந்த மக்களின் பெயரால் இந்திய அரசாங்கம் நடத்தப்படுகிறதோ-அந்த இந்திய மக்களிடம் நான் முறையிட்டுக்கொள்கிறேன். எனது புத்தகங்கள் அரசாங்கத்தின் சட்டத்தால் அனுமதிக்கப்பட முடியாத கருத்துக்களைக்கொண்டுள்ளன என்று அரசாங்கத்துக்கு எடுத்துச் சொன்னவர்கள் ஏதும் தெரியாதவர்கள் என்று நான் கருதுகிறேன். இந்த நூல்களைத் தகுதி வாய்ந்த நபர்களின் மூலம் மறுபரிசீலனை செய்யுமாறு கோருகிறேன். நான் இது விஷயமாக தனிப்பட்ட கடிதங்களின் மூலமும் சரி, பத்திரிகைகளில் எழுதியவற்றின் மூலமும் சரி, சென்னை அரசாங்கத்தை ஏற்கெனவே அணுகியுள்ளேன். ஆயினும் இதுவரை எனது முயற்சிகள் பலனளிக்கவில்லை. நான் மீண்டும் இந்த வேண்டுகோளை இந்திய மக்களுக்கு விடுக்கிறேன். அவர்கள் கையில் எனது புத்தகங்கள் இருப்பதற்கான நியாயத்தைக் கோருகிறேன். இதனை என் சொந்த நலன்களுக்காகக் கோரவில்லை. ஏனெனில் பணம், புகழ்

என்ற நோக்கிலிருந்து பார்க்கும்போது, இந்தப் புத்தகங்களால் எனக்கு அநேகமாக எந்த லாபமுமே கிடையாது. பிரிட்டிஷ் இந்தியாவில் நமக்கு எஞ்சியுள்ள அற்ப சொற்பமான எழுத்துச் சுதந்திரத்தின் நலன்களுக்காகவே இதனைக் கோருகிறேன். சந்தேகத்துக்குரிய நபர் ஒருவரது பேனுவிலிருந்து பிறந்த காரணத்துக்காக, நீங்கள் காதல் கவிதைகளேயும் சமூகச் சீர்திருத்தக் கதைகளேயும் தடை செய்வீர்களானுல், நீங்கள் உங்கள் எல்லைகளைப் பெரிதும் மீறுகிறீர்கள். இந்தப் பிரச்சினையைப் பொதுஜனப் பத்திரிகைகள் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நான் வேண்டிக் கொள்கிறேன்.

—சுப்பிரமணிய பாரதி

இந்தக் கடிதத்திலிருந்து பாரதி தனது நூல்களைத் தடை செய்ததைக் கண்டித்து, சென்னை அரசாங்கத்துக்கும் எழுதியிருக்கிருன், பத்திரிகைளிலும் இதற்குமுன்னரே எழுதியிருக்கிருன் என்று நமக்குத் தெரிய வருகிறது. என்ருலும், அவை பற்றிய விவரங்கள் எவையும் இன்னும் தேடிக் கண்டுபிடிக்கப்படவில்லை. ஆயினும் இதன்பின் சில ஆண்டுகள் கழித்து பாரதி அப்போது லண்டனில் பிரிட்டிஷ் லேபர் கட்சியின் தலைவராகவிருந்த ராம்சே மாக்டொனுல்டுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதினுன். அதில் அவன் தன்னைப்பற்றியும், தனக்கு பிரிட்டிஷ் போலீஸார் இழைத்து வந்த கொடுமைகளேயும் தொல்லைகளேயும் பற்றியும் விரிவாக எழுதியிருந்தான். அந்தக் கடிதம் 1914 பிப்ரவரி 10 அன்று 'ஹிந்து' பத்திரிகையில் 'இந்தியாவில் போலீஸ் ஆட்சி' (Police Rule in India) என்ற தலைப்பில் வெளிவந்தது. அந்தக் கடிதத்தில் ஏனைய பல விஷயங்களோடு பாரதி பின்வருமாறு எழுதியிருந்தான்:

During the trial of Ashe Murder Case at the Madras High Court, I could get some glimpses into the 'evidence' which made the police suspect me as a possible abettor.

It would appear that some of the so called "Conspirators"-the charge of any conspiracy to murder Mr Ashe, be it noted, broke down in the course of the trial and was abandoned by the Government-had with them copies of a harmless love poem and a social reform novellette written by me. It must also be mentioned that the particular men in whose possession

these books were found were acquitted by the Court, as nothing could be found to connect them with even the general "conspiracy" on which charge some of their fellow-accused were ultimately sent to gaol.

The only charge which the Police could maintain against these acquitted men was that they were found in possession of books published by me! And, of course! I was guilty because they had my book! Q. E. D.

மேற்கண்ட பகுதியின் தமிழாக்கம் வருமாறு:—

''சென்னை உயர்நீதி மன்றத்தில் ஆஷ் கொலை வழக்கு விசாரணை நடந்த போது, போலீசார் என்னையும் அதற்கு ஓர் உடந்தையாளனைச் சந்தேகிக்கச் செய்த 'சாட்சிய' ரகங்களைப் பற்றி நானும் சற்றே தெரிந்துகொண்டேன்.

'சதி செய்தவர்கள்' எனக் கூறப்பட்டோரில் சிலர்—மிஸ்டர் ஆஷைக் கொலை செய்வது என்ற எந்தவொரு சதி பற்றிய குற்றச் சாட்டும் விசாரணையின்போது தகர்ந்து போய்விட்டது, மேலும் அது அரசாங்கத்தால் கைவிடவும் பட்டது என்பதைக் கவனத்தில் கொள்ளவும் — தம்மிடம் நான் எழுதிய ஒரு தீங்கற்ற காதல் கவிதை மற்றும் ஒரு சமூகச்சீர்திருத்தக் குறுநாவல் ஆகியவற்றின் பிரதிகளை வைத்திருந்தார்களே என்று எண்ணத் தோன்றும். எனினும் இந்தப் புத்தகங்கள் யாரார் வசம் இருந்ததோ அவர்கள் குற்றமற்றவர்கள் என்று கோர்ட்டால் விடுதலை செய்யப்பட்டனர். ஏனெனில் குற்றம் சாட்டப்பட்ட அவர்களது சகாக்களில் சிலர், இறுதியாக எந்தக் குற்றச்சாட்டின் பேரில் சிறைக்கு அனுப்பப்பட்டார்களோ, அந்தப் பொதுவான 'சதி' யோடும் கூட அவர்களைச் சம்பந்தப்படுத்தக் கூடிய முகாந்தரம் எதையும் கோர்ட் கண்டறியக் கூடவில்லை.

''குற்றமற்றவர்கள் என்று விடுதலை செய்யப்பட்ட இந்த மனிதர்கள்மீது போலீஸ் சாட்டக்கூடிய ஒரே குற்றச்சாட்டு, நான் வெளியிட்ட புத்தகங்கள் அவர்கள் வசம் இருந்ததாகக் கண்டுபிடிக்கப் பட்டது என்பது ஒன்றுதான். ஆம். அவர்கள் என் புத்தகத்தை வைத்திருந்ததால், நான் குற்றவாளியாகி விட்டேன். இது நிரூபிக்கப்பட வேண்டிய விஷயம்.''

'ஹிந்து' பத்திரிகையில் மேற்குறிப்பிட்ட கடிதம் வெளிவந்ததைத் தொடர்ந்து அன்றைய சென்னைச் சட்டசபைக் கவுன்சில் கூட்டத்தில் 1914 ஏப்ரல் 2 அன்று காலஞ்சென்ற பி.வி. நரசிம்ம ஐயர் என்ற உறுப்பினர் பல கேள்விகளை எழுப்பினார். உறுதி படைத்த தேசிய வாதியாகவிருந்த இவர் பிற்காலத்தில் ஒரு யோகியாக மாறி விட்டார். சட்டசபையில் பாரதியிடமிருந்து அரசாங்கத்துக்குக் கடிதம் வந்ததா, வந்தது என்றால் அதுபற்றி விசாரணை நடத்தப்பட்டதா, நடத்தி யிருந்தால் அதன் முடிவு என்ன, பாரதியின் கடிதத்தையும் அரசாங்கத்தின் உத்தரவையும் சபையின் முன்னுள் வைக்க முடியுமா என்று கேள்விக் கணைகளைத் தொடுத்தார். கடிதம் வந்தது என்றும், கவர்னருக்கு வந்த சில கடிதங்கள் பைசலுக்காக நீதித்துறை இலாகா வுக்கு அனுப்பப்பட்டன என்றும், விசாரணை ஏதும் நடத்தப்படவில்லை என்றும், சம்பந்தப்பட்ட நபர் (பாரதி) நீதியிடமிருந்து தப்பியோடி, வேறிடத்தில் (பாண்டிச்சேரியில்) புகலிடம் தேடி வசித்து வருவதால், அவர் பிரிட்டிஷ் இந்தியாவுக்கு வந்தால்தான் நீதி விசாரணை நட வடிக்கைகளை மேற்கொள்ள முடியும் என்றும், (பாரதியின்) கடிதத் தையோ, அது சம்பந்தமான உத்தரவையோ சபை முன் வைப்பதற் கில்லை என்றும் அரசாங்கத் தரப்பில் இதற்குப் பதிலளிக்கப்பட்டது.

இந்தச் சட்டசபை நிகழ்ச்சிக்குப் பின்னர், பாரதி 'ஹிந்து' பத்திரிகைக்கு 1914 ஏப்ரல் 8 அன்று ஒரு கடிதம் எழுதினன். 'ஹிந்து' வில் வெளிவந்த அந்தக் கடிதம் வருமாறு:-

In replying to Hon'ble Mr. Narasimha Aiyar's interpellations regarding me, the Madras Government has made some observations which are slightly inaccurate. The Government says that I am a 'fugitive from justice'. I am not one. For I left British India in 1908. And the Madras Government issued a warrant for me only in 1911. The Government had that if I wish an enquiry into my conduct, I can go to British India, when, so they promise, judicial proceedings will be instituted against me. All that is very reasonable. But that was not the main point of my representation to H. E. the Governor of Madras. I have made certain definite charges against the Madras Police and I have tried to demonstrate these charges of adducing positive proofs. Is my presence

essential in British India for the Government to hold an enquiry into the conduct of the Police?

Pondicherry
8th April 1914 —C. S. Bharathi

இந்தக் கடிதத்தின் தமிழாக்கம் பின்வருமாறு:-

மேன்மை தங்கிய திரு. நரசிம்ம ஐயர் என் சம்பந்தமாக எழுப்பிய கேள்விகளுக்குப் பதிலளிக்கையில், சென்னை அரசாங்கம் சில கருத்துக்களைக் கூறியுள்ளது; அவை சற்றே தவறானவையாகும். நான் 'நீதியிடமிருந்து தப்பி ஓடியவன்' என்று அரசாங்கம் கூறுகிறது. நான் அப்படிப்பட்டவன் அல்ல. ஏனெனில், நான் பிரிட்டிஷ் இந்தியாவை விட்டு 1908ல் வெளியேறி விட்டேன். மேலும் சென்னை அரசாங்கம் 1911ல்தான் என் மீது ஒரு வாரண்டைப் பிறப்பித்தது. எனது நடத்தை பற்றி ஒரு விசாரணையை நடத்த நான் விரும்பினால், நான் பிரிட்டிஷ் இந்தியாவுக்கு வரலாம் என்றும் அரசாங்கம் கூறியுள்ளது; அவ்வாறு வந்தால் எனக்கு எதிராக நீதி விசாரணை நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும் என்று அவர்கள் வாக்குறுதியளிக்கின்றனர். இவையெல்லாம் மிகவும் விவேகமானதே. ஆயினும் மாட்சிமை தங்கிய சென்னை கவர்னருக்கு நான் எடுத்துக் கூறிய விஷயத்தின் பிரதான அம்சம் அதுவல்ல. சென்னைப் போலீசுக்கு எதிராக நான் திட்டவட்டமான சில குற்றச்சாட்டுக்களைக் கூறியுள்ளேன்; தக்க சான்றுகளின் மூலம் இந்தக் குற்றச்சாட்டுக்களை நிரூபித்துக் காட்டவும் முயன்றுள்ளேன். போலீஸின் நடத்தை பற்றி அரசாங்கம் ஒரு விசாரணையை நடத்துவதற்கு, பிரிட்டிஷ் இந்தியாவில் நான் இருக்க வேண்டியது அவசியம்தானா?

பாண்டிச்சேரி,
8 ஏப்ரல் 1914 —சி. எஸ். பாரதி

(ஆதாரம் : The police andBharathi-article by P. Manohar, The Mail Weekly magazine, Sept. 62. A Letter to Mr. Ramsay Mac-Donald-Agni and other poems and translations and Essays and other prose fragments-Published by A. Natarajan 1980)

## 11

## அரசாங்கத் தடை

மேற்கூறியவற்றிலிருந்து பாரதி தனது 'கனவு', 'ஆறில் ஒரு பங்கு' ஆகிய நூல்களை ''ஆபத்தில்லாத இரு சிறு நூல்கள்,, என்றும், 'கனவு', ஒரு ''காதல் கவிதை'' என்றும் 'ஆறில் ஒரு பங்கு' ஒரு ''சமூகச் சீர்திருத்தக் கதை'' என்றும் (18—10—1912 அன்று 'ஹிந்து' வுக்கு எழுதிய கடிதம்), ராம்சே மாக்டொனல்டுக்கு எழுதிய கடிதத்தில் இவற்றை முறையே ''ஒரு தீங்கற்ற காதல் கவிதை'' என்றும், ''சமூகச் சீர்திருத்தக் குறுநாவல்'' என்றும் (10-2-1914ல் 'ஹிந்து' வில் வெளிவந்த கடிதம்) குறிப்பிட்டு, எனவே இவை ''அரசாங்கத்தின் சட்டத்தில் அனுமதிக்க முடியாத கருத்துக்களைக் கொண்டுள்ளன என்று அரசாங்கத்துக்கு எடுத்துச் சொன்னவர்கள் ஏதும் அறியாதவர்கள்'' (18-10-1912ல் 'ஹிந்து' வில் வெளிவந்த கடிதம்) என்று குற்றம் சாட்டி, இவ்விரு நூல்களை யும் அரசாங்கம் தடை செய்தது சரியல்ல என்று வாதாடியிருந்தான் என்பதைப் பார்த்தோம். அதே சமயம் திருநெல்வேலி கலெக்டர் ஆஷ் துரையைச் சுட்டுக் கொன்றது சம்பந்தப்பட்ட ''திருநெல்வேலி சதி வழக்'' கின்போது. மேற்கூறிய இருநூல்களும் சிலர் வசம் இருந்ததாகக் கண்டுபிடிக்கப்பட்டதன் காரணமாக, அவர்கள் ஆஷ் கொலை வழக்கில் சம்பந்தப்படுத்தப்பட்டனர் என்பதும், அந்தக் கொலை வழக்கில் அவர்களைச் சம்பந்தப்படுத்துவதற்கு. இந்த நூல்கள் அவர்கள் வசம் இருந்ததே ஒரு காரணமாகப் போலீசாரால் கருதப்பட்டிருக்கிறது என்பதும் பாரதி மாக்டொனல்டுக்கு எழுதிய கடிதத்தின்மூலம் நமக்குத் தெரிய வருகிறது.

பாரதியின் 'கனவு' என்ற நூல் 1910 நவம்பரில் வெளிவந்தது என்று முன்னர்க் கூறினோம். 'ஆறில் ஒரு பங்கும்' ஏறத்தாழ அதே காலத்தில் வெளிவந்திருக்கக் கூடும். பாரதி 1908ஆம் ஆண்டிலேயே சென்னையை விட்டு வெளியேறி, பாண்டிச்சேரியில் தஞ்சம் புகுந்து விட்டான். இதன் பின் 1918 நவம்பரில் அவன் பாண்டிச்சேரி எல்லையைத் தாண்டி வந்தபோது, பிரிட்டிஷ் போலீசாரால் கைது செய்யப்பட்டுப் பின்னர் விடுதலையானன். எனவே இந்த இரு நூல் களும் அவன் பாண்டிச்சேரியில் இருந்த காலத்திலேயே இயற்றப் பட்டு, அங்கிருந்தே வெளியிடப்பட்டன என்பதும் தெரிய வரும். மணியாச்சி ரயில் நிலையத்தில் ஆஷ் துரையைச் செங்கோட்டையைச் சேர்ந்த வாஞ்சிநாதன் சுட்டுக் கொன்றதேதி 1911 ஜூன் 17ஆம்

நாள். இதன் பின்னரே இந்தக் கொலைக்கான சதியில் சம்பந்தப் பட்டவர்களாக இருக்கக்கூடும் என்று போலீசார் கருதிய பலரது வீடுகளும் சோதனையிடப்பட்டன. அப்போதே ஏனைய பிரசுரங்களோடு, ஆஷ் துரை கொலை செய்யப்பட்டதற்குச் சுமார் ஆறேழு மாதங்களுக்கு முன்னால் வெளிவந்த பாரதியின் இந்த இரு நூல்களின் பிரதிகளும் சிலர் வீட்டிலிருந்து கைப்பற்றப்பட்டன். இதன் பின் ''திருநெல்வேலிச் சதி வழக்கு'' திருநெல்வேலி சப்டிவிஷனல் முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது; குற்றவாளிகள் எனக் கூறப்பட்ட 14 பேரும் குற்றவாளிகள் எனத் தீர்மானிக்கப்பட்டு, வழக்கு உயர்நீதி மன்றத்துக்கு அனுப்பி வைக்கப்பட்டது. இந்த வழக்குக்கென அன்றைய சென்னை அரசாங்கம் நியமித்த விசேட நீதிமன்றம் 1911 செப்டம்பர் 11ஆம் தேதி வழக்கை விசாரணைக்கு எடுத்துக்கொண்டது. இந்த நீதி விசாரணை முடிந்து 1912 பிப்ரவரி 15ஆம் தேதிதான் வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது. இதற்கிடையில் 1911 செப்டம்பர் 8ஆம் தேதியன்று தான், அன்றைய சென்னை அரசாங்கத்தின் அண்டர் செக்கரட்டரியான எஸ். எச். சிலேட்டர் (S.H. Slater) 'கனவு', 'ஆறில் ஒரு பங்கு' ஆகிய நூல்களிலிருந்து தேர்ந்தெடுத்த பகுதிகளின் ஆங்கில மொழி பெயர்ப்புக்களோடு, அரசாங்கத்தின் அட்வகேட் ஜெனரலுக்கு ஒரு கடிதம் எழுதி, அதில் 1910ஆம் ஆண்டில் இந்தியப் பத்திரிகைச் சட்டத்தின் 12ஆவது பிரிவின் கீழ், இந்த இரு நூல்களின் மீது நடவடிக்கை எடுக்க முடியுமா என்று கேட்டிருந்தார்.

(confideatial· Official Memorandum No.4188—1 judicial Dt: 8th September 1911 —

ஆவணக் காப்பகம், சென்னை). இதன்பின் இரண்டே வாரங்களில், 1911 செப்டம்பர் 26 அன்று, அன்றைய சென்னை அரசாங்கத்தின் அட்வகேட் ஜெனரலாகவிருந்த பி.எஸ். சிவசாமி அய்யர் மேற்குறிப்பிட்ட பத்திரிகைச் சட்டத்தின் 12ஆவது பிரிவின்கீழ் இந்நூல்களின் மீது நடவடிக்கை எடுக்கலாம் எனத் தாம் கருதுவதாக அரசாங்கத்துக்குத் தெரிவித்தார். (மேற்கண்ட கடிதத்துக்கான பதில் —ஆவணக் காப்பகம்' சென்னை). இதன் பின் அடுத்த இரண்டே வார காலத்தில் அன்றைய சென்னை அரசாங்கத்தின் அன்றைய தாற்காலிகத் தலைமைச் செயலாளர் பின்வரும் அறிவிப்பைப் பிறப்பித்தார். (Order No. 1588, Judicial, Dated 11th October 1911)

Whereas the two Tamil pamphlets specified below, printed and published at Pondicherry contain matter, which, in the opinion of the Governor in Council. has a tendency to excite disaffection towards the Government and is therefore of the nature described in section 1, sub-section (1) of the Indian Press Act 1910, the Governor in Council, in exercise of the powers conferred by Section 12, subsection (1), of the said Act, declares that all copies of the publications are forfeited to His Majesty :

"Kanavu", a poem and other songs
By C. Subramanya Bharathi

"Ariloru pangu", a short story
By C. Subaramanya Bharathi

இதன் தமிழாக்கம் வருமாறு:—

"ஆலோசனை நடத்திய கவர்னரின் கருத்தின்படி, பாண்டிச்சேரியில் அச்சிட்டு வெளியிடப்பட்ட கீழே குறிப்பிட்டுள்ள இரு தமிழ்ப் பிரசுரங்களிலும், அரசாங்கத்தின்பால் பற்றின்மையைத் தூண்டும் போக்கினைக் கொண்டுள்ள விஷயம் உள்ளது; எனவே அது 1910 இந்தியப் பத்திரிகைச் சட்டம் பிரிவு 1, துணைப் பிரிவு 1இல் குறிப்பிடப்பட்டுள்ள தன்மையைக் கொண்டுள்ளது; இதனால் ஆலோசனை நடத்திய கவர்னர், அந்தச் சட்டத்தின் 12ஆவது பிரிவு, துணைப் பிரிவு 1இன் கீழ் வழங்கப்பட்டுள்ள அதிகாரத்தைப் பயன்படுத்தி, இந்த வெளியீடுகளின் பிரதிகள் அனைத்தையும் பறிமுதல் செய்து மாட்சிமை தங்கிய மன்னர்பிரானிடம் ஒப்படைக்குமாறு அறிவிக்கிறார்.

கனவு — ஒரு கவிதையும் பிற பாடல்களும்
சி. சுப்பிரமணிய பாரதி எழுதியது

ஆறிலொரு பங்கு — ஒரு சிறுகதை
சி. சுப்பிரமணிய பாரதி எழுதியது.

மேற்கண்டவற்றிலிருந்து' ஆஷ் கொலை செய்யப்பட்ட பின் அதில் சம்பந்தப்பட்டவர்கள் எனச் சந்தேகிக்கப்பட்டவர்களின் வீடுகளில் சோதனையிட்டபோது, பாரதியின் மேற்கூறிய இரு நூல்களும் கண்டெடுக்கப்பட்டன என்பதும், அதன் பிறகே அரசாங்கத்தின்

கவனம் இந்நூல்களின் பால் திரும்பியுள்ளது என்பதும், கீழ்க் கோர்ட்டில் விசாரணை முடிந்து, உயர்நீதி மன்றத்தில் விசேட நீதி மன்றத்தினால் (Special Bench) இந்தக் கொலை வழக்கு விசாரணை தொடங்குவதற்கு,மூன்றே நாட்களுக்கு முன்னர்தான், இந்நூல்களின் மீது நடவடிக்கை எடுக்கலாமா என்று சென்னை அரசாங்கம் அட்வகேட் ஜெனரலைக் கேட்டுக்கொண்டது என்பதும், இதன் பின் அவர் கூறிய ஆலோசனையின்படி, விசேட நீதி மன்றத்தில் ஆஷ் கொலை வழக்கு நடந்து வந்த காலத்திலேயே, ஒரு மாத காலத்தில் இந்நூல்களைத் தடை செய்து, இவற்றின் பிரதிகளைப் பறிமுதல் செய்ய உத்தரவிடப்பட்டிருக்கிறது என்பதும் நமக்குத் தெரிய வருகிறது. அத்துடன், (நாம் 1914 ஏப்ரல் 8 அன்று பாரதி 'ஹிந்து' வில் வெளிவந்த கடிதத்தில் கண்டுள்ளபடி), இதே 1911ஆம் ஆண்டில்தான் சென்னை அரசாங்கம் இந்நூல்களின் ஆசிரியனான பாரதியையும் ஒரு சந்தேகத்துக்குரிய நபராகக் கருதி, அவனைக் கைது செய்வதற்கான வாரண்டையும் பிறப்பித்துள்ளது.

மேற்கண்ட தடையுத்தரவில் பாரதியின் இந்நூல்கள் அரசாங்கத் தின் மீது ''பற்றின்மை''யை — ''Disaffection''ஐ — அதாவது வெறுப்பைத் தூண்டிவிடக்கூடிய விஷயம் அடங்கியுள்ளது என்றால்' இவற்றுக்கு முன் பாரதி வெளியிட்ட ''ஸ்வதேச கீதங்கள் (1908 ஜனவரி) , ஜென்மபூமி,' (ஸ்வதேச கீதங்கள் — இரண்டாம் பாகம் 1909) முதலிய தேசிய கவிதைகள், மற்றும், 'இந்தியா' பத்திரிகையில் அவன் எழுதி வந்த பல காரசாரமான கட்டுரைகள் எல்லாம் அத்தகைய உணர்வைத் தூண்டிவிடவில்லையா என்று கேள்வி எழுகிறது. அவையும் இத்தகைய உணர்வை, ஆங்கிலேய ஆட்சியின் மீது வெறுப்பைத் தூண்டிவிட்டவைதான். எனவே அத்தகைய 'பற்றின்மை' யைத் தூண்டிவிட்டது ஒன்றுதான் இந்த நூல்களைத் தடை செய்து பறிமுதல் செய்ய உத்தரவிட்டதற்குக் காரணமா? இந் நூல்களைச் சிலர் தமது கைவசம் வைத்திருந்தனர் என்பதே, அவர் களை ஆஷ் கொலை வழக்கில் சம்பந்தப்படுத்துவதற்குப் போதுமானதாக ஆங்கிலேய ஆட்சியாளர்கள் ஏன் கருதினார்கள், இந்த நூல்களை ஏன் தடை செய்தார்கள், நூலைத் தடை செய்ததோடு மட்டுமன்றி, நூலாசிரியனையும் ஆஷ் கொலைக்கு உடந்தையாகவிருந்த சந்தேகத் துக்குரிய புள்ளியாகக்கருதி, ஏன் அவனைக் கைது செய்யவும் வாரண்டு பிறப்பித்தார்கள், அவர்கள் கருதியதுபோல் உண்மையில் இந்த நூல்களில் அவர்கள் நலனுக்கு அபாயகரமான விஷயம் ஏதேனும் அடங்கியிருந்ததா, அவ்வாறாயின் அந்த விஷயம் என்ன,

அதனை ஏன் அத்தனை அபாயகரமானதாகக் கருதினார்கள் என்றெல்லாம் நம் முன் கேள்விகள் எழுகின்றன.

இந்தக் கேள்விகளுக்கு விடை காண்பதன் மூலமே பாரதியின் இவ்விரு நூல்களையும் ஆங்கிலேய அரசாங்கம் தடை செய்து பறிமுதல் செய்ததற்குப் பிரதான காரணம் என்ன என்பதை நாம் புரிந்துகொள்ள முடியும். இதற்கெல்லாம் விடை காண்பதற்கு, நாம் சில சரித்திர உண்மைகளையும் பின்னணிகளையும் தெரிந்துகொள்ளவேண்டும்.

அந்த உண்மைகள் என்ன?

## தீவிரத் தேசியவாதத் தலைவர்களும் புரட்சி இயக்கமும்

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில், இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்தியாவில் ஆங்கிலேய மன்னரின் ராஜப் பிரதிநிதியாக, வைஸ்ராயாக இருந்து இந்தியாவை ஆண்டுவந்த லார்டு கர்ஸான் மேற்கொண்டு வந்த நடவடிக்கைகள் அன்றைய மிதவாதிகளான இந்தியத் தேசியத் தலைவர்களும் கூடச் சகித்துக்கொள்ளக்கூடியதாக இருக்கவில்லை. உதாரணமாக, இந்தியா தொடர்ந்து நான்கு ஆண்டுகளாகப் பஞ்சத்தினாலும் கொள்ளை நோயினாலும் வாடி வதங்கிக் கொண்டிருந்த சமயத்தில், ஏழாவது எட்வர்டு மன்னரின் முடி சூட்டு விழாவை முன்னிட்டு, ஏராளமான பணத்தை வாரியிறைத்து, ஒரு கோலாகலமான தர்பாரை லார்டு கர்ஸான் 1903ஆம் ஆண்டு ஜனுவரி முதல் தேதியன்று நடத்தினான், இதனைக் கண்டு ராஜவிசுவாசிகளாக இருந்த மிதவாதத் தலைவர்களே கொதித்தெழுந்தனர். "டில்லியில் நடந்தது காரனேஷன் தர்பார் அல்ல; அது கர்ஸானரேஷன் தர்பார்!" என்று மிதவாதியான அன்றைய காங்கிரஸ் தலைவர் லால் மோகன் கோஷ் குறிப்பிட்டார். இதன் பின் கர்ஸான் அநாவசியமாகத் திபெத்தின் மீது படையெடுத்தான். இதனாலும் இந்தியாவுக்கு ஏகப்பட்ட செலவு ஆயிற்று. இதுவும் மிதவாதத் தலைவர்களுக்குப் பொறுக்கவில்லை. இதற்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல், லார்டு கர்ஸான் 1905ஆம் ஆண்டில், வங்காளத்தை இந்து வங்காளம், முஸ்லீம் வங்காளம் என்று வகுப்புவாத அடிப்படையில் பிரிக்கச் சூழ்ச்சி செய்து, வங்காள மாகாணம் ஒரே ஒரு கவர்னரால் ஆள முடியாத அளவுக்கு மிகப் பெரியதாக இருப்பதாக, நிர்வாக அடிப்படையில் ஒரு நொண்டிச்சாக்கினைக் கூறி, அந்த மாகாணத்தை இரண்டாகப் பிரித்தான்.

இவ்வாறு வங்காளம் இரண்டாகப் பிரிக்கப்பட்டதை எதிர்த்து, குறிப்பாக வங்கமும், பொதுவாக இந்திய நாடு முழுவதும் கொதித்தெழுந்தது. இவ்வாறு வங்கப் பிரிவினையைத் தொடர்ந்து ஏற்பட்ட தேசிய எழுச்சியின் போதுதான், இந்திய நாட்டில், பால கங்காதர திலகர், லாலா லஜபதி ராய், அரவிந்தர் முதலிய தலைவர்களின் தலைமையில் தீவிரத் தேசியவாதம் இயக்கம் பிறப்பெடுத்தது என்பதையும், தமிழ்நாட்டில் இந்தத் தீவிரத் தேசியவாத இயக்கத்தின் தலைவர்களாக, வ.உ. சிதம்பரம்பிள்ளையும், சுப்பிரமணிய சிவாவும், மகாகவி சுப்பிரமணிய பாரதியும் விளங்கினர் என்பதையும் நாம் எல்லோரும் அறிவோம்.

1905ல் இந்தியாவில் தீவிரத் தேசியவாத இயக்கம் தோன்றி, அது பலம் பெற்றதற்கு, கர்ஸான் மேற்கொண்ட நடவடிக்கைகள், முக்கியமாக, அவன் வங்கத்தை இரண்டாகப் பிரித்த செயல், அகக் காரணிகளாக, உள்நாட்டுக் காரணிகளாக விளங்கின. ஆனால் இந்த இயக்கம் தோன்றியதற்குச் சில புறக் காரணிகளும், வெளிநாட்டுக் காரணிகளும், அதாவது சர்வதேசக் காரணிகளும் இருந்தன. அவற்றில் மிக முக்கியமானவை, 1904—1905 ஆண்டுகளில் நடந்த ரஷ்ய —ஜப்பானிய யுத்தமும், 1905ல் தொடங்கிய முதல் ரஷ்யப் புரட்சியும் ஆகும்.

அந்தக் காலத்தில் மேற்கே யூரல்ஸ் மலைத்தொடரில் தொடங்கி கிழக்கே விளாதிவாஸ்தாக் வரையிலும் பரந்து, உலகில் ஆறில் ஒரு பங்கு நிலப் பரப்பைத் தன்னுட்கொண்ட மிகப் பெரும் ஐரோப்பிய ஏகாதிபத்தியமாக ரஷ்யா இருந்து வந்தது. மேலும், அந்தக் காலத்தில் கீழை நாடுகள் பலவற்றை அடிமைப்படுத்தி வைத்திருந்த மேலைநாட்டு ஏகாதிபத்திய வல்லரசுகள் இனத்தாலும், நிறத்தாலும், அறிவாற்றலாலும், கலாச்சாரத்தாலும், ராணுவ பலத்தாலும் மேம்பட்டு நின்ற தாங்கள் கீழை நாடுகளை ஆண்டு அனுபவிப்பது நியாயமானதே என்று தர்க்கவாதம்கூடச் செய்து வந்தன. இந்நிலையில் மிகப் பெரும் ஐரோப்பிய ஏகாதிபத்திய வல்லரசான ரஷ்யாவுக்கும், ரஷ்யாவோடு ஒப்பிடும்போது கீழைத் திசையில் ஒரு சுண்டைக்காய் நாடாக விளங்கி வந்த ஆசிய நாடான ஜப்பானுக்கும் இடையே 1904ஆம் ஆண்டில் போர் மூண்டபோது, இந்தப் போரில் ஜப்பான் தோல்வியுறுவது திண்ணம் என்றே பொதுவாகக் கருதப்படக் கூடும். ஆனால், உண்மையில் இந்தப் போரில் ஜார் ரஷ்யாவின் கையாலாகாத்தனமே வெளிப்பட்டது; போரில் ரஷ்யா தோற்றது; ஜப்பானே வெற்றி பெற்றது.

ஜப்பான் பெற்ற இந்த வெற்றியானது, தம்மை அடிமை கொண்டுள்ள ஐரோப்பிய ஏகாதிபத்தியங்களை எதிர்த்து, அடிமைப் பட்டுக் கிடந்த ஆசிய மக்களும் போராட முடியும், விடுதலை பெற முடியும் என்ற நம்பிக்கையை, ஆசிய நாடுகளுக்கு வழங்கியது. ரஷ்ய நாட்டின் புரட்சித் தலைவரான லெனின், 1905 ஜனுவரி 14 (1) அன்று 'Forward' (Vperyod) என்ற சஞ்சிகையில், ''முன்னேறி வரும் முற்போக்கான ஆசியா, பின்தங்கிய, பிற்போக்கான ஐரோப் பாவுக்கு ஈடு செய்ய முடியாத பலத்த அடியைக் கொடுத்துவிட்டது'' என்று எழுதினர். (Lenin's Collected Works, "The Fall of Port Arthur". தொகுதி 8. பக்.48).

ஜப்பான் பெற்ற வெற்றி இந்தியாவிலும் மக்கள் மத்தியில் பெரும் உத்வேகத்தை ஊட்டியது. காந்தியடிகளின் நண்பராக விளங்கிய பூஜ்யர் சி.எப். ஆண்ரூஸ், ''தூரத்தொலைக் கிராமங் களிலும்கூட, கிராமவாசிகள் இரவில் வட்டமிட்டு அமர்ந்துகொண்டு, ஹூக்காவை ஒருவருக்கொருவர் கை மாற்றிப் புகைத்துக்கொண்டு, ஜப்பான் பெற்ற வெற்றியைக் குறித்துப் பேசினர். அவர்களில் முதியவரான ஒருவர், 'சிப்பாய்க் கலகத்துக்குப் பின்னர் இத்தகைய ஒரு நிகழ்ச்சியை நான் கண்டதில்லை'' என்று என்னிடம் கூறினர்' என்று எழுதினர். (மேற்கோள் Modern Religions Movements in India—J. N. Farquhar. பக். 360). பண்டித ஜவாஹர்லால் நேருவும் கூட, தமது உலக வரலாறு என்ற நூலில், தாம் சிறுவனாக இருந்த போது, ''ஜப்பானிய வெற்றிகளைப் பற்றிய செய்திகளை அறிந்து நான் எவ்வளவு பரவசமடைந்தேன் என்பது எனக்கு நினைவிருக் கிறது'' என்று எழுதியுள்ளார். (Glimpses of World History) பக். 401

இவ்வாறு ரஷ்ய—ஜப்பான் யுத்தத்தில் ஜப்பான் பெற்ற வெற்றி இந்தியாவில் தேசிய இயக்கம் எழுச்சியுற்றுத் தீவிரத் தேசியவாத இயக்கம் தோன்றுவதற்கு ஒரு புறக்காரணியாக விளங்கியதைப் போலவே, ரஷ்யாவின் தோல்வியைத் தொடர்ந்து உடனடியாக, 1905ஆம் ஆண்டில் ரஷ்ய நாட்டில் வெடித்த முதல் ரஷ்யப் புரட்சியும் அதற்கு மற்றொரு காரணியாக விளங்கியது. 1905 ஜனுவரி 22ல் தொடங்கி, 1907ல் முடிவுற்ற இந்தப் புரட்சி, ரஷ்ய அரசாங்கத்தின் பயங்கரமான அடக்குமுறையாலும், பிற காரணங்களாலும் தோற்று விட்டபோதிலும்கூட, இந்தப் புரட்சியின்போது ரஷ்ய மக்கள் காட்டிய வீரமும் தீரமும் ஏனைய நாட்டு மக்களுக்கு, குறிப்பாக

ஆசிய நாட்டு மக்களுக்கு மேலும் உத்வேகம் ஊட்டிய நிகழ்ச்சியாகவே விளங்கின. இந்தப் புரட்சியினால் வாயில்லாப் பூச்சிகளாக வாழும் மக்களும்கூடக் கோடிக்கால் பூதமாக மாறி, மிகப் பெரிய கொடுங் கோலாட்சியை, ஏகாதிபத்திய ஆட்சியை எதிர்த்துப் போராட முடியும் என்ற உண்மை மேலும் ஒளி பெற்றுத் துலங்கியது. மேலும், இந்தப் புரட்சியின் விளைவாக, எதேச்சாதிகாரியான ஜார் மன்னன் டூமா என்ற அரசியல் நிர்வாக சபையை அமைக்க முன் வந்தது, ஆசிய மக்களுக்குத் தாமும் தமது போராட்டத்தின் மூலம் அத்தகைய அரசியல் நிர்வாகச் சபையைப் பெறவும், அதில் தமது பிரதிநிதிகள் அங்கம் வகிக்கவும் முடியும் என்ற நம்பிக்கையைத் தோற்றுவித்தது.

இத்துடன் முதல் ரஷ்யப் புரட்சியைத் தொடர்ந்து, பாரசீகத்திலும் (ஈரான்) துருக்கியிலும், சீனாவிலும் புரட்சிகள் நடந்தன. இந்தப் புரட்சிகளுக்கும் ரஷ்யப் புரட்சியே உத்வேகமூட்டும் சக்தியாக விளங்கியது. இந்தப் புரட்சிகளின் தன்மைகள் எதுவாக இருந்த போதிலும் இவையும் ஆசியக் கண்டத்தில் புதிய விழிப்பை ஏற்படுத்தின. இதற்கு ஆசியப் பெரு நாடுகளில் ஒன்றான இந்தியாவும் விதிவிலக்காக இருக்கவில்லை. இதன் விளைவாகத் தோன்றிய தீவிரத் தேசியவாத இயக்கத் தலைவர்கள், ரஷ்யாவை முன்மாதிரியாகக் கொள்ளுமாறு நாட்டு மக்களுக்கு அறைகூவல் விடுத்தனர். உதாரணமாக, தீவிரத் தேசியவாத இயக்கத்தின் தலைவரான திலகர், 1906 ஜூன் 6 அன்று கல்கத்தாவில் உரையாற்றிய போது, ''உறுதியான தீர்மானத்தின் பின்பலம் இல்லாவிட்டால், நமது விண்ணப்பங்கள் காது கொடுத்துக் கேட்கப்படும் என்று எதிர்பார்ப்பதே சாத்தியமல்ல. ஒன்றுபட்ட சக்தியின் பின்பலமில்லாவிட்டால், பிரார்த்தனைகளோ, முறையீடுகளோ, ஆட்சேபணைகளோ பலனளிக்காது. அயர்லாந்து, ஜப்பான், ரஷ்யா ஆகியவற்றின் உதாரணத்தைப் பாருங்கள்; அவற்றின் முறைகளைப் பின்பற்றுங்கள்!,, என்று மக்களுக்கு அறைகூவல் விடுத்தார். (Speeches of Bal Gangadhar Tilak p. 103)

1905 ஆம் ஆண்டின் முதல் ரஷ்யப் புரட்சி தீவிரத் தேசியவாத இயக்கத்துக்கு ஓர் உத்வேக சக்தியாக விளங்கியதைப் போலவே, ஆங்கிலேயரை எதிர்த்து ஆயுதம் தாங்கிப் போராட வேண்டும் என்ற உணர்வோடு, இந்தியாவில் தோன்றிய புரட்சி இயக்கத்துக்கும், ரகசியச் சங்கங்களின் தோற்றத்துக்கும் மேலும் உத்வேகமூட்டும் ஒரு சக்தியாகவும் அது விளங்கியது. சொல்லப் போனால்' சிப்பாய்க்

கலகம் என்று ஆங்கிலேயர் குறிப்பிட்ட 1857ஆம் ஆண்டின் முதல் இந்திய விடுதலைப் போருக்குப் பின்னுல், அந்தப் போரில் பங்கெடுத்துக் கொண்டிருந்த நபர்களில் சிலர், சன்னியாசிகளாக வேடந்தரித்து, நாடெங்கிலும் திரிந்து, மீண்டும் அத்தகைய கலகம் ஒன்றை உருவாக்க முயன்று வந்தனர் என்றும், 1902ம் ஆண்டில் பரோடா வில் சமஸ்தானக் கல்லூரியில் பேராசிரியராகப் பணியாற்றத் தொடங் கியிருந்த அரவிந்தர், இத்தகையோர் சிலரோடு தொடர்பு கொண் டிருந்தார் என்றும் திலகரின் வரலாற்றுசிரியர்களான பிரதானும் பகவத்தும் எழுதுகின்றனர். Lokamanya Tilak — A Biography G. P. Pradhan and A.K. Bhagvat. p. 95)

இங்கு ஒரு விஷயத்தைக் கூறியாக வேண்டும். தீவிரத் தேசிய வாதத் தலைவர்களாகவிருந்த திலகர், அரவிந்தர், லாலா லஜபதி ராய் முதலியோர், வங்கப் பிரிவினையைத் தொடர்ந்து, ஆங்கிலேயரை எதிர்த்துப் போராட, அன்னியப் பொருள் மறுப்பு (பகிஷ்காரம்), சுதேசி ஆதரவு முதலிய சாத்துவிகப் போராட்ட முறைகளைக் கைக் கொள்ளுமாறு மக்களுக்கு வேண்டுகோள் விடுத்த போதிலும், அவர்கள் அகிம்சாவாதிகளாக இருக்கவில்லை. சொல்லப் போனுல், இந்திய நாட்டில் தீவிரத் தேசியவாத இயக்கம் முடிவுற்று, வங்கப் பிரிவினைக்குச் சுமார் பத்தாண்டுகளுக்குப் பின்னர்' காந்தியடிகள் தென்னுப்பிரிக்காவிலிருந்து தாயகத்துக்குத் திரும்பி வந்து, இந்திய விடுதலைப் போராட்டத்தில் பங்கெடுத்த பின்னர் தான், அவரது தலைமையில் அகிம்சை வழி நின்ற போராட்டம் வலுப் பெற்றது எனலாம். அன்னியப் பொருள் பகிஷ்காரத்தைக் கையாளுமாறு மக்களுக்கு வேண்டுகோள் விடுத்து. திலகர் 1907 ஜனுவரி 2ஆம் தேதியன்று கல்கத்தாவில் உரையாற்றிய போது, "பகிஷ்காரம் என்பது யுத்தத்துக்கு ஒரு மாற்று மார்க்கமேயாகும். தென்னுப்பிரிக் காவில் போயர்கள் செய்தது போல் நாம் போருக்குச் செல்ல முடியாத காரணத்தால்' நாம் அடுத்துச் செய்யக் கூடிய சிறந்த காரியம், பிரிட்டிஷ் பொருள்களை வாங்க மறுப்பதுதான்,, என்றே பேசினுர். (மேற்கோள்: Lokamanya Tilak —— D.V.Tahmanker. p.107)

அவரே, "நான் ஒன்றும் ஆயுதம் தாங்கிய போராட்டத்துக்கு எதிரி எனக் கொள்ள வேண்டாம். ஆயுதம் தாங்கிய போராட்டமும் கூட, முற்றிலும் சட்டபூர்வமானது என்றே நான் கருதுகிறேன். என்றுலும் அத்தகைய போராட்டத்தை அறிவிப்பது சாத்தியம் அல்ல. அத்தகைய போராட்டத்தால் ஐம்பது சதவிதமேனும் வெற்றி

கிட்டும் என்று எவரேனும் எனக்கு உறுதியளித்தால், வெற்றிக்கான ஐம்பது சதவீத வாய்ப்பை நான் ஆண்டவனிடம் விட்டு விட்டு, ஓர் ஆயுதம் தாங்கிய போராட்டத்தை அறிவித்து விடுவேன்', என்று கூறினர் என்பதை வி.எஸ். ஜோஷி என்ற வரலாற்று ஆசிரியர் எடுத்துக் காட்டுகிருர் (Tilak and Revolutionaries கட்டுரை Modern Review ஜனுவரி1965).

எனவே, காந்தியடிகளைப் போல்' அகிம்சையை ஒரு தவிர்க்க முடியாத தர்மமாகவோ' தத்துவமாகவோ திலகர் பார்க்கவில்லை என்று கூறலாம். சொல்லப் போனால், ஆயுதந் தாங்கிய புரட்சி நடவடிக்கைகளைத் திலகர் நேரடியாக ஆதரிக்காவிட்டாலும், அவற்றுக்கு அவரது தார்மிக ஆதரவு இருந்தது என்று கொள்ள நிறையவே இடமுண்டு. ஐ.சி.எஸ். அதிகாரியான சாரு சந்திர தத்தா என்ற வரலாற்ருசிரியர், 1925ல் 'மராட்டா' (Mahratta) பத்திரிகையில் எழுதிய கட்டுரையொன்றில்' ,'இந்த நூற்ருண்டின் ஆரம்ப ஆண்டுகளில், வங்கப் பிரிவினைக்கு முன்னல், இந்தியாவில் புரட்சி நடவடிக்கைகளை ஒருங்கிணைக்கவும், அவற்றுக்கு யோசனை கூறவும்' ஒரு மத்தியக் கவுன்சில் இருந்ததாகத் தோன்றுகிறது. காலஞ்சென்ற லாலா லஜபதி ராய், ஸ்ரீ அரவிந்தர் ஆகியோரைக் கொண்ட இந்தக் கவுன்சிலில் திலகரும் அதன் தலையாய உறுப்பினர் களில் ஒருவராக இருந்தார் எனத் தோன்றுகிறது'' என்றே எழுதியுள்ளார்.

தீவிரத் தேசியவாத இயக்கத்தின் மற்றொரு தலைவரான லாலா லஜபதி ராய், 1905ஆம் ஆண்டு மத்தியில்' இங்கிலாந்தில் பொதுத் தேர்தல் நடக்கவிருந்த தருணத்தில், ஆங்கிலேய வேட்பாளர்களிடமும் வாக்காளர்களிடமும் காங்கிரசின் லட்சியத்தை எடுத்துக் கூறுவதற்காக இங்கிலாந்துக்குச் சென்ருர். ஆனல் இந்த இங்கிலாந்து விஜயம் அவருக்கு விரக்தியையே அளித்தது. இந்தியாவுக்கு நன்மை விளைய வேண்டுமென்ருல்' அன்னிய அரசாங்கம் அகற்றப்பட வேண்டும் என்ற திடமான உணர்வு அப்போதுதான் அவருக்கு ஏற்பட்டது. இதன் பின்னரே அவர் தீவிரத் தேசியவாதத் தலைவர்களில் ஒருவராக மாறினர். எனவே அவர் இந்தியாவுக்குத் திரும்பி வந்த பின் ஆற்றிய உரையொன்றில், இந்திய நாட்டு இளைஞர்களுக்கு இவ்வாறு அறைகூவல் விடுத்தார்: ''சுதந்திரத்துக்கான நமது போராட்டத்தை இந்தியாவில்தான் நடத்தியாக வேண்டும். இளைஞர்களே! உங்கள் ரத்தம் சூடேறியிருக்கிறது. நாடென்னும் மரம் ரத்தத்தைக் கோரு

கிறது. அதற்கு ரத்தம்தான் தண்ணீர். உலக வரலாறு ரத்தத்தினுல் தான் எழுதப்பட்டிருக்கிறது. நாம் உயிர்த் தியாகத்தின் மூலம் நமது தேசிய இயக்கத்துக்கு மகுடம் சூட்டுவோம்.” (மேற்கோள்: Lala Lajpat Rai — Man and His Ideas—Purushottam Nagar P. 22)

இந்த அறைகூவலின் பொருள் என்ன என்பது சொல்லாமலே விளங்கும். இதனுல்தான் 1907ல் ராவல்பிண்டியில் நடந்த கலகங் களைத் தொடர்ந்து, மே மாதம் 9ஆம்தேதி, லஜபதி ராயை ஆங்கிலேய அரசாங்கம் நாடு கடத்திய போது, அதற்கான காரணங்களாக அது சுட்டிக் காட்டியவற்றில் லஜபதி ராயின் இந்தப் பேச்சையும் ஒரு காரணமாகக் கூறியிருந்தது.

அரவிந்தரைப் பொறுத்த வரையில், அவரே பாண்டிச்சேரியில் தமது சீடர்களிடம் தமது பூர்வாசிரம வாழ்க்கையைப் பற்றிக் கூறிய போது, ‘‘அவர் தமது பொது நடவடிக்கையில், ஒத்துழையாமை யையும் சாத்விக எதிர்ப்பையும் சுதந்திரத்துக்கான போராட்டத்துக்கு ஒரு சாதனமாக மேற்கொண்டார். எனினும் ஒரே சாதனமாக அல்ல. அவர் வங்காளத்தில் இருந்த போது, சாத்விக எதிர்ப்பானது நோக்கத்தைப் பூர்த்தி செய்யப் போதுமானதல்ல என்று நிரூபிக்கப் படும் பட்சத்தில், பகிரங்கமான கலகத்துக்கு ஒரு தயாரிப்பாக, ரகசியப் புரட்சி நடவடிக்கையையும் மேற்கொண்டு வந்தார்’’ என்று கூறினுர். என்று தெரிய வருகிறது. (Sri Aurobindo On Himself and on the Mother— தொகுதி. 16. பக். 34). உண்மையில், அரவிந்தர் 1902ஆம் ஆண்டில் பரோடாவில் கல்லூரிப் பேராசிரிய ராகப் பணியாற்றி வந்த காலத்திலேயே, புரட்சித் திட்டங்களில் ஈடுபாடு கொண்டிருந்தார். அரவிந்தரோடு பாண்டிச்சேரியில் ஆசிரம வாசியாகவிருந்த தமிழ் எழுத்தாளர் ப. கோதாண்டராமன் தாம் எழுதிய அரவிந்தர் வரலாற்று நூலில், ‘‘இந்தியா ஓர் உபகண்டம். அதைக் காக்க இருந்த பிரிட்டிஷ் படைகளோ மிகச் சொற்பம். அயலவர் ஆட்சியை எதிர்த்து விடுதலைப் போர் மூளுமாயின், அதில் மக்கள் எதிர்ப்பையும் எழுச்சியையும் பக்கபலமாகக் கொண்ட கொரில்லா யுத்தத்துக்கு வாய்ப்பிருந்தது, இந்தியச் சேனையில் புரட்சிக் கருத்துக்களைப் பரப்பி, ராணுவத்தை மக்கள் பக்கம் திருப்ப லாம். ஸ்ரீ அரவிந்தர் இந்தச் சாத்தியக் கூறுகளையெல்லாம் உணர்ந் திருந்தார். அவரைப் போன்று மற்றும் சிலரும் இதே கருத்துக் கொண்டிருந்தனர். சென்ற நூற்ருண்டின் இறுதி வருஷங்களில்,

நாட்டின் பல்வேறு பகுதிகளில் புரட்சி வேலைக்கான ரகசியச் சங்கங்கள் தோன்றின. புரட்சிக் கருத்துக்களைப் பரப்பி, மக்களைத் தயார் செய்வதும், ஆயுதப் படைகளின் மூலமாகக் கலக எழுச்சி செய்வதுமே அவற்றின் நோக்கம். மகாராஷ்டிரப் பிரதேசத்தில் புரட்சிக் கருத்து பரவியிருந்தது. உதயபுரிச் சமஸ்தானத்துச் சீமானாக தாகுர்சாகேப், புரட்சிக்காரரின் ஆலோசனை சபையின் துணை கொண்டு, மகாராஷ்டிரத்திலும் மராத்திய சமஸ்தானங்களிலும் ரகசியப் புரட்சிச் சங்கங்களை நிறுவியிருந்தார்.

அரவிந்தரும் இப் புரட்சிக்காரர்களின் மந்திராலோசனை சபையில் ஓர் அங்கத்தினராகச் சேர்ந்து. ரகசியச் சபதம் எடுத்துக் கொண்டார். தாகுர்சாகேப் 1896ல் புனாவில் அமைத்த ரகசியச் சங்கத்துக்கு ஸ்ரீ அரவிந்தரே தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்'' என்று எழுதியுள்ளார் (ஸ்ரீ அரவிந்தர் வாழ்க்கை வரலாறு—ப. கோதண்டராமன், பாகம். 1 பக். 79–80) இவ்வாறு அரவிந்தர் பரோடாவிலிருந்த காலத்திலேயே புரட்சி நோக்கங்களில் ஈடுபட்டிருந்ததால், அவர் தமது தாயகமான வங்காளத்திலும் இத்தகைய ரகசிய சங்கங்களை வலுப்படுத்தவும் வளர்க்கவும் விரும்பினார். இதனால் அவர் 1902ஆம் ஆண்டில் பரோடா ராணுவத்தில் போர் வீரராக இருந்து வந்த ஜதீந்திரநாத் பானர்ஜி என்ற வங்க இளைஞரைக் கல்கத்தாவுக்கு அனுப்பி வைத்தார். இதே போல் அரவிந்தர் தம்முடன் வந்து தங்கியிருந்த தமது தம்பி பரீந்திர கோஷையும் புரட்சி இயக்கத்தில் ஈடுபடுத்தி. அவரையும் வங்கத்தில் புரட்சி இயக்கத்தைக் கட்டி வளர்ப்பதற்காக வங்கத்துக்கு அனுப்பிவைத்தார். இதன்பின் அவர் பரோடா வேலையை விட்டு விட்டு, தமது தாயகமான வங்கத்துக்குத் தாமும் திரும்பி வந்து, 1905ஆம் ஆண்டில் எழுச்சி பெற்ற தீவிரத் தேசியவாத இயக்கத் தலைவர்களில் ஒருவராக மாறி, அரசியலில் தீவிரமாக ஈடுபட்ட காலத்தில், அவர் வங்கத்தில் இருந்த புரட்சி நோக்கங் கொண்ட ரகசியச் சங்கங்களுக்கு உத்வேகமூட்டும் சக்தியாகவும், பின்பலமாகவும் விளங்கி வந்தார்.

## தீவிரத் தேசியவாத இயக்க காலத்தில் பாரதி

இந்தச் சரித்திர உண்மைகளின் ஒளியில்தான் நாம் பாரதியையும் புரிந்து கொள்ள வேண்டும். 1905ஆம் ஆண்டில் எழுச்சி பெற்ற தீவிரத் தேசியவாத இயக்கத்தில் தானும் பங்கெடுத்து, திலகர், அரவிந்தர், லஜபதிராய் முதலியவர்களைத் தனது தலைவர்களாக

ஏற்றுக் கொண்டு, தேசிய கவியாகவும் பத்திரிகையாளனுகவும் மலர்ச்சி பெற்ற பாரதி, பாரதியின் வரலாற்ருசிரியர்கள் பலரும் கூற முற்படுவது போல், ஆரம்பம் முதலே அகிம்சாவாதியாக இருந்து விடவில்லை. பாரதியின் பரிணும வளர்ச்சியை நாம் அவனது படைப் புக்கள் எந்தெந்தக் காலத்தில் எழுதப்பட்டன என்பதைக் கருத்தில் கொண்டுதான் இனம் கண்டறிய முடியும்.

பெருங்கொலை வழியாம் போர்வழி இகழ்ந்தாய் ;
அதனிலும் திறன் பெரிதுடைத் தாம்
அருங்கலை வாணர் மெய்த் தொண்டர் தங்கள்
அறவழி யென்றுநீ அறிந்தாய் ;
நெருங்கிய பயன்சேர் 'ஒத்துழையாமை'
நெறியினுல் இந்தியா விற்கு
வருங்கதி கண்டு பகைத் தொழில் மறந்து
வையகம் வாழ்க நல்லறத்தே

என்று பாரதி தனது மகாத்மா காந்தி பஞ்சகம் என்ற பாடலில் (பாடல்-5) பாடியுள்ளான் என்பது உண்மை. ஆயினும் 1919 ஏப்ரல் தொடக்கத்தில் காந்தியடிகள் ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்குவதற்கு முன்னுல், மார்ச் மாதத்தில் சென்னைக்கு வந்து சென்ற பின், பாரதியின் நண்பரான காஞ்சிபுரம் கிருஷ்ணசாமிசர்மா, 'மகாத்மாகாந்தி' என்ற தலைப்பில் எழுதிய வாழ்க்கை வரலாற்று நூலுக்கு, பாரதி பாயிரம் போல் எழுதிக் கொடுத்த பாடலே மகாத்மா காந்தி பஞ்சகம் ஆகும். (தகவல்: Krishnaswamy Sarma- R.A. Padmanabhan – Indian Review - Nov. 1974) இதே போல் பாரதி தான் எழுதிய ''பாரதமாதா நவரத்னமாலை'' என்ற பாட லிலும், ரவிந்திரநாத தாகூர் காந்தியடிகளை 'மகாத்மா' என்று குறிப்பிட்டதை

கவிந்திர னுகிய ரவிந்திர நாதன்
சொற்றது கேளீர்! ''புவி மிசை யின்று
மனிதர்க் கெல்லாம் தலைப்படு மனிதன்,
தர்மமே உருவாம் மோஹன தாஸை
கர்ம சந்திர காந்தி'' என்றுரைத்தான்.

(பாடல் 4. வரிகள் 15—19)

என்று பாடியுள்ளதோடு, இதே பாடலின் பின்வரும் வரிகளிலும், ஏழாவது பாடலிலும், காந்தியடிகளின் அறப்போரையும் அறவழியையும் வாழ்த்திப் பாடியிருக்கிறுன். ரவிந்திரநாத தாகூர் காந்தியடிகளை 'மகாத்மா' எனக் குறிப்பிட்டது 1919 ஏப்ரல் 12 அன்று காந்தியடிகளுக்குத் தாம் எழுதிய கடிதத்தில்தான். இதன் பின்னரே காந்தியடிகளை 'மகாத்மா' என்று எல்லோரும் அழைப்பது பெரு வழக்காயிற்று. எனவே இந்தப் பாடலும் 1919ஆம் ஆண்டிலேயே எழுதப்பட்டது என்பதும் தெளிவு.

ஆனல், 1905ஆம் ஆண்டு தொடங்கிய தீவிரத் தேசியவாத இயக்கம் 1911-ஆம் ஆண்டுவாக்கில் பல காரணிகளால் முடிந்து போய் விட்டது. இந்த இயக்கத்தில் தானும் முழு மூச்சாக ஈடுபட்டிருந்த 1905-ஆம் ஆண்டு முதல் 1911-ஆம் ஆண்டு வரையிலான காலகட்டத்தில், பாரதி ஒன்றும் அகிம்சா வாதியாக இருக்கவில்லை. பாரதி சென்னையிலிருந்து 'இந்தியா' பத்திரிகையை வெளியிட்டு வந்த காலத்தில், 1906 நவம்பர் 17 இதழில் தொடங்கி, டிசம்பர் 8-ஆம் தேதி வரை வெளி வந்த இதழ் வரை நான்கு இதழ்களில், அவன் ''சிவாஜி தனது சைனியத்துக்குக் கூறியது'' என்ற தலைப்பில் நாடகத் தனியுரை பாணியில் ஒரு நீண்ட கவிதையை எழுதி வெளியிட்டான். இந்தப் பாடல் இப்போதைய பதிப்புக்களில் 'சத்ரபதி சிவாஜி'' என்ற தலைப்பில் இடம்பெற்றுள்ளது. இந்தப் பாடலில் சிவாஜி தனது போர் வீரர்களை நோக்கி,

> தாய்த்திரு நாட்டைத் தகர்த்திடு மிலேச்சரை
> மாய்த்திட விரும்பான் வாழ்வுமோர் வாழ்வுகொல்!
>
> (வரிகள் 65—66)

> தேவிதாள் பணியும் தீரர் இங்கிருமின்!
> பாவியர் குருதியைப் பருகுவார் இருமின்!...
> ஈட்டியால் சிரங்களை வீட்டிட எழுமின்!
> நீட்டிய வேல்களை நேரிருந்து எறிமின்!
> வாளுடை முனையிலும், வயந்திகழ் சூலினும்
> உருளையின் இடையிலும், மாற்றலர் தலைகள்
> உருளையிற் கண்டுநெஞ்சு உவப்புற வம்மின்!

வரிகள் 101—102;
117—122

ஆட்டினைக் கொன்று வேள்விகள் இயற்றி
வீட்டினைப் பெறுவான் விரும்புவார்; சிலரே!
நெஞ்சக் குருதியை நிலத்திடை வடித்து
வஞ்சக மழிக்கும் மாமகம் புரிவம் யாம்!

(வரிகள் 131—134)

என்று கூறுவதாகப் பாடியுள்ளான். உண்மையில் சிவாஜி தன் சேனைக்கு ஆற்றிய உரை என்பதற்கு எந்தச் சரித்திர ஆதாரமும் கிடையாது. பாரதியே தன் கவிதைக்கான குறிப்பில், "சிவாஜி மகாராஜன் தமது படைகளை நோக்கிக் கூறியதாகக் கற்பனை புரிந்து" எழுதப்பட்ட பாடலே இது என்றே குறிப்பிட்டிருக்கிறான். எனவே, சிவாஜி மன்னனின் வாய்மொழி என்ற பெயரில் அன்று நம்மை ஆண்டு வந்த ஆங்கிலேயருக்கு எதிராக, வன்முறை உணர்ச்சியை மறைமுகமாகத் தூண்டுவதற்காக எழுதப்பட்ட பாடலே இது என்பது தெளிவு.

இதே போல், பாரதி பாண்டிச்சேரிக்குக் குடிபெயர்ந்து அங்கிருந்து 'இந்தியா' பத்திரிகையை வெளியிட்டு வந்த காலத்தில், 1909 தொடக்கத்தில் எழுதிய 'குரு கோவிந்தஸிம்ஹ விஜயம்' என்ற பாடலிலும், குரு கோவிந்தரின் வாய்மொழியாக, அவர் தாய்நாட்டுக்காக உயிர் கொடுக்கத் துணியும் வீரர்களைக் கோரி, இவ்வாறு கூறுவதாகப் பாடியுள்ளான்:

தருமத் தெய்வந் தான் பலகுருதி
பலவிழை கின்றதால், பக்தர்காள்! நும்மிடை
நெஞ்சினைக் கிழித்து நிலமிசை உதிரம்
வீழ்த்தித் தேவியின் விடாயினைத் தவிர்ப்ப
யார் வருகின்றீர்?

(வரிகள் 44—48)

அறத்தினைத் தமதுஓர் அறிவினுல் கொண்ட
மட்டிலே மானிடர் மாண்பெற லாகார்.
அறமது தழைப்ப, நெஞ்சகம் காட்டி
வாள்குத்து ஏற்று மாய்பவர் பெரியோர்;
அவரே மெய்ம்மையோர்; முத்தரும் அவரே!

(வரிகள் 78—82)

இவ்வாறு குரு கோவிந்தர் வாய்மொழியெனக் கூறி, இந்தப் பாடலிலும் பாரதி பாரத நாட்டு இளைஞர்களை நாட்டு விடுதலைக்கான போரில் ரத்தம் சிந்தவும் உயிர்த்தியாகம் செய்யவும், ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடவும் வருமாறு அறைகூவலே விடுத்திருக்கிறான் என்பது தெளிவு.

மேலும், இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தீவிர தேசியவாத இயக்கத்தைச் சேர்ந்தவர்களும் புரட்சி நடவடிக்கைக்கான ரகசியச் சங்கங்களைச் சேர்ந்தவர்களும், சிவாஜி, குரு கோவிந்தர் போன்ற இந்திய நாட்டு வீரர்களை மட்டுமல்லாது, வெளிநாடுகளைச் சேர்ந்த விடுதலை வீரர்களையும் புரட்சி இயக்கங்களையும் தமக்கு முன்மாதிரியாகவும் உத்வேகமூட்டும் சக்திகளாகவும் கொண்டனர். எனவேதான் 1909ல் வெளிவந்த 'ஜன்மபூமி' என்ற கவிதைத் தொகுப்பில் இடம் பெற்ற 'சுதந்திர தேவியின் துதி, என்ற பாடலில்,

மேற்றிசைப் பலநாட்டினர் வீரத்தால்
போற்றி நின்னைப் புதுநிலை எய்தினர்
கூற்றினுக் குயிர்கோடி கொடுத்தும்நின்
பேற்றினைப் பெறுவோம் எனல் பேணினர்
(பாடல் 7)

என்று பாரதி பாடியுள்ளான். 1905 ஆம் ஆண்டின் ரஷ்யப் புரட்சியினால் இந்தியத் தேசிய இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் உத்வேகமும் வீறும் பெற்று எழுந்ததை முன்னர்க் குறிப்பிட்டோம். அதே போல் அயர்லாந்தில் நடந்து வந்த சீன்பீன் இயக்கம், மற்றும் இத்தாலியில் சென்ற நூற்றாண்டின் மத்தியில் ஆஸ்திரியாவின் ஆதிக்கத்திலிருந்து இத்தாலியை விடுவிக்க, ஜோசப்மாஜினி (1805-1872) நடத்திய ஆயுதந் தாங்கிய போராட்டம் ஆகியவையும் அவர்களுக்கு உத்வேகமூட்டும் ஆதர்ச சக்தியாக விளங்கின. குறிப்பாக, இத்தாலியில் ரகசியச் சங்கங்கள் அமைத்து, ஆதிக்கச் சக்திகளுக்கு எதிராகக் கொரில்லாப் போர் நடத்திய மாஜினி, கரிபால்டி (1805-1872) ஆகியோர் இந்தியப் புரட்சியாளர்களுக்கு வழிகாட்டும் சக்திகளாக விளங்கினர். மாஜினி இத்தாலியின் விடுதலைப் போருக்காக (Young Italy") "யௌவன இத்தாலி" என்ற ரகசியச் சங்கத்தை நிறுவியிருந்தான். "Young Italy" என்ற இந்தப் பெயரைக் கருத்தில் கொண்டுதான் தீவிரத் தேசியவாத இயக்கத்தின் தலைவர்களில் ஒருவரான லாலா லஜபதி ராய் "Young India" என்ற தலைப்பில்

ஒரு நூலையே எழுதினர்; இந்த நூல் இந்தியாவில் சிறிது காலம் தடையும் செய்யப்பட்டிருந்தது. பாரதியும் சென்னையிலிருந்து பாண்டிச்சேரிக்குச் செல்லுமுன் தான் ஆசிரியராகவிருந்த ஆங்கிலப் பத்திரிகைக்கு ''பால பாரதா'' Bala Bharata) என்றே பெயரிட்டிருந்தான் என்பதும், பாரதி சென்னையில் இருந்த காலத்தில் அவன் தொடங்கிய அல்லது பங்கெடுத்த முதல் சங்கமும் ''பால பாரத சங்கம்'' என்றே பெயர் பெற்றிருந்தது என்பதும் 'வருகின்ற பாரத'த்தை வாழ்த்திப் பாடிய பாடல் ஒன்றில், இதனைக் கருத்தில் கொண்டு,

இளைய பாரதத்தினாய். வா வா வா
(போகின்ற பாரதமும், வருகின்ற பாரதமும்.
பாடல் 7, வரி 1)

என்றே பாடியுள்ளான் என்பதும் நினைவில் கொள்ளத் தக்கதாகும்.

இதற்கும் மேலாக, மாஜினியின் "Young Italy" என்ற ரகசியச் சங்கத்தில் சேர விரும்புவோர் எடுத்துக்கொள்ள வேண்டிய சத்தியப் பிரமாணமாக, 1831ல் மாஜினி எழுதித் தயாரித்த ரகசியப் பிரமாணத்தையும், பாரதி தமிழில் பாடலாக மொழி பெயர்த்து வெளியிட்டான். தற்போதைய பதிப்புக்களில் 'மாஜினி சபதம்' என்ற தலைப்பில் காணப்படும் பாடல், 1908 ஜனவரியில் பாரதியே வெளியிட்ட 'சுதேச கீதங்கள்' என்ற தொகுதியில் ''மாஜினி என்ற இத்தாலி தேசத்து தேசாபிமானி தம்மால் ஸ்தாபிக்கப்பட்ட யௌவன இத்தாலி என்ற சங்கத்திலே செய்து கொண்ட பிரதிக்கினை'' என்ற நீளமான தலைப்பிலேயே இடம் பெற்றுள்ளது. 1911ல் ஆஷ்துரை சுட்டுக் கொல்லப்பட்ட காலத்தில், இந்த நிகழ்ச்சிக்குப் பின் பலமாகவிருந்த ரகசியச் சங்கத்தைச் சேர்ந்தவர்களின் வீடுகளைப் போலீசார் சோதனையிட்ட காலத்தில் கைப்பற்றப்பட்ட ''அபிநவ பாரத சமாஜத்தில் சேர்ந்து கொள்''வதற்கான பிரமாணம் என்ற அச்சுப் பிரதியில், அந்தப் பிரமாணம் மாஜினியின் சத்தியப் பிரமாணத்தை அப்படியே அடியொற்றி எழுதப்பட்டிருந்தது என்பதும் நினைவுகூர வேண்டிய ஒன்றாகும். (ஆஷ் கொலை வழக்கு எக்ஸிபிட் எண். Ext. T. 10)

உண்மையில், தமிழ்நாட்டிலும் இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலேயே வங்காளத்திலும் மகராஷ்டிரத்திலும் இருந்ததைப் போன்ற ரகசியச் சங்கங்களைத் தோற்றுவிக்கும் முயற்சிகள் தொடங்

கின என்று கொள்ளவும் இடமுண்டு. அரவிந்தர் தமது தம்பியரின பரீந்திரரை வங்காளத்துக்கு அனுப்பி, ரகசியச் சங்கங்களை அமைக்கத் தூண்டினார் என்று முன்னர்க் கூறினோம். பரீந்திரரும் அவரது நண்பர்களும் வங்கத்தில் மட்டுமல்லாமல், இந்தியாவின் பிற மாநிலங்களிலும் அத்தகைய ரகசியச் சங்கங்களை அமைக்க முனைந்தனர் என்றும் தெரிய வருகிறது. புகழ்பெற்ற வரலாற்று ஆசிரியரான ஆர்.சி. மஜூம்தார், ''முதலில் பரீந்திரரும், அவரது சகாக்களும் பொதுமக்களிடம் தமது கருத்துக்களையும் லட்சியங்களையும் பிரசாரம் செய்வதிலேயே தமது பிரதானக் கவனத்தைச் செலுத்தினர். அவர்கள் இந்த நோக்கத்துக்காகத் தமது உறுப்பினர்களை, பீகார், ஒரிசா போன்ற வங்காளத்துக்கு வெளியேயுள்ள மாகாணங்களுக்கும், தெற்கே சென்னை போன்ற தொலைதூர இடங்களுக்கும் அனுப்பினர்'' என்று எழுதுகிறார், (History of Freedom Movement in India. p. 2 p. 269)

மேலும், 1908 மே மாதம் 'இந்தியா' பத்திரிகையில் வெளிவந்த கட்டுரைகளுக்காக, 'இந்தியா' பத்திரிகைக்கு எதிராக ராஜத்துரோக வழக்குத் தொடுக்கப்பட்ட தருணத்தில், போலீசார் சென்னையிலிருந்த மாணவர் விடுதிகள் பலவற்றையும் சோதனையிட்டனர். அப்போது 1908 ''முற்பகுதியில் ரஷ்யர்களது ரகசிய ஸ்தாபனம் பற்றி விவரிக்கும் ஒரு பிரசுரத்தின் பிரதிகள், சென்னை பப்ளிக் ஒர்க்ஸ் இஞ்சினியரிங் ஒர்க்ஷாப்பில் பயின்று வந்த மாணவர்கள் வசம் இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது'' என்று ரௌலட் அறிக்கை கூறுகிறது. (Rowlatt Report p. 163).

எனவே, பாரதியின் படைப்புக்களை நாம் ஆராயும் போது இந்தப் பின்னணியை யெல்லாம் கருத்தில் கொண்டே ஆராய வேண்டும். அவ்வாறு ஆராயும் போது, தீவிரத் தேசியவாத இயக்க காலமான 1905—1911 ஆண்டுக் காலத்தில் பாரதி எழுதிய எழுத்துக்கள், அவன் ஒன்றும் அகிம்சாவாதியாக இருக்கவில்லை என்பதையே தெளிவுபடுத்துகின்றன. இந்தச் சொற்பொழிவின் கருப் பொருளாக நான் எடுத்துக் கொண்டுள்ள 'பாரதியின் 'ஆறில் ஒரு பங்கு, என்ற கதையும், ''கனவு'' என்ற சுயசரிதைக் கவிதை நூலும் இந்தக் காலத்திலேயே படைக்கப்பட்டவை. எனவே அவை பற்றிய உண்மையையும் நாம் இந்தப் பின்னணியிலேயே ஆராய வேண்டும்.

## ரகசியச் சங்கங்களும் பிரமச்சரியமும்

இந்தப் பின்னணியில் நாம் பாரதியின் இவ்விரு படைப்புக்களையும் ஆராய முற்படும்போது, ஆயுதந்தாங்கிய விடுதலைப்போராட்டத்துக்குத் தயாராவதற்காக இந்தியாவில் அமைக்கப்பட்ட ரகசியச் சங்கங்கள் பற்றிய ஓர் உண்மையைக் கருத்தில் கொள்ள வேண்டும். அரவிந்தரின் தம்பி பரீந்திரருடன் சேர்ந்து, வங்காளத்தில் ஆயுதப் புரட்சிக்கான ரகசியச் சங்கங்களை அமைத்து வந்த மற்றோர் இளைஞர், சுவாமி விவேகானந்தரின் தம்பியான பூபேந்திர நாதர் ஆவார். இவரை ஆசிரியராகக் கொண்டு, வங்காளத்தில் புரட்சிவாதிகளுக்காக நடத்தப்பட்டு வந்த ''யுகாந்தர்'' என்ற பத்திரிகை, 'புரட்சி' என்ற தலைப்பில் வெளியிட்ட ஒரு கட்டுரையில் ரகசியச் சங்கங்களின் அவசியம் பற்றிப் பின்வருமாறு எழுதியது: ''துப்பாக்கிகளும் பயனட்டுகளும் இருப்பதன் காரணமாக, சுதந்திரத்தைப் பற்றிப் பகிரங்கமாகப் பேசுவது அசாத்தியமாகும். எனவேதான் ரகசியச் சங்கங்கள் தேவைப்படுகின்றன. சுதந்திரத்தைப் பற்றி ஒருவர் பகிரங்கமாகப் பேச வேண்டுமென்றால், அவர் அதனைச் சுற்றி வளைத்துத்தான் பேசியாக வேண்டும். இந்தக் காரணத்துக்காகத்தான் மாய்மாலப் பேச்சு எதுவும் இல்லாமல், 'எது உண்மை?' என்று மக்கள் மனம் விட்டுப் பேசுவதற்கு ஓர் ரகசிய இடம் தேவைப்படுகிறது. அது கொடுங்கோலன் பார்க்க முடியாத இடமாக இருக்க வேண்டும். ரஷ்யப் புரட்சிவாதிகள் தாம் இன்னது செய்ய வேண்டும் என்பதை விவாதிப்பதற்காக, ரகசியமான இடங்களில் நள்ளிரவில் சந்திப்பது வழக்கம். அவர்கள் இப்போதும் அவ்வாறே செய்து வருகின்றனர். பங்கிம் பாபுவும் தமது 'ஆனந்த மட'த்தில் வருணித்துள்ளதும் இத்தகைய விஷயம்தான். சன்னியாசிகள் நள்ளிரவில் அடர்த்தியான காட்டில் விடுதலைக்காக ஆயுதங்களைச் சேகரித்து வந்தனர்'' (மேற்கோள் : Political Trouble—J. C. Kerr. P. 56-57).

உண்மையில், வங்க இலக்கியத்தில் தேசியத் தீர்க்கதரிசி எனப் போற்றப்பட்ட பங்கிம் சந்திர சாட்டர்ஜி எழுதிய 'ஆனந்த மடம்' என்ற நாவலில், இடம் பெற்றிருந்த 'வந்தே மாதரம்' என்ற பாடலே, வங்கப் பிரிவினை பற்றிய அறிவிப்புக்குப் பின், தேசியவாதிகளின் கீதமாகவும், 'வந்தே மாதரம்' என்பதே அவர்களது கோஷமாகவும் மாறியது. பங்கிம் சந்திரர் 1773-ல் வங்காளத்தில் நவாபுகளின் ஆட்சியையும் கிழக்கிந்தியக் கம்பெனியின் சுரண்டலையும் எதிர்த்து,

இந்து சன்னியாசிகள் நடத்திய கலகத்தை அடிப்படையாகக் கொண்டே 'ஆனந்த மடம்' என்ற நாவலை எழுதியிருந்தார். இந்த 'ஆனந்த மடம்' என்ற நாவலில் வருணிக்கப்பட்டுள்ள ரகசியச் சங்கமும், வங்காளத்தில் ரகசியச் சங்கங்களை அமைத்த இளைஞர்களுக்கு ஒரு முன்மாதிரியாக விளங்கியது. மேலும், இந்த நாவலின் கதாபாத்திர மான பவானந்தரே, வங்கத்தில் புரட்சி இயக்கத்தில் ஈடுபட்டிருந்த இளைஞர்களுக்கு லட்சிய புருஷரானார். அதாவது நாட்டு விடுதலைக் காக, சொந்தச் சுகதுக்கங்களையும் வீடு வாசலையும் மறந்தும் துறந்தும், சன்னியாச விரதம் பூண்டவர்களே, ரகசியச் சங்கங்களில் அங்கம் வகிக்கத் தகுதியானவர்கள் என்பதே அந்நாவலின் கருத்தாக இருந்தது.

'ஆனந்த மடம்' நாவலில் விடுதலைக்காகப் போராடிய வீரசன்னி யாசிகள் அமைத்த ரகசியச் சங்கத்தின் பாணியைப் பின்பற்றி, 1905-ல் அரவிந்தர் 'பவானி மந்திர்' (பவானி கோவில்) என்ற பெயரில் ஓர் ரகசியத் திட்டத்தைத் தீட்டினார். இந்த நூலைப் பற்றிப் பிரபல வர லாற்றாசிரியர் ஆர். சி. மஜும்தார் இவ்வாறு எழுதுகிறார்: "'புரட்சி வேதத்தை உபதேசிக்க, புத்தகங்களையும், சஞ்சிகைகளையும் வெளி யிடுவதே பிரதானப் பிரசாரச் சாதனமாக விளங்கியது. இவற்றில் 1905-ல் வெளியிடப்பட்ட 'பவானி மந்திர்' என்ற முதல் புத்தகம், புரட்சி நடவடிக்கைகளுக்கான அடிப்படை அல்லது கேந்திரமாக, ஒரு சமய ஸ்தாபனத்தை அதாவது மனித நடமாட்டமற்ற தொலை தூரத்தில், அமைதியான சூழலில் அமைந்த ஓர் ஒதுங்கிய கானகத்தில் பவானி தெய்வத்துக்கு ஒரு கோயிலை நிறுவும் திட்டத்தை விரித்துக் கூறியது. இது அரசியல் பக்தர்களின் ஒரு புதிய சங்கத்தின் கேந் திரமாக விளங்க வேண்டும். இதில் சேர்பவர்கள் சன்னியாசிகளாகவும் இருக்கலாம்; அல்லது சன்னியாசிகளாக மாறாதவர்களாகவும் இருக் கலாம்; ஆயினும் அவர்கள் பிரம்மசரிய வாழ்க்கையையே நடத்தியாக வேண்டும்; அவர்கள் தமது குறிக்கோள் நிறைவேறிய பின்னால் மட்டுமே, இல்லற வாழ்க்கைக்குத் திரும்ப வேண்டும். அவர்களது குறிக்கோள் அன்னியராட்சியிலிருந்து விடுபடுவதுதான்... இந்தியாவில் புரட்சிக்கான மார்க்கத்தைத் தயார் செய்யக் கூடிய ஒரு வீரர்கள் படையைக் கொண்ட ஸ்தாபனத்தை அமைப்பதே இந்நூலின் மையக் கருத்தாக விளங்கியது". (History of the Freedom Movement in India–R. C. Mazumdar தொகுதி 2. பக். 269-270). இந்தத் திட்

டத்தை அனுசரித்தே வங்கத்தில் புரட்சிச் சங்கங்கள் பலவும் செயல் பட்டன.

ரௌலட் சட்டம் இந்தத் திட்டத்தைப் பற்றிக் கூற வரும்போது, ''வங்காளத்தைச் சேர்ந்த புரட்சிச் சங்கங்கள் 'பவானி மந்திர்' திட்டத்தில் கூறப்பட்டிருந்த கோட்பாடுகளிலும், விதி முறைகளிலும், புரட்சிகர வன்முறை பற்றிய ரஷ்யக் கருத்துக்களையும் புகுத்தின. பவானி மந்திர் திட்டத்தில், சமய அம்சம் பற்றியே பெரிதும் கூறப் பட்டிருப்பினும், அதில் ரஷ்ய விதிகளே பெரிதும் இடம் பெற் றிருந்தன'' என்று கூறியது (Rowlatt Report பக். 101). எனவே ஆயுதந் தாங்கிய புரட்சிக்குத் தயாராகும் ரகசியச் சங்கங்களில் அங்கம் வகிப்பவர்கள், பிரம்மசரிய விரதத்தை ஏற்றவர்களாக இருக்க வேண்டும் என்று அரவிந்தர் கருதினர் என்பது தெளிவு. என்றாலும், அவர்கள் திருமணமாகாத பிரம்மசாரிகளாக இருக்க வேண்டும் என்று அவசியமில்லை, திருமணம் ஆனவர்களும் நாட்டு விடுதலையைப் போராடிப் பெறும் காலம் வரையிலும் பிரம்மசரிய விரதத்தைக் கடைப் பிடித்தால் போதும், அதே போல், திருமணம் ஆகாத இளைஞர்களும், நாடு விடுதலை பெறும் வரையில் பிரம்மசாரிகளாக இருந்து வந்தால் போதும் என்பதே அவரது கருத்தாகவிருந்தது என்பதும் இதிலிருந்து தெளிவாகும். சொல்லப் போனால், இவ்வாறு நாட்டு விடுதலைக்காக ஓர் ஆயுதந் தாங்கிய போராட்டத்தை, ஒரு சில ஆண்டுகளில், கூடிப் போனால் பத்தாண்டுகளுக்கு உள்ளாகவே, நடத்தி வெற்றி பெற்று விடலாம் என்றே அரவிந்தரும், மற்றும் புரட்சி இயக்கத்தில் நம்பிக்கை கொண்டிருந்த ஏனைய தலைவர்களும் இளைஞர்களும் அந் நாளில் திடமாக நம்பிக் கொண்டிருந்தனர். எனவே திருமணமாகாத இளைஞர்களும் சரி, திருமணமான தேசபக்தர்களும் சரி, புரட்சி இயக்கத்தில் ஈடுபடுவதற்குச் சில ஆண்டுகள் வரையிலும் பிரம்மச்சரிய விரதம் ஏற்றுக் கொண்டிருந்தால் போதுமானது என்றே அவர்கள் கருதினர் எனலாம்.

ஆனால், புரட்சிக்கான ரகசியச் சங்கங்களில் சேர்க்கப்படுபவர்கள் விஷயத்தில், அவர்கள் திருமணமாகாத பிரம்மசாரிகளாக இருக்க வேண்டுமா அல்லது திருமணமானவர்களையும் அவற்றில் சேர்த்துக் கொள்ளலாமா என்ற பிரச்சினை, உலகில் தோன்றிய இத்தகைய ரகசியச் சங்கங்கள் பலவற்றிலும் பலகாலும் எழுந்து வந்துள்ளதை நாம் காண முடியும். திருமணம் ஆனவர்களைச் சேர்த்துக் கொண்

டால், அவர்கள் தமது மனைவி மக்கள் ஆகியோரின் மீது கொண்டுள்ள பந்த பாசத்தின் காரணமாக, மன உறுதி குலைந்து போய் விடக் கூடும், ஆட்சியாளரின் அடக்குமுறையின் விளைவாக, அவர்களது பெண்டு பிள்ளைகள் துன்புறுத்தப்பட்டால், அப்போதும் அவர்கள் மனம் குலைந்து, இயக்கத்தையே காட்டிக் கொடுத்து விடக் கூடும் என்ற அச்சம்தான் இதற்குக் காரணமாகும். எனவே தான் இத்தகைய ரகசியச் சங்கங்களில் திருமணமானவர்களை அறவே சேர்த்துக் கொள்ளாதிருப்பது, அல்லது மிக மிக அரிதாகவே சேர்த்துக் கொள்வது என்ற நிலை பல ரகசியச் சங்கங்களில் ஒரு நடைமுறையாக இருந்து வந்துள்ளதையும் நாம் காண முடியும். வங்கத்தைப் பொறுத்த வரையில் அங்கு இத்தகைய ரகசியச் சங்கங்களை அமைத்தவர்களும், அவற்றை முன்னின்று நடத்தியவர்களும், அவற்றில் அங்கம் வகித்தவர்களும், பிரம்மசாரிகளாகவே இருந்தனர். வங்கத்தில் ரகசிய இயக்கத்தில் ஈடுபட்டிருந்த அரவிந்தரின் தம்பி பரீந்திரர், சுவாமி விவேகானந்தரின் தம்பி பூபேந்திர நாதர் ஆகியோர் திருமணமாகாத இளைஞர்களாகவே இருந்தனர். புரட்சியாளராக விளங்கியவரும், 'சந்தியா' என்ற புரட்சிகரமான பத்திரிகைக்கு ஆசிரியராக விருந்தவரும், 1907ம் ஆண்டில் தம்மீது நீதி விசாரணை தொடங்கு முன்பே, உயிர் விடுத்து அமரரானவருமான பிரம்ம பாந்தவ உபாயத்தியாயா என்பவரும் வாழ்நாள் முழுவதும் பிரம்மசாரியாகவே வாழ்ந்தவராவார். 'பவானி மந்திர்' திட்டத்தைத் தீட்டிக் கொடுத்த அரவிந்தர் புரட்சி இயக்கத்தில் நேரடியாகப் பங்கு கொள்ளாமல், அதனைப் பின்னாலிருந்து இயக்கும் வழிகாட்டியாகவும், அந்த இயக்கத்தைச் சேர்ந்தவர்களுக்கு ஊக்கமும் உத்வேகமும் ஊட்டும் சக்தியாகவுமே விளங்கி வந்தார் என்பதையும் நாம் காண முடிகிறது.

பாரதியே 1908 ஜூன் 13ம் தேதி, 'இந்தியா' பத்திரிகையில் 'சந்நியாசமும் சுதேசியமும்' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரையில் இவர்களைப் பாராட்டிப் பின்வருமாறு எழுதியிருக்கிறார் :

''நமது சுதந்திரமுயற்சியில் கணக்கற்ற சந்நியாசிகள் சேர்ந்திருப்பதைக் குறித்து ஓரிரண்டு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறோம் ... காலஞ்சென்ற விவேகானந்த பரமஹம்ச மூர்த்தியே இந்த சுயாதீனக் கிளர்ச்சிக்கு அஸ்திவாரம் போட்டவரென்பதை உலகமறியும். இப்போதும் அவருடைய சிஷ்யர்களிலே பலர் சுதேசியத்திலே மிகவும் பாடுபட்டு வருகிறார்கள். 'யுகாந்தர்' பத்திரிகை நடத்தி

இப்போது சிறையிடப்பட்டிருக்கும் பூபேந்திரநாதர் என்ற பிரமச்சாரி ஸ்வாமி விவேகானந்தரின் சொந்தச் சகோதரர். 'ஸந்தியா' பத்திரா பதிராயிருந்து, வங்காளத்து சுதேசியஸ்தர்களுக்குள்ளே தலைமை வகித்து, அதிகாரிகள் கேஸ் கொண்டு வந்த சமயத்தில், அவர்கள் கைவசப்படாமல் பரகதி அடைந்தவரான பிரம பாந்தவரும் ஓர் சந்நியாசியே. இப்படி ஆயிரக் கணக்கான மகான்கள், இன்னும் நமது நாட்டிலே உழைத்து வருகிறார்கள்...'' (பாரதி புதையல்-2 ரா.சு. பத்மநாபன் தொகுப்பு. பக். 167-168).

ஆனால், தமிழ்நாட்டில் தோன்றிய ரகசியச் சங்கத்தில் நாம் வேறு பட்ட நிலைமையைக் காண முடிகிறது. ஆஷ்துரை கொலை வழக்கு சம்பந்தமாக நடைபெற்ற திருநெல்வேலி சதி வழக்கில், அரசாங்கத் தரப்பில் முதல் எதிரியாகக் குற்றம் சாட்டப்பட்டிருந்த நீலகண்ட அய்யர் ஒரு பிரமச்சாரியே. அவர் தம்மை நீலகண்ட பிரமச்சாரி என்றே குறிப்பிட்டு வந்தார்; அவ்வாறு குறிப்பிடுவதிலும் பெருமைப் பட்டார் அவர். இவர் இறுதி வரையில் பிரம்மசாரியகவே இருந்து, கர்நாடக மாநிலத்திலுள்ள நந்திமலையில் சாது ஓம்காரநாத் என்ற பெயரில் துறவியாக வாழ்ந்து அமரரானார். இதே வழக்கில் அரசாங்கத் தரப்பில் இரண்டாவது எதிரியாகக் குற்றம் சாட்டப் பட்டிருந்தவரும், வாஞ்சிநாதன் மணியாச்சி ரயில் நிலையத்தில் ஆஷ் துரையைச் சுட்டுக் கொன்ற காலத்தில் வாஞ்சிநாதனோடு உடன் சென்றிருந்தவரும், மகாகவி பாரதியின் மனைவி செல்லம்மா வழியில் பாரதிக்கு உறவினரும், பாரதியின் பாண்டிச்சேரி வாசத்தின்போது பாரதியின் வீட்டில் தங்கியிருந்தவருமான சங்கரகிருஷ்ணனும் திருமணமாகாத பிரம்மச்சாரியாகவே இருந்தார். ஆனால், அதே சமயம் ஆஷ் துரையைச் சுட்டுக்கொன்று, தானும் தன்னுயிரை மாய்த்துக் கொண்ட வாஞ்சிநாதன் திருமணமான இளைஞராகவே இருந்தார். அதே போல், இந்தக் கொலை வழக்கு சம்பந்தமாகத் தேடப்பட்டு வந்தவரும், வ.உ. சிதம்பரம் பிள்ளையின் நம்பிக்கைக்கு உரியவரும், போலீசில் அகப்படாமல் பாண்டிச்சேரிக்குச் சென்று அங்கிருந்து கடல் கடந்து பினங்குக்குச் சென்று விட்டதாகக் கருதப் படுபவருமான தூத்துக்குடி மாடசாமிப் பிள்ளையும், மற்றும் ஆஷ் கொலைவழக்கில் எதிரிகளாகக் குற்றம் சாட்டப்பட்டிருந்தவர்களில் பலரும் திருமணமானவர்களே. மேலும், பாண்டிச்சேரியில் வாஞ்சி நாதனுக்குத் துப்பாக்கி சுடக் கற்றுக் கொடுத்தவர் என்றும் ஆஷ் கொலையைத் திட்டமிட்டுக் கொடுத்தவர் என்றும் கருதப்படுகின்ற

வ.வெ. சுப்பிரமணிய அய்யரும் திருமணமாகி இல்லறம் நடத்தி வந்தவரேயாவார்.

## 'ஆறில் ஒரு பங்'கில் அடங்கியுள்ள உண்மை

இந்த உண்மைகளின் பின்னணியில்தான் நாம் பாரதி எழுதி யுள்ள 'ஆறில் ஒரு பங்கு' என்ற கதையில் உள்ளடங்கியுள்ள உண்மையைப் புரிந்து கொள்ள வேண்டும்; புரிந்து கொள்ள முடியும்.

இந்தச் சொற்பொழிவின் தொடக்கத்தில், 'ஆறில் ஒரு பங்கு' என்ற கதையின் சுருக்கத்தைக் கூறி, அதில் வரும் கதாநாயகனை கோவிந்தராஜன் என்ற வாலிபன், தான் 'வந்தே மாதர' இயக்கத்தில் ஈடுபட்டுத் தேச சேவை செய்வதற்கு, தனது காதல் இடையூருக இருப்பதாகக் கருதுவதையும், பின்னர் அவன் பிரம்மசரிய விரதம் ஏற்று வடநாடு செல்வதையும், அங்கு அஸ்வினி குமார தத்தர் என்ற வங்கதேச பக்தரைச் சந்தித்து, அவர் மூலம் ''தேச சேவை செய்ய வேண்டுமெனில் ஒருவன் பிரம்மசாரியாக இருந்தாக வேண்டிய அவசிய மில்லை. காதலித்துக் கருத்தொருமித்த இருவர் தமக்குள் திருமணம் செய்து கொண்டு இருவருமே தேச சேவையில் ஈடுபடலாம். அதனுல் தேச மாதாவுக்கு இரண்டு தொண்டர்கள் கிடைப்பார்கள்'' என்ற உபதேசத்தைப் பெற்று, தான் காதலித்த பெண்ணை மீண்டும் ஏற்றுக் கொள்வதையும் பார்த்தோம். பாரதி தன் கதையில் குறிப்பிட்டுள்ள அஸ்வினி குமார தத்தர் என்பவர் ஒன்றும் ஒரு கற்பனைப் பாத்திர மல்ல. ஆங்கிலேய அரசாங்கம் 1908 டிசம்பர் 16-ஆம் தேதியன்று நாடு கடத்திய ஒன்பது வங்க தேசபக்தர்களில் அஸ்வினி குமார தத்தரும் ஒருவராவார். இவர்கள் அனைவரும் ஓராண்டுக் கழித்து 1910 பிப்ரவரி 10-ஆந் தேதியன்று விடுதலை செய்யப்பட்டனர். எனவே பாரதி கற்பனையையும் உண்மையையும் கலந்தே தன் கதையை எழுதியிருக்கிருன் என்பது தெளிவு. அந்த உண்மை என்ன?

தமிழ்நாட்டில் ஆயுதம் தாங்கிய போராட்டத்துக்காக ரகசியச் சங்கம் ஒன்றை அமைத்த காலத்தில், இங்கும் அந்தச் சங்கத்தில் திருமணமாகாத பிரம்மசாரிகளை மட்டுமே சேர்த்துக்கொள்ள வேண்டுமா, அல்லது மன உறுதி படைத்தவர்களாயின் திருமண மானவர்களையும் சேர்த்துக் கொள்ளலாமா என்ற ஒரு சர்ச்சை, இந்தச் சங்கத்தைத் தோற்றுவித்தவர்கள் மத்தியில் தோன்றியிருக்க வேண்டும்

என்ற உண்மையே 'ஆறில் ஒரு பங்கு' என்ற கதை நமக்கு முதலில் உணர்த்தும் உண்மையாகும். இத்தகைய ஒரு சர்ச்சை நடந்து வந்த காலத்தில், அதற்குத் தனது பதிலே வழங்கும் முகமாகவும், ஆயுதம் தாங்கிய போராட்டத்தில் ஈடுபாடு கொண்ட இளைஞர்களுக்கு இது சம்பந்தமாக ஒரு தெளிவை ஏற்படுத்துவதற்காகவும், தனது கதையில் தான் 'வந்தே மாதர' மார்க்கம் என மறைமுகமாகக் குறிப்பிட்டுள்ள ரகசியச் சங்கத்தில் திருமணம் ஆனவர்களும் சேரலாம், அவர்களையும் சேர்த்துக் கொள்ளலாம் என்று உணர்த்துவதற்காகவுமே பாரதி 'ஆறில் ஒரு பங்கு' என்ற கதையை எழுதினன் என்று நாம் ஊகிக்கலாம்.

என்ருலும், தான் எழுதி வெளியிடும் கதையின் உட்கருத்தை அரசாங்கம் கண்டறிந்து கொள்ளக் கூடாது என்ற எண்ணத்தின் காரணமாகவே, அவன் தன் கதைக்கு 'ஆறில் ஒரு பங்கு' என்று தலைப்பிட்டான். தனது கதையின் நடுவில் பாரதி தனது கதையின் நாயகனை கோவிந்தராஜன் இந்த நாட்டின் தாழ்த்தப்பட்ட தீண்டாதாரான மக்கள் நிலைமையை எண்ணி வருந்துவதாகச் சற்று விரிவாகவே எழுதிவிட்டு, ஓரிடத்தில் அவன் நம்மில் ஆறில் ஒரு பங்கு ஜனங்களை நாம் தீண்டாத ஜாதியாக வைத்திருப்போமானல், நமக்கு ஈசன் நல்ல கதி கொடுப்பாரா?'' என்று கேட்பதாக எழுதி, இந்த வாக்கியத்தில் வரும் 'ஆறில் ஒரு பங்கு' என்ற சொற்றொடரையே தனது கதைக்கும் தலைப்பாக மாற்றி விட்டான். இதன் மூலம், அவன் தீண்டாதாராக ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த மக்களுக்கு விமோசனம் தேடுவதே தனது கதையின் நோக்கம் என்று சொல்வது போன்று தலைப்பை அமைத்துக் கொண்டான். இதனை மேலும் வலியுறுத்துவது போல் அவன் இன்னொரு காரியமும் செய்தான்.

பாரதி 1908 ஜனவரி மாதம் வெளியிட்ட ''ஸ்வதேச கீதங்கள்'' என்ற அவனது முதல் கவிதைத் தொகுதி, இதன்பின் 1909ல் வெளியிட்ட 'ஜென்ம பூமி' என்ற கவிதைத் தொகுதி, இதனை அடுத்து 1910 பிப்ரவரியில் வெளியிட்ட 'ஞானரதம்' என்ற வசன நூல், 1910 நவம்பரில் வெளிவந்த பாரதியின் மூன்ருவது கவிதை நூலான 'ஸ்வசரிதை' ஆகிய நான்கு நூல்களையும், அதாவது 1908, 1909, 1910 ஆகிய மூன்று ஆண்டுகளிலும் தொடர்ச்சியாக வெளியிட்ட நான்கு நூல்களையும், தான் தனது ''குருமணி'' யாக ஏற்றுக் கொண்ட விவேகானந்தரின் தர்ம புத்திரியான நிவேதிதா தேவிக்கே சமர்ப்பணம்

செய்திருக்கிருன். இதன் பின் 1911 அக்டோபர் 13 அன்று நிவேதிதா தேவி அமரரான பின், 1912ல் அவன் பாண்டிச்சேரியிலிருந்து வெளியிட்ட 'பாஞ்சாலி சபதம்' முதற் பாகத்தை, ''தமிழ் மொழிக்கு அழியாத உயிரும் ஒளியும் இயலுமாறு இனிப் பிறந்து காவியங்கள் செய்யப் போகிற வரகவிகளுக்கும், அவர்களுக்குத் தக்கவாறு கைங்கரியங்கள் செய்யப் போகிற பிரபுக்களுக்கும்'' சமர்ப்பணமாக அர்ப்பணித்திருக்கிருன். ஆயினும், நிவேதிதா தேவி வாழ்ந்து வந்த காலத்தில், தான் வெளியிட்ட நூல்கள் நான்கையும் அவருக்கே சமர்ப்பணம் செய்த பாரதி, நிவேதிதா தேவி அமரராவதற்கு முன், 1910 இறுதியிலோ, 1911 தொடக்கத்திலே தான் எழுதி வெளியிட்ட 'ஆறில் ஒரு பங்கு' என்ற நூலை மட்டும், தனது நூலின் தலைப்பை நியாயப்படுத்துகிற மாதிரி, ''இந்நூலைப் பாரத நாட்டில் உழவுத் தொழில் புரிந்து, நமக்கெல்லாம் உணவு கொடுத்து ரக்ஷிப்பவர்களாகிய பள்ளர், பறையர் முதலிய பரிசுத்தத் தன்மை வாய்ந்த வைசிய சகோதரர்களுக்கு அர்ப்பணம் செய்கிறேன் என்று நூலின் முகவுரையில் கையொப்பமிட்டு அறிவித்திருக்கிருன். இதன் சூட்சுமம் என்ன?

> ''பறையருக்கும் இங்கு தீயர்
> புலையருக்கும் விடுதலை!
> பரவரோடு குறவருக்கும்
> மறவருக்கும் விடுதலை!''
>
> (விடுதலை—பாட்டு 1)

என்று பாடிய பாரதி, தாழ்த்தப்பட்ட, ஒடுக்கப்பட்ட மக்களின் விடுதலைக்காகவும் பாடியவன், பாடுபட்டவன் என்பதில் ஐயமில்லை. ஆயினும் 'ஆறில் ஒரு பங்கு' என்ற நூலுக்கு, அவன் தலைப்புக் கொடுத்த விதமும், அந்த நூலை அவன் தாழ்த்தப்பட்ட மக்களுக்குச் சமர்ப்பணம் செய்த செயலும், நமக்கு வேருேர் உண்மையைத்தான் உணர்த்துகின்றன எனலாம். நிவேதிதா தேவி உயிரோடிருந்த காலத்தில் தான் எழுதி வெளியிட்ட ஏனைய நூல்களையெல்லாம் தனது அரசியல் குருவான அவருக்கே சமர்ப்பணம் செய்த பாரதி, 'ஆறில் ஒரு பங்கு' என்ற நூலை மட்டும் அவருக்குச் சமர்ப்பணம் செய்யாமல், தாழ்த்தப்பட்ட மக்களுக்குச் சமர்ப்பணம் செய்ததற்கு, இந்த நூல் அரசியல் சம்பந்தமுடையது அல்ல என்று ஆங்கிலேய அரசாங்கம் எண்ணிக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தோடு அரசாங்கத்தின் கவனத்தைத் திசை திருப்ப விரும்பியதே காரணம் ஏன

நாம் லகுவில் ஊகித்துக்கொள்ளலாம். எனவேதான் அவன் தனது நூலை அரசாங்கம் தடை செய்ததை எதிர்த்து வாதாட முற்பட்ட போதும், அதனை ஒரு ''சமூகச் சீர்திருத்த''க் கதை என்று கூறியே வாதிட முயன்ருன். இதனைப் பாரதியின் அரசியல் ராஜதந்திரம் என்றே நாம் மதிப்பிட வேண்டும்.

ஆயினும் நாட்டு நிலைமைகளைக் கண்ணில் விளக்கெண்ணெய் விட்டுப் பார்த்துக் கொண்டிருந்த ஆங்கிலேய அரசாங்கத்தின் கழுகுக் கண்களில், பாரதி எழுதிய 'ஆறில் ஒரு பங்கு' என்ற கதையில் பொதிந்திருந்த உட்பொருள், மறைபொருள் படாமல் தப்பவில்லை. அரசாங்கம் அந்நூலில் ஆட்சேபனைக்குரியதாகக் கருதிய பகுதிகளில், தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஆதரவாகப் பாரதி எழுதியுள்ள பகுதிகளில்,

''தாழ்ந்த ஜாதியாரை நாம் மிதமிஞ்சித் தாழ்த்தி விட்டோம். அதன் பயன்களை நாம் அனுபவிக்கிருேம்... நாம் பள்ளர் பறை யருக்குச் செய்ததையெல்லாம் நமக்கு அன்னிய நாடுகளில் பிறர் செய்கிருர்கள்'' (Enclosure to Official Memorandum No. 4188–1 Judicial dated 8th September 1911 சென்னை ஆவணக் காப்பகம்) என்ற வரிகள் மட்டுமே ஆட்சேபணைக்குரியதாகக் குறிப்பிடப்பட்டி ருந்தது. அதே சமயத்தில், அதே ஆவணக் காப்பகக் குறிப்பில் பாரதி தனது நூலில், பிரம்மசாரிகளுக்கும் தேசியப் போராட்ட இயக்கத்துக்கும் உள்ள தொடர்பைக் குறித்து தனது கதாநாயகனின் வாய்மொழியாக எழுதியிருந்த பல பகுதிகளே ஆட்சேபனைக்குரிய தாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

''ஆம். பாரத தேசத்தை இப்போது பிரம்மசாரிகளே ரக்ஷிக்க வேண்டும். மிக உயர்ந்திருந்த நாடு மிகவும் இழிந்து போய் விட்டது. இமயமலையிலிருந்த இடத்தில் முட்செடிகளும், விஷப்பூச்சிகளும் நிறைந்த ஒரு பாழும் காடு இருப்பது போல் ஆய்விட்டது. அர்ஜுனன் வாழ்ந்த மாளிகையில் வௌவால்கள் தொங்குவது போல் இருக்கிறது. இதை பிரம்மசாரிகளே காப்பாற்ற வேண்டும். பொப்பிலி ராஜாவின் மகளுகவேனும், ராஜா சர் ஸவலை ராமசாமி முதலியார் மகளுகவேனும் பிறவாமல், நம் போன்ற சாதாரணக் குடும்பங்களிலே பிறந்தவர்கள் விவாகம் செய்துகொண்டால், இந்தப் பஞ்ச நாட்டில் அவர்களுக்கு மூச்சு முட்டிப் போகிறது... தேச காரி யங்களை இவர்கள் எப்படிக் கருதுவார்கள்? பிரம்மசாரிகள் வேண்டும்;

ஆத்ம ஞானிகள் வேண்டும்; தம்பொருட்டு, உலக சுகங்களை விரும்பாத தீரர்கள் வேண்டும். இந்தச் சுதேசியம் கேவலம் ஒரு லௌகிக காரியமன்று. இது ஒரு தர்மம். இதில் பிரவேசிப்பவர்களுக்கு வீரியம், தேஜஸ், கர்மயோகித் தன்மை முதலிய அரிய குணங்கள் வேண்டும்.''

என்ற பகுதியும்

''நான் அப்படியே காஷாயம் தரித்துக்கொண்டு துறவியாக வட நாட்டில் சஞ்சாரம் செய்து வந்தேன். வந்தேமாதர தர்மத்தை மட்டும் மறக்கவில்லை. ஆனால், என்னைச் சர்க்கார் அதிகாரிகள் பிடித்துச் சிறையிலிடும்படியான முயற்சிகளிலே நான் கலக்கவில்லை. ஜனங்களுக்குள் ஒற்றுமையும் பலமும் ஏற்படுத்தினால் ஸ்வதந்திரம் தானே சித்தியாகும் என்பது என்னுடைய கொள்கை. காரணத்தை விட்டுப் பயனைச் சீறுவதில் என் மனம் குவியவில்லை. அங்கங்கே சில சில பிரச்சாரங்கள் செய்ததுண்டு. இது பற்றி, சில இடங்களில் போலீசார் என்னைத் தொடரத் தலைப்பட்டார்கள். இதனால் நான் ஜனங்களிடையே நன்றாகக் கலந்து நன்மைகள் செய்துகொண்டு போக முடியாதபடி, பல தடைகள் ஏற்பட்டன. ஆகவே எனது பிரசங்கங்களிலிருந்து, எனது நோக்கத்துக்கு அனுகூலத்தினும் பிரதிகூலமே அதிகமாக விளையலாயிற்று.''

என்ற பகுதியுமே அவையாகும். (மேற்கூறிய ஆவணக் காப்பகக் குறிப்பு).

அரசாங்க ஆவணக் குறிப்பில் காணப்படும் இந்தப் பகுதியிலிருந்து, அன்றைய ஆங்கிலேய அரசாங்கம் 'ஆறில் ஒரு பங்கு' என்ற கதையில், உட்பொருளாக மறைந்திருந்த குறிப்பைக் கண்டுணர்ந்துகொண்டது என்றும்' அந்த நூல் தமிழ்நாட்டில் உருவாகியிருந்த ரகசிய இயக்கத்தில், பிரம்மசாரிகளை மட்டுமன்றி, திருமணமானவர்களையும் சேரத் தூண்டும், சேர்க்கவும் தூண்டும் நூலாக விளங்கியது என்பதையும் ஓரளவு கண்டுணர்ந்துகொண்டது என்றும், அதன் காரணமாகவே அந்நூலை அன்றைய அரசாங்கம் தடை செய்ய முற்பட்டது என்றும் நாம் முடிவு கட்டலாம்.

அவ்வாறாயின், பாரதி 'கனவு, என்ற தலைப்பில் சுயசரிதை வடிவில் எழுதிய கவிதை நூலையும் அன்றைய அரசாங்கம் தடை செய்ததேன்?

## 'கனவு' என்ற நூலில் காணும் குறிப்பு

'ஆறில் ஒரு பங்கு' என்ற நூலில் அரசாங்கம் ஆட்சேபணைக் குரியதாகக் கருதிய பகுதிகளில், பாரதி தன் கதாநாயகனின் வாய் மொழியாக,

''நான் சுமார் பதினாறு பிராயம் வரை சென்னை கிறிஸ்தியன் காலேஜில் படித்துக் கொண்டிருந்தேன். 'வேத காலம் முதலாக இன்று வரை பாரத தேசத்திலுள்ள ரிஷிகளெல்லோரும் ஒன்றும் தெரியாத மூடர்கள். அர்ஜுனனும். காளிதாஸனும், சங்கராசாரியாரும், சிவாஜியும், ராமதாஸரும், கபீர்தாஸரும், அதற்கு முன்னும் பின்னும் நேற்று வரையிருந்த பாரத தேசத்தார் அனைவரும் நெஞ்சில் வளர்த்து வந்த பக்திகளெல்லாம் இழிந்த அநாகரிகமான மூட பக்திகள் என்பது முதலான ஆங்கிலேய 'சத்தியங்கள்' எல்லாம் என் உள்ளத்திலே குடி புகுந்து விட்டன. ஆனால் கிறிஸ்துவப் பாதிரி ஓர் விநோதமான ஜந்து. ஹிந்து மார்க்கத்திலும் ஹிந்து நாகரிகத்திலும் பக்தி செலுத்துவது பேதமை என்று ருஜுப்படுத்திக் கொண்டு வரும்போதே, அவர் கொண்டாடும் கிறிஸ்து மார்க்கமும் மூட பக்தி என்று வாலிபர் மனதில் படும்படி ஏற்பாடு செய்து விடுகிறார்''

என்று கூறுகின்ற பகுதியும் ஒன்றாக ஆவணக் காப்பகக் குறிப்பில் இடம் பெற்றுள்ளது (மேற்கூறிய ஆவணக் காப்பாகக் குறிப்பு).

இந்தப் பகுதியில், இந்த நாட்டில் ஆங்கிலேயப் பாதிரிமார்கள் தோற்றுவித்து நடத்தி வந்த கல்லூரிகளில் அவர்கள் இந்திய நாகரிகத்தையும் கலாச்சாரத்தையும் இழித்தும் பழித்தும் பிரசாரம் செய்து வந்ததையும், அவர்களது சமயக் கருத்தைப் புகுத்த முயன்று வந்ததையும் பாரதி குறை கூறிச் சாடியிருக்கிறான் என்பது தெளிவு. எனவே ஆங்கிலேயப் பாதிரிமார்கள் போதித்து வந்த கல்வி முறை யையும், அவர்களது போக்கையும் பாரதி குறை கூறியிருந்ததையும், அன்றைய ஆங்கிலேயே அரசாங்கம் ஆட்சேபணைக்குரிய விஷயமாக, தடை செய்ய வேண்டிய பகுதியாகக் கருதியுள்ளது என்று நமக்குத் தெரிய வருகிறது.

இதே போல், பாரதி தனது 'கனவு' என்ற கவிதை நூலிலும், ஆங்கிலக் கல்வி முறையையும், அக் கல்வியைப் போதித்த ஆங்கி

லேயப் பாதிரிமார்களையும் பழித்துப் பாடியிருக்கிறுன் என்பதை நாம் அறிவோம். இப்போது வெளிவரும் பாரதி கவிதைத் தொகுப்புக் களில், 'சுயசரிதை' என்ற பகுதியில், ''ஆங்கிலப் பயிற்சி'' என்ற துணைத்தலைப்பின்கீழ் இடம் பெற்றுள்ள 21ஆம் பாடலிலிருந்து, 29ஆம் பாடல் முடியவுள்ள ஒன்பது பாடல்களே, அவன் அவ்வாறு அவற்றைப் பழித்துப் பாடியுள்ள பகுதியாகும். இந்தப் பகுதியில், பாரதி ஆங்கிலேயர் போதித்து வந்த கல்வியை ''ஊணர் கலைத் திறன் ' (பாடல் 21) என்றும், ''மண்படு'' (பாடல் 21) என்றும், ''அற்பர் கல்வி'' (பாடல் 22) என்றும், ''பேடிக் கல்வி'' (பாடல் 26) என்றும் பழித்துக் கூறுகிறுன்.

நரியுயிர்ச் சிறு சேவகர், தாதர்கள்,
நரியெனத் திரி ஒற்றர், உணவினைப்
பெரிதெனக் கொடு தம்முயிர் விற்றிடும்
பேடியர், பிறர்க்கு இச்சகம் பேசுவோர்,
கருதும்இவ் வகை மாக்கள் பயின்றிடும்
கலை பயில்கென என்னை விடுத்தனன்
(பாடல் 22)

என்று பாடி, ஆங்கிலேயர் கற்றுக்கொடுத்து வந்த கல்வி அடிமை களையும், சேவகர்களையும், ஒற்றர்களையும், பேடியர்களையும், இச்சகம் பேசிப் பிழைப்பவர்களையும் உருவாக்குகின்ற கல்வியேயாகும் என்று பாரதி இடித்துக் கூறியிருக்கிறுன். அதுமட்டுமல்லாமல்,

ஐயரென்றும் துரையென்றும் மற்றெனக்கு
ஆங்கிலக் கலையென்று ஒன்றுணர்த்திய
பொய்யருக்கு இது கூறுவன்: கேட்பிரேல்:
பொழுதெலாம் உங்கள் பாடத்தில் போக்கிநான்
மெய்யயர்ந்து விழிகுழி வெய்திட,
வீறிழந்து எனதுள்ளம் நொய்தாகிட,
ஐயம் விஞ்சிச் சுதந்திரம் நீங்கி, என்
அறிவு வாரித் துரும்பு என்ற லைந்ததால்
(பாடல் 28)

என்றும்,

செலவு தந்தைக்கோர் ஆயிரம் சென்றது;
தீதெனக்குப் பல்லாயிரம் சேர்ந்தன;
நலமோ ரெட்டுணையும் கண்டிலேன். இதை
நாற்பதாயிரம் கோயிலிற் சொல்லுவேன்
(பாடல் 29)

என்றும் பாடி, நனக்கு ஆங்கிலக் கல்வி போதித்த 'ஐயர்' என்று அழைக்கப்பட்ட கிறிஸ்தவப் பாதிரிமார்களேயும், 'துரை' என்று அழைக்கப்பட்ட ஆங்கிலேயர்களேயும் 'பொய்யர்' என்றே பழித்துக் கூறியிருக்கிருன். இவ்வாறு பாரதி ஆங்கிலக் கல்வி முறையையும், அதனைப் போதித்த ஆசிரியர்களேயும் பழித்துப் பாடியுள்ள பாடல் 21 முதல் 29 வரையிலான பாடல்கள் அனைத்தையுமே, அன்றைய ஆங்கிலேய அரசாங்கம் ஆட்சேபணைக்குரிய பகுதியாகக் குறிப்பிட்டுள்ளது. இந்தப்பகுதி தவிர , 39ஆவது பாடலில்,

ஈங்கிதற்கிடை எந்தை பெருந்துயர்
 எய்தி நின்றனன், தீய வறுமையான்;
ஒங்கி நின்ற பெருஞ்செல்வம் யாவையும்
 ஊணர் செய்த சதியில் இழந்தனன்

என்று பாடி' தன் தந்தை ஆங்கிலேயர் செய்த சதியினுல், அவரது தொழில் முயற்சியில் தோற்றுச் செல்வம் அனைத்தையும் இழந்து வறியரானதைக் குறிப்பிடும் பகுதி, 46ஆவது பாடலில்

மந்தர் பாற்பொருள் போக்கிப் பயின்றதாம்
 மடமைக் கல்வியில் மண்ணும் பயனிலே
எந்த மார்க்கமும் தோற்றிலது. என் செய்கேன்?
 ஏன் பிறந்தேன் இத்துயர் நாட்டிலே;

என்று ஆங்கிலக் கல்வியால் தான் எந்தப் பயனும் பெருமல், ஜீவனேபாயத்துக்கு வழியறியாமல் திகைத்து நின்ற நிலேயைப் பாடும் பகுதி ஆகியவையும் ஆட்சேபணைக்குரியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.

மேற்கூறிய பகுதிகளோடு, வீழ்ச்சியுற்று நடைப்பிணமாகி விட்ட பாரத நாட்டின் குறையைப் போக்க விரும்பும் இளேஞரைக் குறிப்பிடும் முகமாக,

.........வீழ்ச்சி பெற்ற இப் பாரத நாட்டினில்
ஊறழிந்து பிணமென வாழும் இவ்
ஊனம் நீக்க விரும்பும் இளேஞர்தாம்.........

(பாடல் 33, வரி 2–4)

என்று பாரதி பாடியுள்ள 35ஆம் பாடல் வரிகளும் ஆட்சேபணைக் குரியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. இவையனைத்தையும் கொண்டு பார்க்கும் போது, 'கனவு' என்ற நூலை, ஆங்கிலேய அரசாங்கம் தடை செய்ததற்கு, பாரதி ஆங்கிலக் கல்வி முறையையும், அதனைப் போதித்து வந்த பாதிரிமார்களையும் குறைகூறிப் பழித்துப் பாடியுயள்ளதோடு அந்தக் கல்வியால் இந்திய இளைஞர்கள் வீறும் வீரமும் இழந்து பேடிகளாக மாறிவிட்டனர் என்ற குறிப்போடும் பாடியுள்ளதே காரணம் என்றே நாம் முடிவு கட்ட வேண்டியுள்ளது.

ஆயினும், பாரதி தனது 'ஆறில் ஒரு பங்கு' என்ற கதையில் கூறியுள்ள மறைமுகமான உட்கருத்தை, 'கனவு' என்ற கவிதை நூலிலும் மறைமுகமாக உணர்த்தியுள்ளான் என்றே கூறலாம். இப்போது வெளிவரும் பாரதியின் கவிதைத் தொகுதியில் 'சுய சரிதை' என்ற பகுதியில், 'மணம்' என்ற பிரிவில், பாரதி சில பாடல்களைப் பாடியுள்ளான் (பாடல்கள் 30-38) இந்தப் பிரிவில், பாரதி தன் தந்தை தனக்குச் சிறு வயதிலேயே திருமணம் செய்து வைத்துவிட்ட கொடுமையைப்பற்றிக் கூறி, பால்ய மணத்தைக் கண்டிக்கும் விதமாகவே பாடியுள்ளான். அவ்வாறு பாட வரும்போது,

நினைக்க நெஞ்ச முருகும்; பிறர்க்கிதை
　　நிகழ்த்த நாதனி கூசும். அதன்றியே
எனைத்திங்கு எண்ணி வருந்தியும் இவ்விடர்
　　யாங்ஙன் மாற்றுவது என்பதும் ஓர்ந்திலம்;
அனைத்தொர் செய்தி மற்றேதெனிற் கூறுவேன்;
　　அம்ம ! மாக்கள் மணமெனும் செய்தியே.
வினைத்தொ டர்களில் மானுட வாழ்க்கையுள்
　　மேவும் இம்மணம் போற்பிறிது இன்றரோ!

(பாடல் 30)

என்று சிறு வயதில் புரியப்படும் பால்ய மணத்தை ''மாக்கள் மணம்'' என்று முதலில் கண்டித்துரைக்கிறான். அடுத்த பாட்டில்,

வீடுறு வணம் யாப்பதை வீடென்பார்;
　　மிகவிழந்த பொருளைப் பொருளென்பார்;
நாடுங் காலோர் மணமற்ற செய்கையை
　　நல்லதோர் மணமா மெனநாட்டுவார்

(பாடல் 31)

என்று பாடி விட்டு, இத்தகைய பால்ய மணம் செய்துகொள்வதைக் காட்டிலும், பிரம்மசாரியாக இருப்பது மேல் என்ற கருத்தோடு,

கூடுமாயிற் பிரமசரியம் கொள்;
கூடுகின்றல தென்னில் பிழைகள் செய்து
ஈடழிந்து நரகவழிச் செல்வாய்;
யாது செய்யினும் இம்மணம் செய்யல்காண்!
(பாடல் 30)

என்று பாடி முடிக்கிறான். இதன் பின் அவன்,

வசிட்டருக்கும் இராமருக்கும் பின்னொரு
வள்ளுவர்க்கும்முன் வாய்த்திட்ட மாதர்போல்
பசித்தொ ராயிரம் ஆண்டு தவம்செய்து
பார்க்கிலும் பெறல் சால அரிதுகாண்.
புசிப்பது உம்பரின் நல்லமுதென்றெணிப்
புலையர் விற்றிடும் கள்ளுணல் ஆகுமோ?
அசுத்தர் சொல்வது கேட்கலீர்! காளையீர்!
ஆண்மை வேண்டின், மணம் செய்தல் ஓம்புமின்!
(பாடல் 32)

என்று பாடுகிறான். அதாவது வசிட்டருக்கும், இராமனுக்கும், வள்ளுவருக்கும் வாய்த்ததுபோல் கருத்தொருமித்த மனைவி வாய்ப்பது என்பது மிகவும் அரிதுதான். அதற்காகத் தாய் தந்தையர் பால்ய வயதிலேயே யாரையேனும் திருமணம் செய்து கொள்ளக் கூறினால் அதற்குச் சம்மதியாதீர் என்று இளைஞர்களுக்குப் பாரதி அறிவுரை கூறுகிறான். எனினும் அதே மூச்சில், 'அதற்காகத் திருமணம் செய்து கொள்ள வேண்டாம் என்றும் முடிவு செய்து விடாதீர்கள், கருத்தொருமித்த கன்னியாகப் பார்த்துத்தக்க வயதில் திருமணம் செய்து கொள்ளுங்கள், திருமணம் உங்கள் ஆண்மையை, வீரத்தைக் குன்றச் செய்துவிடாது. எனவே ஆண்மை வேண்டின் திருமணம் செய்து கொள்ளுங்கள்' என்றும் பாரதி காளையர்க்கு அறிவுரை கூறிகிறான்.

நூற்றிரண்டு மலைகளைச் சாடுவோம்
நுண்ணிடைப் பெண்ணொருத்தி பணியிலே
(பெண்கள் வாழ்க. பாடல் 7)

காற்றிலேறி அவ் விண்ணையும் சாடுவோம்
காதற்பெண்கள் கடைக்கண் பணியிலே

(பெண்கள் வாழ்க. பாடல் 8)

என்றும் பாடியவன்தான் பாரதி. எனவே கருத்தொருமித்த ஆணும் பெண்ணும் திருமணம் புரிந்துகொண்டால். ஆடவரின் ஆண்மை, வீரம் எல்லாம் அதிகரிக்கவே செய்யும் என்பதே பாரதியின் கருத்தாக இருந்தது. ஆயினும், காளையரைத் திருமணம் செய்து கொள்ளுமாறு அறிவுரை கூறிய பாரதி, நாட்டு விடுதலைக்காகப் பாடுபட விரும்பும் இளைஞர்கள், எக்காரணம் கொண்டும், மிகவும் இளம் வயதிலேயே பெற்றோர்களின் வற்புறுத்தலுக்கு இணங்கி, எவளோ ஒருத்தியைத் திருமணம் செய்து கொள்ளக் கூடாது, யார் என்ன சொன்ன போதிலும், எத்தனைப் பொல்லாப்பு வந்த போதிலும், அதற்கு இணங்கவே கூடாது என்றும் அவன் எச்சரிக்கிறான். அவ்வாறு எச்சரிக்கும் போதுதான்,

வேறு தேயத்து எவரெது செய்யினும்
வீழ்ச்சிபெற்ற இப் பாரத நாட்டினில்
ஊறழிந்து பிணமென வாழும் இவ்
ஊனம் நீக்க விரும்பும் இளையர்தாம்
கூறுமெந்தத் துயர்கள் விளையினும்,
கோடி மக்கள் பழிவந்து சூழினும்
நீறுபட்ட இப் பாழ்ச் செயல் மட்டினும்
நெஞ்சத்தாலும் நினைப்பதொழிகவே

(கனவு — பாடல் 33)

என்று பாடுகிறான். எனவே, ஆயுதப் போரட்டத்துக்குத் தயாராகும் ரகசியச் சங்கங்களில் மணமாகாத, பிரம்மசாரிகளான இளைஞர்களை மட்டும்தான் சேர்க்க வேண்டும் என்று அவசியமில்லை என்பதையும், இதனால் நாட்டு விடுதலைக்காகப் போராட முன்வரும் இளைஞர்கள் திருமணம் செய்து கொள்ளாது பிரம்மசாரிகளாவே இருக்கவேண்டும் என்ற கட்டாயமில்லை என்பதையுமே பாரதி தான் 1910 ஆம் ஆண்டில் வெளியிட்ட 'கனவு' என்ற கவிதை நூலிலும் மறைமுகமாக உணர்த்தியுள்ளான் என்பதை நாம் உணர்ந்து கொள்ளலாம்.

ஆயினும், பாரதியின் 'ஆறில் ஒரு பங்கு' என்ற வசன நூலில் உட்பொருளாக மறைந்திருந்த இதே கருத்து, பாரதியின் 'கனவு' என்ற கவிதைப்படைப்பிலும் மறைமுகமாகப் பொதிந்திருந்த உண்மை, அன்றைய ஆங்கிலேய அரசாங்க அதிகாரிகளின் கண்களுக்குச்சரியாகச் சொன்னால், தமிழில் எழுதப்பட்டிருந்த பாரதியின் நூல்களைப் படித்துப் பார்த்து, அவற்றில் ''ஆட்சேபகரமான பகுதிகள்'' என்பனவற்றை இனம் கண்டு, மொழிபெயர்த்துக் கொடுத்த மொழி பெயர்ப்பாளர்களின் கண்களுக்குப் புலப்படாமலே போய்விட்டது என்றே கூறலாம். ஏனெனில் அவர்கள் ''ஆட்சேபகரமானவை'' என்று குறித்துக் கொடுத்த குறிப்புக்களில் மேற்கூறிய பகுதிகள் இடம் பெறவே இல்லை. மாறாக, ஆங்கிலேயக் கல்வி முறையையும், அதனைப் போதித்து வந்த பாதிரிமார்களையும் குறை கூறிய பகுதிகள் மட்டுமே அவர்களுக்கு ''ஆட்சேபகரமானவை'' யாகப் புலப் பட்டுள்ளன. ஆஷ் கொலை வழக்கு நடந்த காலத்தில், அந்தக் கொலை நிகழ்வதற்குத் தூண்டுகோலாக இருந்தவை எனப்படுவனவற்றில், 'கனவு' என்ற நூலில், ஆங்கிலப் பயிற்சியைக் குறை கூறிப் பாரதி பாடியுள்ள பகுதியே, பாடல் 21 முதல் 29 வரையிலான பகுதியே சாட்சியமாகச் (ஆஷ் கொலை வழக்கு எக்ஸிபிட் (Exhibit BBBB) சமர்ப்பிக்கப்பட்டது என்பதும் இதனை நிரூபிக்கிறது என்று நாம் கூறலாம்.

எனினும், இது ஒன்றும் விந்தையல்ல, பாரதியின் 'ஆறில் ஒரு பங்கு' என்ற நூலும், 'கனவு' என்ற கவிதை நூலும் ஆங்கிலேய அரசாங்கத்தினால் ஏன் தடை செய்யப்பட்டன என்பதை அறிந்து கொள்வதில், புரிந்து கொள்வதில், பாரதி வரலாற்றாசிரியர்கள் எவரும் கவனம் செலுத்தாது விடுத்தது தான் விந்தையிலும் விந்தையாகும்.

# 2

# பாஞ்சாலி சபதம்

## உரை பொருளும் மறை பொருளும்

மகாகவி பாரதி நமக்கு விட்டுச் சென்றுள்ள கவிதைப் படைப்புக்களில், தேசிய கீதங்கள் முதலான பல தனிப்பாடல்களைத் தவிர, முப்பெரும் படையல்களாக விளங்குபவை கண்ணன் பாட்டு, குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம் ஆகியவையாகும். இவற்றிலும் கண்ணன் பாட்டையும் குயில் பாட்டையும் விட அளவில் மிகப்பெரிய தனிப் பெரும் படைப்பாகவும், முழுமையான கவிதைப் படைப்பாகவும் விளங்குவது, மகாபாரதக் கதையின் ஒரு பகுதியை அடிப்படையாகக் கொண்டு பாரதி இயற்றியுள்ள பாஞ்சாலி சபதமேயாகும். பாரதியின் பாஞ்சாலி சபதம், இலக்கிய ரசிகர்களுக்கும், விமர்சகர்களுக்கும் அருஞ்சுவை பயக்கும் ஒரு பெருவிருந்தாகும், மேலும், இந்நூல் இலக்கிய விமர்சகர்களின் ஆராய்ச்சிக்கும் விமர்சனத்துக்கும் பல சுவையான கேள்விகளை எழுப்பும் படைப்பாகவும் விளங்குகிறது.

வியாசர் வடமொழியில் இயற்றிய மகாபாரதம் இந்திய நாட்டின் பழம்பெரும் இதிகாசமாகும். இந்த இதிகாசத்தின் கதை தமிழர்களுக்குச் சங்க காலத்திலேயே தெரிந்திருந்தது என்பதைச் சங்க காலத்துப் பாடல்களிற் காணும் பல குறிப்புக்களினால் நாம் அறிகிறோம். மேலும், நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு ஆகியவற்றின் கடவுள் வாழ்த்துப் பாடல்கள், மற்றும் கடவுள் வாழ்த்தாக அமைந்துள்ள புறநானூற்றின் முதற் பாடல் ஆகியவற்றுக்கு எழுதப் பட்டுள்ள அடிக்குறிப்பின் மூலம் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்ற புலவர் ஒருவர் பழங்காலத்தில் இருந்ததாக அறிகிறோம். சங்க காலத்துக்குப் பின்னரும் பாரதத்தைத் தமிழ்ப்படுத்தும் முயற்சிகள் இருந்துவந்ததாக இலக்கியச் சான்றுகளால் அறிகிறோம். ஆயினும் இந்தப் பழங்காலத் தமிழாக்கங்கள் எதுவும் நமக்குக் கிட்டவில்லை. இதற்குப் பின் பல நூற்றாண்டுகள் கழித்து, பதின்மூன்றும் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இயற்றப்பட்டதாக அறிஞர்கள் கொள்ளும் 'பாரத வெண்பா' என்ற நூலே செய்யுள் வடிவத்தில் நமக்குக் கிட்டிய முதல் தமிழ்ப் பாரதம் எனலாம். இந்நூல் பன்னீராயிரம் பாடல்களைக் கொண்டது எனத் தொண்டை

மண்டல சதகம் கூறினுலும், நமக்குக் கிட்டியுள்ளது எண்ணூறு பாடல்களேயாகும். இதன் பின்னர் இன்றைக்குச் சுமார் ஐநூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்த வில்லிபுத்தூரார் பாரதத்தைத் தமிழில் விருத்தப் பாக்களால் பாடினுர். வியாச பாரதத்தையே இவர் 'தமது நூலாகக் கொண்டதாக இவர் குறிப்பிட்டிருந்தாலும், மேற்கூறிய பாரத வெண்பாப் பாடல்களையும், வடமொழியில் பிற்காலத்தில் அகஸ்தியபட்டர் என்பவர் இயற்றிய 'பால பாரதம்' என்னும் பாரதச் சுருக்கத்தையும் இவர் பயன்படுத்திக் கொண்டுள்ளார் என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுவர். வில்லிபுத்தூராருக்குப் பின்னர் அஷ்டாவதானம் அரங்கநாதக்கவிராயர் என்பாரும் அவருக்குப்பின் நல்லாப் பிள்ளை என்பாரும் பாரதத்தின் கதையைத் தமிழில் இயற்றியுள்ளனர். இவை தவிர, பாரதக் கதையின் பாத்திரங்களைப் பயன்படுத்தி, தமிழில், 'அல்லியரசாணி மாலை' போன்ற பல அம்மானைப் பாடல்களும் தோன்றியுள்ளன. மேலும், பாரதக் கதை தமிழ்நாட்டில் நெடுங்காலந் தொட்டு இன்று வரை தெருக்கூத்தாகவும் நடிக்கப் பெற்று வருவதையும் நாம் காண்கிறோம்.

இவ்வாறு மிகவும் தொன்மையான இந்திய இதிகாசமான பாரதத்தின் கதை தமிழ்நாட்டில் பல புலவர்களாலும் பலவாறு பாடப் பெற்று வந்துள்ள ஒரு கதையாகவே விளங்குகிறது. பாரதியும் கூடத் தனது பாஞ்சாலி சபதத்தின் முகவுரையில்,

""எனது சித்திரம் வியாசபாரதக் கருத்தைத் தழுவியது. பெரும்பான்மையாக, இந்நூலை வியாச பாரதத்தின் மொழி பெயர்ப் பென்றே கருதி விடலாம். அதாவது 'கற்பனை' திருஷ்டாந்தங்களில் என்து 'சொந்தச் சரக்கு' அதிகமில்லை. தமிழ் நடைக்கு மட்டுமே நான் பொறுப்பாளி என்ற தன்னடக்கத்தோடு கூறிக் கொள்கிறுன்.

மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள்
சொல்வதிலோர் மகிமை இல்லை

என்றும்

இறவாத புகழுடைய புதுநூல்கள்
தமிழ் மொழியில் இயற்றல் வேண்டும்

(தமிழ்.பாடல் 3)

என்றும் பாடியவன்தான் பாரதி என்பதை நாம் அறிவோம். எனினும், இவ்வாறு பாடிய பாரதி, பழைய புலவர்கள் பாடி வைத்த கதையையே தானும் திரும்பப் பாடியதால், அவனும் 'அறைத்த மாவையே அறைக்கும், காரியத்தைத்தான் செய்தானா? அல்லது அவன் தனக்கு முன்னர் அக்கதையைப் பாடிய புலவர்களிருந்து வேறுபட்டு நின்றானா? அவ்வாறாயின் அவன் அந்தக் கதையில் ஏனையோர் காணாத புதுமைகளை எவ்வாறு கண்டான்? என்ன கண்டான்? பழமையானதோர் இதிகாசக் கதையை அவன் தேர்ந் தெடுத்தபோதும், அதில் அவன் பாரதக்கதையில் ஒரு பெரும் பகுதியைத் தேர்ந்தெடுத்து, ஒரு பாரதக்காவியம் பாட முனையாமல், ஒரு சிறிய கதைப்பகுதியை மட்டும் ஏன் தேர்ந்தெடுத்தான்? அவ்வாறு தேர்ந்தெடுத்த பகுதியிலும் அவன் பாஞ்சாலி சபதம் செய்யும் காட்சியோடு ஏன் தனது கதையை முடித்துக்கொண்டு விட்டான்? அதன் நோக்கம் என்ன? அந்த நோக்கத்தில் ஏதேனும் உறை பொருள் உண்டா? உறை பொருள் மட்டுமல்லாது ஏதேனும் மறை பொருளும் உண்டா? உண்மையில், பாஞ்சாலி சபதத்தைப் படைத்ததன் மூலம் பாரதி ஆற்றிய பணி என்ன?

இவ்வாறு அடுக்கடுக்காகப் பல கேள்விகள் எழுகின்றன. இந்தக் கேள்விகளுக்கு விடைகளைக் காண முயலும் ஓர் இலக்கிய விசாரணையே எனது இந்தச் சொற்பொழிவின் கருப் பொருளாகும்.

## *பாரதியும் சமூகச் சீர்திருத்தமும்*

எந்தவொரு கவிஞனின் படைப்பையும் நாம் ஆராயும்போது, அவன் வாழ்ந்த காலச் சூழ்நிலையையும், அந்தக் காலத்தின் தேவைகளையும் கருத்தில் கொண்டே ஆராய வேண்டும். அப்போது தான் அவன் தன் காலத்தின் குரலாக விளங்கினானா, எந்த அளவுக்கு விளங்கினான், எவ்வாறு விளங்கினான் என்பதையெல்லாம் நாம் இனம்கண்டு கொள்ள முடியும். பாரதியைப் பொறுத்த வரையில் அவன் இந்த இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றிய இந்தியத் தேசிய இயக்கம் உருவாக்கித் தந்த தேசிய மகாகவி என்பதை நாம் அறிவோம். எனவே அவனது கவிதைப் படைப்புக் களும் அவற்றின் கருப்பொருளும் இந்திய நாட்டின் தேசியத் தேவைகளைக் கருத்தில் கொண்டு படைக்கப்பட்டவையேயாகும். அவன் பழைய வரலாற்று நிகழ்ச்சிகளைக் கவிப் பொருளாக்கிப் பாடுகின்ற காலத்திலும்கூட, அவன் அவற்றைக் கருவியாகக்

கொண்டு, தான் வாழ்ந்த காலத்தின் தேவைகளை எதிரொலிக்கும் எதிரொலியாகவே குரல் கொடுத்தான். உதாரணமாக, குரு கோவிந்தர், சத்ரபதி சிவாஜி ஆகியோரைப் பற்றிப் பாடிய அவன் அவர்களது வாய்மொழியாக, அன்றைய புரட்சி இயக்கத்தின் குரலை எவ்வாறு எதிரொலித்தான் என்பதை முந்திய சொற்பொழிவின் போது நாம் கண்டோம். பாரதி, திலகர், அரவிந்தர் முதலியோரைத் தலைவர்களாகக் கொண்ட தீவிரத் தேசியவாத இயக்கத்தில் ஈடுபட்டிருந்தவன் என்று சென்ற சொற்பொழிவில் குறிப்பிட்டோம். எனினும் தீவிரத் தேசியவாதத் தலைவர்களுக்கு இல்லாத ஒரு சிறப்புப் பாரதிக்கு உண்டு.

இந்திய நாட்டில் காங்கிரஸ் இயக்கம் தோன்றிய காலத்திலிருந்தே முதலில் வேண்டியது அரசியல் சீர்திருத்தமா, அல்லது சமூகச் சீர்திருத்தமா என்ற விவாதம் தேசிய இயக்கத்தில் ஈடுபட்டிருந்த தலைவர்கள் மத்தியில் தீராத விவாதமாகவே இருந்து வந்தது எனலாம். இதில் வேடிக்கை என்னவென்றால், அரசியலில் தீவிரவாதிகளாக இருந்தவர்கள் சமூகச் சீர்திருத்த விஷயத்தில் மிதவாதிகளாகவும், அரசியலில் மிதவாதிகளாக இருந்தவர்கள் சமூகச் சீர்திருத்த விஷயத்தில் தீவிரவாதிகளாகவும் இருந்தனர். உதாரணமாக, சென்ற நூற்றாண்டின் இறுதிவாக்கில், அன்றைய ஆங்கிலேய அரசாங்கம் 'திருமண வயது மசோதா' (Age of Consent Bill) ஒன்றைக் கொண்டுவந்தது. இது பால்ய விவாகத்தைத் தடை செய்யும் மசோதாவாகும். இதனை அரசியலில் மிதவாதியாக இருந்த தேசிய இயக்கத் தலைவரான மகாதேவ கோவிந்த ரானடே ஆதரித்தார். ஆனால் திலகரோ இதனை எதிர்த்தார். 1891ல் ஜனவரியில் இந்த மசோதா வைசிராயின் சபையில் முன்மொழியப்பட்ட பின்னரும்கூட, திலகர் தமது 'கேசரி' ப் பத்திரிகையில், இந்த மசோதா இந்துக்களின் சமூக, மற்றும் சமயப் பழக்க வழக்கங்களில் குறுக்கிடுகிறது எனக் கண்டித்துத் தலையங்கம் எழுதினார். மேலும் வைதிக இந்துக்களை அவர்கள் கடைப்பிடித்து வந்த மரபை என்றுமே கைவிட முடியாது என்று அரசுக்கு அறிவுறுத்தி எழுதுமாறும் அவர் வேண்டுகோள் விடுத்தார். இதன் பின் 1891ஆம் ஆண்டு மே மாதத்தில் இந்த மசோதா சட்டமாக நிறைவேற்றப்பட்ட பின்னரும்கூட, அவர் அதே மாதத்தில் புனாவில் நடந்த காங்கிரஸ் மாகாண மாநாட்டில், ''திருமண வயது மசோதா விஷயத்தில் தெரிவிக்கப்பட்ட பொதுஜன அபிப்பிராயத்தை உரிய விதத்தில் அரசாங்கம் கருத்தில் கொள்ள

வில்லை'' என்று கண்டிக்கும் ஒரு தீர்மானத்தையே முன்மொழிந்தார்! (Lokamanya Tilak — G.P. Pradhan and A.K. Bhagwat, p. 54)

அரசியலில் தீவிரவாதிகளாக இருந்த திலகர் போன்றவர்கள் சமூகச் சீர்திருத்தங்களை எதிர்த்தது ஏன்? தீவிரத் தேசியவாத இயக்கத் தலைவர்களில் ஒருவரான அரவிந்தர், ''அரசியல் விடுதலை தான் ஒரு நாட்டின் உயிர் மூச்சு. எல்லாவற்றிலும் முதன்மையாக, அரசியல் விடுதலைக்குக் குறி வைக்காமல், சமூகச் சீர்திருத்தம், கல்விச் சீர்திருத்தம், தொழில் வளர்ச்சி, இனத்தின் நல்லொழுக்க அபிவிருத்தி ஆகியவற்றை அடைய முயற்சி செய்வது அறியாமையின், வீண்வேலையின் சிகரமேயாகும்'' என்று கூட எழுதினர். (History of Freedom Movement in India — R.C. Mazumdar.)

தொகுதி 1, பக். 441). சொல்லப் போனால், தீவிரத் தேசிய வாத இயக்கத் தலைவர்கள், இந்தியாவை ஆண்டு வந்த ஆங்கிலேய அரசாங்கம் கொண்டு வந்த சமூகத்துக்குத் தேவையான சீர்திருத்தங்களைக்கூட, அவற்றைக் கொண்டுவருவது தம்மை ஆண்டு வந்த அன்னிய அரசாங்கம் என்ற காரணத்துக்காகவே எதிர்த்தனர். அதாவது சமூகச் சீர்திருத்தங்களுக்காகப் போராட முற்பட்டால், அரசியல் விடுதலைக்கான போராட்டம் பின்தங்கிவிடும் என்றும், அன்னிய அரசாங்கம் சமூகச் சீர்திருத்தங்களைக் கொண்டுவருமானல், அரசியல் விடுதலைப் போராட்டத்தின் கூர்மை முனை மழுங்கிப் போய் விடும் என்றுமே அவர்கள் கருதினர்கள் எனலாம். இதனல் அவர்கள் அரசியல் ரீதியில் அன்று முற்போக்கானவர்களாக இருந்தபோதிலும், சமூக அநீதிகளையும் பத்தாம்பசலியாகிவிட்ட சாஸ்திர சம்மந்தங்களையும் எதிர்த்துப் போராட முனையாது, சமூகச் சீர்திருத்த விஷயத்தில் பிற்போக்கானவர்களாக இருந்தனர். எனவேதான், ஜவஹர்லால் நேரு தமது சுயசரிதையில், ''சமூக நோக்கோடு பார்த்தால், 1907ல் மலர்ந்த இந்தியத் தேசியம் பிற்போக்கானதே'' என்று எழுதினர் (சுயசரிதை—ஜவஹர்லால் நேரு, அத். 4)

ஆனல், 1905ஆம் ஆண்டில் வங்கப் பிரிவினை நிகழ்ந்த காலத்தில் தேசியக் கவியாக மலர்ச்சியுற்று, தீவிரத் தேசியவாத இயக்கத்தில் பங்கெடுக்க முற்பட்ட பாரதியோ, தேசியக் கவியாக மலர்வதற்கும் முன்பே சமூகச் சீர்திருத்தத்தில் ஈடுபாடு கொண்டவனக விளங்கியவன். 1898ஆம் ஆண்டு முதல் 1903ஆம் ஆண்டுத் தொடக்கம் வரையிலும் காசியில் வாழ்ந்து வந்த காலத்திலேயே

பாரதி சமூகச் சீர்திருத்தத்தில் ஆர்வம் கொண்டவனுக இருந்திருக்கிருன். பாரதி காசியில் வாழ்ந்த காலத்தில், பாரதியின் உற்ற நண்பராகக் காசியில் இருந்து வந்த பண்டித எஸ். நாராயண அய்யங்கார், ''காசியில் சுப்பையா'' என்ற கட்டுரையில் பாரதி ''கையில் எப்போதும் ஷெல்லியின் ஆங்கிலப் புத்தகத்தை வைத்துக் கொண்டிருப்பார். ...பெண் கல்வி, சமத்துவம்—இந்த இரு விஷயங்களைத் தவிர அப்போது வேறு எதிலும் அவர் அதிகக் கவனம் செலுத்தவில்லை'' என்று எழுதியுள்ளார்.

(தினமணி சுடர் கட்டுரை—8-9-1956).

பாரதி 1904ஆம் ஆண்டின் இறுதியில் சென்னைக்கு வந்த காலத்திலும், பாரதியிடம் சமூகச் சீர்திருத்தக் கருத்துக்கள் மேலோங்கியிருந்தன என்றும் பாரதியைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் கூறுகின்றன. பாரதியின் வரலாற்ருசிரியர் ரா. அ. பத்மனுபன் தமது ஆங்கிலக் கட்டுரையொன்றில், "சென்னைக்கு பாரதி சுதேசமித்திரன் பத்திரிகையின் உதவி ஆசிரியராக 1904ல் வந்து சேர்ந்தபோது, அவர் தம்மைப்போலவே சமூகச் சீர்திருத்தத்தில் ஆர்வம்கொண்ட பல இளைஞர்களைத் தம்மோடு சேர்த்துக்கொண்டார்... பாரதி பெண்களின் நல்வாழ்வு, ஜாதி ஒழிப்பு, சமபந்தி போஜனம் முதலிய விஷயங்களில் மிகுந்த கவனம் செலுத்திஞர்'' என்று எழுதுகிருர் (Essays on Bharathi (Collection) Bharathi's Associates - R. A. Padmanabhan) இதே சமயத்தில் பாரதி 'இந்து' (HINDU) பத்திரிகைக்கு எழுதிய ஆங்கிலக் கடிதம் ஒன்றில், ''சமூகச் சீர்திருத்தம் இல்லாவிட்டால், நமது அரசியல் சீர்திருத்தம் கனவேயாகும்; கற்பனையேயாகும். ஏனெனில் சமூக அடிமைகள் அரசியல் விடுதலையை உண்மையில் ஒருபொழுதும் புரிந்துகொள்ள முடியாது'' என்று எழுதிஞன். (A Hundred Years of The Hindu பக். 77-78). இதனுலேயே பாரதி சென்னைக்கு வந்து சேர்ந்த எட்டு மாதக் காலத்திலேயே, அதாவது தீவிரத் தேசிய இயக்கத்தின் பிரசாரத்துக்காக 1906 மே மாதத்தில் தொடங்கப்பட்ட 'இந்தியா' பத்திரிகையின் ஆசிரியப் பொறுப்பை ஏற்றுக்கொள்வதற்கு முன்பே, 1905 ஆண்டு ஆகஸ்டு மாதத்திலேயே, ''தமிழ் நாட்டு மாதர்களின் அபிவிருத்தியே நோக்கமாக வெளியிடப்படும் மாதாந்தரப் பத்திரிகை'' என அட்டைப் பக்கத்தில் பொறிக்கப்பட்ட ''சக்ரவர்த்தினி என்ற பெண் விடுதலைக்கான பத்திரிகையின் ஆசிரியப்

பொறுப்பை ஏற்று, அதன் ஆசிரியராக, 1906 ஆகஸ்டு மாதம் வரையிலும் இருந்துவிட்டுப் பின்னர் ''இந்தியா'' பத்திரிகையில் தனது முழுக் கவனத்தையும் செலுத்தத் தொடங்கினான் (ஆதாரம் : பாரதி காலமும், கருத்தும்–ரகுநாதன்).

## பாரதியும் பெண் விடுதலையும்

எனவே, பாரதியைப் பொறுத்த வரையில் அவன் தீவிரத் தேசியவாத இயக்கத்தில் ஈடுபாடு கொண்டிருந்தபோதிலும், அந்த இயக்கத்தின் தலைவர்களைப்போலல்லாமல், அவன் சமூக விடுதலையிலும் ஆர்வம் கொண்டவனாகவே விளங்கி வந்தான். இந்திய மக்கள் அன்னியர் ஆதிக்கத்தில் இருந்து அரசியல் விடுதலை பெறுவதோடு மட்டுமல்லாமல், அவர்கள் சமூகக் கொடுமைகளில் இருந்தும் விடுபட வேண்டும் என்றும் அவன் விரும்பினான். அந்தக் கொடுமைகளில் ஒன்றுதான் பெண்ணடிமைத்தனம். இதனால்தான் ''விடுதலை! விடுதலை! விடுதலை!'' என்று மும்முறை கோஷமெழுப்பி, விடுதலையைப் பற்றிப் பாட வந்த காலத்திலும்கூட,

மாதர் தம்மை இழிவு செய்யும்
  மடமையைக் கொளுத்து வோம்;
வையவாழ்வு தன்னில் எந்த
  வகையிலும் நமக்குளே
தாதர் என்ற நிலைமை மாறி
  ஆண்களோடு பெண்களும்
சரிநிகர் சமானமாக
  வாழ்வம் இந்த நாட்டிலே!

(விடுதலை–பாடல் 3)

என்று சரி, நிகர், சமானம் என்ற மூன்று சொற்களால், பெண் விடுதலையை முக்காலும் வற்புறுத்திப் பாடினான். அது மட்டுமல்ல, நாட்டு விடுதலைக்காகப் போராடும் வீரர்களைப் பெற்றெடுப்பதற்குக் கூட, பெண்கள் அடிமைப்பட்டும் அறிவீனத்தில் ஆழ்ந்தும் இருந்தால், அத்தகைய வீரர்கள் பிறப்பெடுப்பது அரிது என்றும் பாரதி கருதினான். எனவேதான் அவன்,

நிலத்தின் தன்மை பயிர்க்குள தாகுமாம்;
நீசத் தொண்டும் மடமையும் கொண்டதாய்
தலத்தில் மாண்புயர் மக்களைப் பெற்றிடல்
சாலவும் அரிதாவதோர் செய்தியாம்

(புதுமைப் பெண் — பாடல் 5)

என்று பாடி, அறிவும் வீரமும் நிறைந்த பெண்கள்தான் ஆண்மை மிக்க மக்களையும் பெற்றெடுத்துத் தர முடியும் என்று வலியுறுத்தியுள்ளார். மேலும்,

விண்ணுக்குப் பறப்பதுபோல் கதைகள் சொல்வீர் !
விடுதலை என்பீர் ! கருணை வெள்ளம் என்பீர்
பெண்ணுக்கு விடுதலைநீர் இல்லையென்றால்
பின்னிந்த உலகினிலே வாழ்க்கை இல்லை !

(பாரதி அறுப்பத்தாறு — பாடல் 45)

என்று பாடி, பெண் விடுதலை இல்லையென்றால், பிற விடுதலையும் இல்லை என அடித்துக் கூறுகிறான். அதுமட்டுமல்ல. நாட்டுக்கான விடுதலைப் போராட்டத்தில் பெண்களும் பங்கெடுக்க வேண்டும் என்றும் அவன் கருதினான். எனவேதான் அவன் படைத்த புதுமைப் பெண்,

சிறுமைதீர நம்தாய்த் திருநாட்டைத்
திரும்ப வெல்வதில் சேர்ந்திங்கு உழைப்போம்

(பெண் விடுதலை—பாடல் 2)

என்று கூறுவதாகவும் அவன் பாடிச் சென்றான்.

சொல்லப்போனால், பெண் விடுதலை பற்றிய பாரதியின் கண்ணோட்டத்தை உருவாக்கிய சக்திகளில், 18ஆம் நூற்றாண்டின் கடைப் பகுதியில் பிறந்து, 1822ஆம் ஆண்டில் தனது முப்பதாவது வயது முடியுமுன்பே அற்பாயுளில் மாண்டுபோன ஆங்கில நாட்டுப் புரட்சிக் கவிஞனை ஷெல்லிக்கும் பெரும்பங்கு உண்டு எனலாம். பாரதி தேசிய கவியாக மலர்ச்சி பெறுவதற்கு முன் எட்டயபுரத்தில் இருந்த காலத்திலேயே அவனுக்கு ஷெல்லியிடம் மிகுந்த ஈடுபாடு இருந்தது. ''அப்போது அவருக்கு ஷெல்லி, பைரன் முதலிய ஆங்கிலக் கவிகளின் நூல்களை வாசிப்பதில் பிரியம் அதிகம். அந்தக்

காலத்தில் அவர் ஷெல்லிதாசன் என்னும் புனைபெயரில் பத்திரிகை களுக்குச் சில வியாசங்கள் கூட எழுதியதுண்டு'' என்று எழுதியுள் ளார் பாரதியின் மனைவியான செல்லம்மா பாரதி (பாரதியார் சரித் திரம்). பாரதி 'ஷெல்லிதாசன்' என்ற புனைபெயரில் ஆரம்ப காலத் தில் எழுதி வந்தான் என்பதற்கு, 'சக்கரவர்த்தினி' — ஜுலை 1906 இதழ்). மேலும், பாரதி எட்டயபுரத்தில் இருந்த காலத்தில் 'ஷெல்லியன் சங்கம்' ''Shelleyan Guild) என்ற பெயரில் ஒரு சங் கத்தை ஏற்படுத்தி, ''அச்சங்கத்தில் உள்ளோருக்கு ஷெல்லியன் நூல்களைப் படித்துக் காண்பித்து, அனுபவிக்கும்படிச் செய்து'' வந்ததாகப் பாரதியின் வரலாற்றாசிரியர் ஆக்கூர் அனந்தாச்சாரி தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். (கவிச் சக்கரவர்த்தி சுப்ரமண்ய பாரதி சரித்திரம்).

ஷெல்லி தான் வாழ்ந்த காலத்தில், பெண்களுக்கு இழைக்கப் பட்டு வந்த அநீதிகளையும், பெண்ணடிமைத்தனத்தையும் கண்டு, மனம் கொதித்துப் பல பாடல்களைப் பாடினான். பெண்ணுரிமை பற்றி ஷெல்லி பாடிய பல பாடல்களின் எதிரொலியைக் குறிப்பாக ஷெல்லியின் 'ராணி மாப்' (Queen Mab) 'இஸ்லாமின் புரட்சி' (Revolt of Islam) என்ற பெரும் படைப்புக்களில் காணப்படும் பாடல்களது கருத்துக்களின் எதிரொலியை, நாம் பெண் விடுதலை பற்றிப் பாரதி பாடியுள்ள பாடல்களில் கேட்க முடியும். உதாரண மாக ஷெல்லியின் 'இஸ்லாமின் புரட்சி' என்ற படைப்பில் வரும் வரும் கதாநாயகியான சித்னா என்ற பெண்ணை, 'ஆங்கிலக் கவிதை கண்ட முதல் 'புதுமைப் பெண்' எனக் கூறுவர் ஆங்கில விமர்சகர் பிளண்டன் என்பவர் (Shelley — E. Blunden). ஷெல்லியின் புதுமைப் பெண்ணான சித்னா 'இஸ்லாமின் புரட்சி'யில் ஆண் பெண் சமத்து வத்தை நிலைநாட்ட வந்த வீராங்கனையாக விளங்குகிறாள். இஸ்லா மின் புரட்சி'க் கதையில் வரும் சொர்ணபுரிக்குள் சென்று, அங்குள்ள பெண்களின் புனர்வாழ்வுக்காக சித்னா பேசியபோது, அங்குள்ளவர் கள் அவளை ஒரு தேவ கன்னிகையாக மதிக்கிறார்கள். இதனை அவளே.

......... Some said
I was a child of God, sent down to save
Women from bonds and death

(Canto. 9 Poem 8)

''பெண்களை அடிமைத் தளையிலிருந்தும் அழிவிலிருந்தும் காப்பாற்று வதற்காக அனுப்பிவைக்கப்பட்ட கடவுளின் குழந்தை நான் என்று சிலர் சொன்னார்கள்'' என்று கூறுகிறாள். பராசக்தியிடம் பக்தி கொண்ட பாரதிக்கு, அவன் படைத்த புதுமைப் பெண்,

ஆற்றல் கொண்ட பராசக்தி அன்னை, நல்
அருளினால் ஒரு கன்னிகை யாகியே
தேற்றி உண்மைகள் கூறிட வந்திட்டாள்

எனப் பராசக்தியின் அவதாரமாகவே காட்சியளிக்கிறாள்.

ஷெல்லி பெண் விடுதலை பற்றிய பல பாடல்களுக்கும், அதனைக் குறித்துப் பாரதி பாடியுள்ள பாடல்களுக்கும் நாம் இத்தகைய பல ஒப்புமைகளைக் காண முடியும்.

இவ்வாறு நாட்டின் விடுதலைக்காகப் பாடல்கள் பல பாடிய பாரதி பெண் விடுதலைக்காகவும் பல பாடல்களைப் பாடினான். அதிலும் இந்திய நாட்டின் தேசிய இயக்கப் போராட்டக் காலத்தின்போது, அன்னிய ஆதிக்கத்தின் அதிகார வர்க்கத்தாரால், பெண்கள் மான பங்கப்படுத்தப்பட்ட கொடுமையைக் கண்டு பாரதி கொதித்தெழுந் தான். அது மட்டுமல்ல. சொந்தச் சோதரிகள் போன்ற தாய்நாட்டுப் பெண்குலத்தை, அன்னிய ஆதிக்க வெறியர்களும், அவர்களது அடியாட்களும் மானபங்கப்படுத்திய காலத்திலும்கூட, அந்த இழி செயலைத் தடுத்து நிறுத்தும் ஆண்மையும் வீரமும் இன்றி, வலியிழந்து நின்ற மக்களைக் கண்டும் அவன் கோபம் கொண்டான்.

மாதரைக் கற்பழித்து
வண்கண்மை பிறர் செய்யப்
பேதைகள் போல் உயிரைக்
பேணி இருந்தாரடி

(நடிப்புச் சுதேசிகள் — **கண்ணி 8**)

என்று அவன் நடிப்புச் சுதேசிகளை இடித்துக் கூறினான்.

இதே போன்று கடல் கடந்து பிழைப்பின் காரணமாகப் பிற நாடுகளுக்கு, கண்காணாத சீமைகளுக்குச் சென்ற தமிழப் பெண்கள் பீஜி முதலிய தீவுகளில் பட்ட துன்பத்தையெல்லாம் கண்டும் அவன் மனம் வெதும்பினான். அவன் தனது 'கரும்புத் தோட்டத்திலே' என்று தொடங்கும் பிரசித்தமான பாடலில், பீஜித் தீவில் வாடி வதங்கி வந்த பெண்களைப் பற்றிப் பாடும்போது,

நெஞ்சம் குமுறுகிறார் - கற்பு
நீங்கிடச் செய்யும் கொடுமையிலே அந்தப்
பஞ்சை மகளி ரெல்லம் – துன்பப்
பட்டு மடிந்து மடிந்து மடிந்தொரு
தஞ்சமும் இல்லாதே - அவர்
சாகும் வழக்கத்தை, இந்தக் கணத்தினில்
மிஞ்ச விடலாமோ? – ஹே!
வீர கராளி! சாமுண்டி! காளி!

(பாடல் 4)

என்று மனம் கொதித்து, இந்த அநியாயம் இன்னும் நீடிக்கலாமா எனக் காளியிடம், பராசக்தியிடம் முறையிட்டுக் கொள்கிறான். இவ்வாறு பெண்களை மானபங்கப்படுத்திய, அவர்களின் கற்பையும் கன்னிமையையும் சூறையாடிய கொடியவர்களைக் கண்டு கொதித்தெழுந்த பாரதி, பீஜித் தீவைப் போன்று, தென்னாப்பிரிக்கா, கென்யா, ஜமைக்கா, டிரினிடாட், பிரிட்டிஷ் கயானா முதலிய பல தீவுகள், நாடுகள் ஆகியவற்றில் பிழைப்புக்காகச் சென்ற தமிழ் மக்கள் பட்ட துயரங்களையும் பாடத் தவறவில்லை.

ஆப்பிரிக்கத்துக் காப்பிரி நாட்டிலும்
தென்முனை யடுத்த தீவுகள் பலவினும்
பூமிப் பந்தின் கீழ்ப்புறத்துள்ள
பற்பல தீவிலும் பரவி, இவ்வெளிய
தமிழ்ச் சாதி தடியுதையுண்டும்
காலுதை யுண்டும், கயிற்றடி யுண்டும்,
வருத்திடும் செய்தியும், மாய்ந்திடும் செய்தியும்
பெண்டிரை மிலேச்சர் பிரித்திடல் பொறாது
செத்திடும் செய்தியும், பசியாற் சாதலும்,
பிணிகளால் சாதலும், பெருந்தொல் லையுள்ளதம்
நாட்டினைப் பிரிந்த நலிவினாற் சாதலும்

(தமிழ்ச்சாதி – வரிகள் 31-41)

கண்டு அவன் மனம் கொதித்தான். இவ்வாறு பாரதி பெண் விடுதலைக்காகவும், அவர்களது மானத்தைக் காப்பதற்காகவும் ஆவேசமும் வேகமும் மிக்க பல பாடல்களைப் பாடியுள்ளான். பெண் விடுதலையின்பால் பாரதி கொண்டிருந்த தாகத்தையும் நாம் கருத்தில் கொண்டு, அவன் இயற்றிய பாஞ்சாலி சபதத்தை நோக்கினால், அவன் ஏன் அதனைப் பாடினான் என்பதைப் புரிந்துகொள்ள முடியும்.

# பாரதியின் பாரதம்

பாரதக் கதை நமக்கெல்லாம் தெரியும். அந்தக் கதையின் சாராம்சம் என்ன? பாண்டவருக்கும் துரியோதனுதியருக்கும் நடை பெறும் குருஷேத்திரப் போரே பாரதக் கதையின் முத்தாய்ப்பான நிகழ்ச்சி. அந்த யுத்தம் ஏன் ஏற்படுகிறது? பாண்டவருக்கும் துரியோதனுதியருக்கும் இடையே நிலவிய பகைமையின் காரணமாக, பாண்டவர்தம் தேவியான பாஞ்சாலி துரியோதனனின் சபையில் மானபங்கப் படுத்தப்பட்டதன் விளைவாகவே அந்த யுத்தம் ஏற்படு கிறது. யுத்தத்தின் முடிவில் துரியோதனுதியர் அழிந்து, பாண்டவர்கள் வெற்றி பெறுகின்றனர், அதாவது அதர்மம் அழிந்து தர்மம் வெற்றி பெறுகிறது என்பதே பாரதக் கதை. எனவே பாரதப் போருக்கே பாஞ்சாலியை மானபங்கம் செய்த செயலே, பிரதான காரணமாக விளங்குகிறது. இந்தப் பிரதான காரணமான நிகழ்ச்சியையே பாரதி தான் பாடிய பாஞ்சாலி சபதத்துக்குக் கருப்பொருளாக்கிக் கொள்கிருன். இந்த நிகழ்ச்சி பாரதியின் இதயத்தில் எத்தகைய ஒலியை எழுப்புகிறது என்பதையே நாம் பார்க்க வேண்டும்.

துரியோதனனேடு தருமபுத்திரன் சூதாடி, தனது செல்வங் களையும் நாட்டையும் தன் தம்பியரையும் இறுதியில் தன்னையுமே தோற்றுவிட்டான். இவ்வாறு தோல்விமேல் தோல்வி கண்ட தருமனனின் சூதாட்ட வெறி அடங்கவில்லை. அந்த வெறிக்குத் துரியோதனும் சகுனியும் தூபம் இடுகின்றனர். இறுதியில் வளர்ந் தோங்குகின்ற சூதாட்ட வெறிக்குத் தருமன் தன் மனைவி பாஞ்சாலி யையே பலியாக்கத் துணிந்து விடுகிருன். இதிலிருந்து விரிந்து வளரும் கதாம்சமே, பாரதியின் பாஞ்சாலி சபதத்தின் நான்காவது சுருக்கமாக, அவனது காவியத்தின் சிகரக் கும்பமாகக் காட்சியளிக் கிறது. பாரதியின் மணிவாக்கும் மனச்சாட்சியும் இந்த பகுதி முழு வதிலும் கணீரென்று ஒலித்தோங்குகின்றன.

பாஞ்சாலியைப் பந்தயமென வவத்த செய்கையையே பாரதி எடுத்த எடுப்பில் வன்மையாக, தயாதாட்சணியம் ஏதுமின்றிக் கண்டிக்கத் தொடங்குகிருன்.

வேள்விப் பொருளினையே—புலைநாயின்முன்
மென்றிட வைப்பவர்போல்,
நீள்விட்டப் பொன்மாளிகை—கட்டிப் பேயினை
நேர்ந்து குடியேற்றல் போல்,
ஆள்விற்றுப் பொன் வாங்கியே—செய்த பூணையோர்
ஆந்தைக்குப் பூட்டுதல்போல்,
கேள்விக்கு ஒருவரில்லை—உயிர்த்தேவியைக்
கீழ்மக்கட் காளாக்கினான்!

(பாடல் 245)

என்று தருமனின் அடாத செய்கையை, அநீதியை அவன் கண்டிக்கிருன். அத்துடன் நில்லாது,

செருப்புக்குத் தோல் வேண்டியே இங்குக் கொல்வரோ
செல்வக் குழந்தையினை!
விருப்புற்ற சூதினுக்கே—ஒத்த பந்தயம்
மெய்த்தவப் பாஞ்சாலியோ?

(பாடல் 246)

என்று பாடி பெண்ணொருத்தியைச் சூதாட்டத்தில் பந்தயப் பொருளாக்கிய கொடுமையை, அதாவது தனது பாஞ்சாலி சபதக் காவியத்தின் உயிர்நாடியை, பிரதானக் கருத்தைத் தொட்டுக்காட்டி விடுகிருன்.

வியாச பாரதத்தில் பாஞ்சாலியின் மானபங்கத்துக்குப் பின்னர் பீமனும், அர்ஜுனனும், நகுல சகதேவர்களும், பாஞ்சாலியும் சபதம் செய்து முடித்தவுடன் ஆகாயத்திலிருந்து பூமாரி பொழிந்ததாகவும், அர்ஜுனனின் கோபத்தைக் கண்டு பூமியும் உயிர்ராசிகளும் நடுங்கியதாகவும், சூரியன் இருண்டு போனதாகவும், தாவர சங்கமப் பொருள்களெல்லாம் கலங்கி விடுவதாகவும் கூறப்பட்டுள்ளது. வில்லி பாரதத்திலும் இவர்கள் எல்லோரும் சபதம் செய்து முடித்ததும் பல துர்ச்சகுனங்கள் நேர்ந்ததாகக் கூறப்பட்டுள்ளது. அதே சமயம் வில்லிபுத்தூரார் பாஞ்சாலியைச் சபைக்குக் கொண்டு சென்ற சமயத்திலும் பல துர்ச்சகுனங்கள் நிகழ்ந்ததாகவும், மேகங்கள் ரத்தத்தைப் பொழிந்ததாகவும், பகலிலேயே நட்சத்திரங்கள் தோன்றியதாகவும், நிலம் நடுங்கியதாகவும் பாடியுள்ளார். பாரதியும், பாஞ்சாலி சபதம் செய்து முடித்ததும்,

ஓமென்றுரைத்தனர் தேவர்—ஓம்
ஓமென்று சொல்லி உறுமிற்று வானம்!
பூமி யதிர்ச்சி யுண்டாச்சு ! விண்ணைப்
பூழிப் படுத்திய தாம்சுழற் காற்று.'

(பாடல் – 308)

என்று பாடியுள்ளான். அதே சமயம் பாஞ்சாலியைப் பந்தயப் பொருளாக்கித் தருமன் தோற்றுவிட்டதைக் கண்டு, துரியோதனாதியர் மகிழ்ச்சிப் பெருக்கில் குதியாட்டம் போட்டவுடனேயே, தருமம் அழிந்துவிட்டது என்றும், அதன் விளைவாகப் பிரபஞ்சமும் கடவுளர்களும்கூட நிலைகெட்டுக் குலைந்துபோய் விட்டன என்றும் பாடத் தொடங்கிவிடுகிறான்.

தருமம் அழிவெய்த, சத்தியமும் பொய்யாக,
பெருமைத் தவங்கள் பெயர்கெட்டு மண்ணாக,
வானத்துத் தேவர் வயிற்றிலே தீப்பாய,
மோன முனிவர் முறைகெட்டுத் தாம்மயங்க
வேதம் பொருளின்றி வெற்றுரையே ஆகிவிட,
நாதம் குலைந்து நடுமையின்றிப் பாழாக,
கந்தருவர் எல்லாம் களையிழக்க, சித்தர்முதல்
அந்தரத்து வாழ்வோர் அனைவோரும் பித்துறவே,
நான்முகனார் நாவடைக்க, நாமகட்குப் புத்திகெட,
வான்முகிலைப் போன்றதொரு வண்ணத் திருமாலும்
அறிதுயில்போய் மற்றாங்கே ஆழ்ந்ததுயில் எய்திவிட,
செறிதருநற் சீரழகு செல்வமெலாம் தானாகும்
சீதேவி தன்வதனம் செம்மைபோய்க் காரடைய,
மாதேவன் யோகம் மதிமயக்க மாகிவிட......

என்றெல்லாம் பாடிச் செல்கிறான் பாரதி. வியாசரையும் வில்லிபுத்தூராரையும் விஞ்சும் விதத்தில், பிரபஞ்சக் குழப்பத்தைப் பாடி நிற்கும் பாரதி, இதன்மூலம் ஓர் உண்மையையும் நமக்குப் புலப்படுத்தி விடுகிறான். அதாவது தருமமும் சத்தியமும் அழிந்து, தெய்வங்களும் அறிஞர்களும் முறைகெட்டுத் திரிந்து நிற்கின்ற ஒரு பைசாச உலகிலேதான், பெண்ணினத்துக்கு இத்தகைய கொடுமைகளை இழைக்க முடியும் என்பதே அந்த உண்மையாகும்.

இத்தகைய தீச்சகுனங்கள் கட்டியம் கூறி நிற்கும் வேளையில் தான், துரியோதனின் அதர்ம உணர்ச்சி மேலோங்கி நிற்கிறது. அவன் தனது தேர்ப்பாகனை அனுப்பி, பாஞ்சாலியை அழைத்து வரச் சொல்கிறான். தேர்ப்பாகன் பாஞ்சாலியிடம் சென்று துரியோ தனின் ஆணையைத் தெரிவித்தபோது, பாஞ்சாலி அவனிடம் பதில் தெரிந்து வருமாறு விடுக்கும் கேள்விகள், பாரதத்துப் பெண்ணினத் தின் கேள்விகளாகவே பாரதியின் வாயிலாக ஒலிக்கின்றன.

நாயகர் தாம் தம்மைத் தோற்றபின்—என்னை
நல்கும் உரிமை அவர்க்கில்லை—புலைத்
தாயத்திலே விலைப் பட்டபின் — என்ன
சாத்திரத்தால் எனைத் தோற்றிட்டார் ?

(பாடல் 256)

கௌரவ வேந்தர் சபைதன்னில் — அறம்
கண்டவர் யாவரும் இல்லையோ ? — மன்னர்
சௌரியம் வீழ்ந்திடும் முன்னரே — அங்கு
சரித்திரம் செத்துக் கிடக்குமோ ?

(பாடல் 257)

என்றும் அவள் எழுப்பும் கேள்வி பாரதத்தின் பெண்ணினத்தின் கேள்விகளேயாகும்.

தேர்ப்பாகனிடம் பல்வேறு கேள்விகளை எழுப்பி, அவனைத் திணற வடித்து விடுகிறாள் பாஞ்சாலி. தேர்ப்பாகனோடு பாஞ்சாலி வராததைக் கண்டு, துரியோதனன் தன் தம்பி துச்சாதனனையே அனுப்பி வைக் கிறான். துச்சாதனனோ பாஞ்சாலியிடம் தர்ம விசாரம் செய்து கொண்டிருக்க விரும்பவில்லை. அவன் அவளை நோக்கி,

ஆடி விலைப்பட்ட தாதிநீ — உன்னை
ஆள்பவன் அண்ணன் சுயோதனன்

(பாடல் 270)

என்றே கூறி, அவளை மன்னர் சபைக்கு வந்துவிடுமாறு கூறு கிறான். மேலும்,

......அந்தப்
பேடி மகனொரு பாகன் பால் — சொன்ன
பேச்சுக்கள் வேண்டிலன் கேட்கவே

என்றும் கூறி, நான் உன்னோடு வாதாட வரவில்லை என்று தெளிவு படுத்தி விடுகிறான்.

பாஞ்சாலியோ தான் மாதவிடாயில் இருப்பதால், ஒற்றை யாடையில் இருப்பதாகவும், தான் இந்நிலையில் சபைக்கு வருவது நியாயமல்ல என்றும் கூறிப் பார்க்கிருள். ஆனால் 'கருமமே கண்ணுன' துச்சாதனனே பாஞ்சாலியைப் பலவந்தமாகவே இழுத்து வர முனைகிருன்.

இங்கு ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டாக வேண்டும். எனது இந்தச் சொற்பொழிவு வியாசர், வில்லிபுத்தூரார், பாரதி ஆகிய மூவரும் பாஞ்சாலி சபதக் கதைப் பகுதியை எவ்வாறு கையாண்டுள்ளனர் என்பது பற்றிய ஒரு ஒப்புநோக்கைக் குறிக்கோளாகக் கொள்ளவில்லை. என்ருலும், பாரதி தனது காவியத்தின் கருப்பொருளுக்கேற்ப, எவ்வாறு கதை நிகழ்ச்சிகளையும் பாத்திரப் படைப்பையும் மாற்றியமைத்துக் கொள்கிருன் என்பதை இங்குச் சற்றே சுட்டிக் காட்ட விரும்புகிறேன். மகாபாரதக் கதையைப் படைத்தளித்த பெருமை வியாசருக்குண்டு. எனினும் அவரது பாத்திரப் படைப்பில் சில ரசக் குறைவான அம்சங்களும் உண்டு. உதாரணமாகத் தேர்ப்பாகன் பாஞ்சாலியிடம் சென்று அவள் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாமல் திரும்பி வந்த பின், துரியோதனன் அவனைக் கண்டிக்கின்ற சமயத்தில், தருமன் நம்பிக்கையான தூதன் ஒருவனிடம் பாஞ்சாலிக்கு ஒரு செய்தி சொல்லியனுப்புகிருன். அதாவது ''மாதவிடாயில் இருக்கும் அவள் ஒற்றையாடையோடு, அழுது கொண்டு சபைக்கு வந்து சேர்ந்தால், அதனைக் கண்டு சபையில் உள்ளோர் யாவரும் துரியோதனனையே அவமதிப்பர்; அவனையே சபிப்பர்'' என்று கூறி, அவளைச் சபைக்கு வருமாறு செய்தி அனுப்புகிருன். கட்டிய கணவனுன தருமனே பாஞ்சாலிக்கு இவ்வாறு செய்தி சொல்லியனுப்புவது, தருமனின் பாத்திரத்தை ரசக் குறைவானதாக ஆக்கி விடுகிறது. பாரதி தனது முகவுரையில் ''பெரும்பான்மையாக இந்நூலை வியாச பாரதத்தின் மொழி பெயர்ப்பென்றே கருதி விடலாம்'' என்று அவையடக்கமாகக் கூறிக் கொண்ட போதிலும், அவன் வியாச பாரதத்தில் காணப்படும் இத்தகைய ரசக் குறைவான பகுதிகளையெல்லாம் விலக்கி விடுகிருன். மேலும், அவன் தனது ''சித்திரம் வியாச பாரதக் கருத்தைத் தழுவியது'' என்றும் தனது முகவுரையில் கூறிக் கொண்ட போதிலும், அவன் வில்லிபுத்தூரார் பாரதத்தையும் படித்து, அதிலும், கொள்ளக் கூடியனவற்றைக் கொண்டும், தள்ளக் கூடியனவற்றைத் தள்ளியும் இருக்கிருன். அவ்வாறு கொண்டவற்றை அவன் தனது நோக்கத்

துக்கு ஏற்பச் செம்மைப்படுத்தியும் இருக்கிறான். உதாரணமாக, வில்லிபாரதத்தில் துச்சாதனன் பாஞ்சாலியை இழுத்து வர அந்தப் புரத்துக்குச் சென்று, அவளது கையை எட்டிப் பிடித்தவுடன், அவள் வலையில் பட்ட மான் போல் துடித்து, அபயம் நாடி, திருதராஷ்டிரனின் மனைவியான மாமி காந்தாரியின் அருகில் செல்கிறாள். துரியோதனை தியரைப் பெற்றெடுத்த காந்தாரியோ அவளுக்கு அபயம் அளிக்கவோ, அவளது கண்ணீரைத் துடைக்கவோ முனையவில்லை. மாறாக; ''அயலாரா அழைக்கிறார்கள்? சுற்றத்தார்தானே! அங்குச் சென்று உன் கருத்துரைக்க அஞ்சாதே. போ!'' என்றே கூறி விடுகிறாள் அவள்.

பூவார் குழலி தளர்வொடுதன்
புறஞ்சேர் பொழுதும் சிறிதிரங்காள்
நீ வாவென்றே அருகிருத்தி
நெடுங்கண் பொழியும் நீர்துடையாள்;
மேவாரல்லர், தமர் அழைத்தால்,
மேலுன் கருத்து விளம்பி வரப்
பாவாய்! அஞ்சாது ஏகென்றாள்
பல்பாதகரைப் பயந்தாளே

(சபா பருவம் - பாடல் - 218)

என்று பாடுவார் வில்லிபுத்தூரார். ஒரு பெண்ணுக்கு இழைக்கும் கொடுமையைக் கண்டு இன்னொரு பெண் மனம் இரங்காதிருக்கும் காட்சி இது. ஆனால் பாரதியோ பாரதக் கதையில் பாஞ்சாலி சபதப் பகுதியை எடுத்துப் பாட முற்படும்போது, பாரதக் கதையிலிருந்து காந்தாரி என்ற பெண் பாத்திரத்தையே அடியோடு விலக்கி விடுகிறான். அவனது பாஞ்சாலி சபதத்தில் இடம்பெறும் ஒரே ஒரு பெண் பாத்திரம் பாஞ்சாலி மட்டுமேதான். பெண்ணொருத்திக்கு இழைக்கப் படும் கொடுமையைக் காண, இன்னொரு பெண் சாட்சியமாக இருப் பதைக் கூட அவனால் சகித்துக் கொள்ள முடியவில்லை. எனவே, காந்தாரியின் பாத்திரத்தை அவன் அடியோடு விலக்கி விடுவதோடு மட்டுமல்லாமல், காந்தாரியைப் பற்றிக்கதையில் எந்தக் குறிப்புமே இல்லாமலும் செய்து விடுகிறான்.

ஆயினும் அதே சமயத்தில் அவன் வியாச பாரதத்தில் இல்லாத ஒரு காட்சியை, வில்லி பாரதத்திலிருந்து எடுத்துப் பயன்படுத்திக்

கொள்கிறான். உதாரணமாக வியாசபாரதத்தில், துச்சாதனன் பாஞ்சாலியைச் சபைக்கு இழுத்து வர முற்படும்போது, அவள் அழுது கொண்டே அடைக்கலம் தேடி அந்தப்புரம் நோக்கி ஓட முனைகிறாள். ஆனால், துச்சாதனனே அதற்குள் ஓடிப் போய், அவளது கூந்தலைப் பற்றிப் பிடித்து நேராகச் சபைக்கே இழுத்து வந்து விடுகிறான். அதாவது அரண்மனையின் ஒரு பகுதியான அந்தப்புரத்திலிருந்து, மறு பகுதியான அரசசபைக்குப் பாஞ்சாலியை இழுத்து வந்ததாகவே வியாச பாரதத்தில் கூறப்பட்டுள்ளது. வில்லி பாரதத்திலோ, துச்சாதனன் அவளை வீதி வழியாகவே அரச சபைக்கு இழுத்து வந்த தாகப் பாடப்பட்டுள்ளது. அவ்வாறு பாஞ்சாலியை இழுத்து வரும் போது, இந்தக் காட்சியைக் கண்ட மக்கள் அதனைக் காணச் சகிக்காது தம் கண்களில் கையால் அடித்துக் கொள்கிறார்கள்; அழுகிறார்கள்; இந்த அநியாயத்தைக் கண்டு மனம் வெதும்பி, துரியோதனாதியரைச் சபிக்கிறார்கள்; தருமன் அவளைப் பந்தயத்தில் தோற்றது விதியின் செயல் போலும் என இரங்கிக் கூறிக் கொள்கின்றனர்.

> "நெடுமா நகரின் சனம னைத்தும்
> நேயம் பெறக் கண்டு இவை கூறி"
>
> (பாடல் 226)

இரங்கினர் எனப்பாடுவார் வில்லிபுத்தூரார். வியாசபாரதத்தில் காணப்படாத, வில்லி பாரதத்தில் காணப்படுகின்ற இந்தக்காட்சியைக் பாரதி பயன்படுத்திக் கொள்கிறான். பாஞ்சாலியின் தலைமயிரைப் பிடித்து அவளைக் கரகரவென வீதி வழியே இழுத்து வருகின்ற கோரக் காட்சியை, பெண்மைக்கு இழைக்கப்படும் கொடுமையின் இரண்டாவது கட்டத்தை, பாரதி மிகுந்த ஆத்திரத்தோடு வருணிக் கிறான். இவ்வாறு பாஞ்சாலியை மட்டு மரியாதையின்றி, வீதி வழியே இழுத்து வருகின்ற அலங்கோலத்தை வழி நெடுகிலும் நின்று மக்கள் கண்டு கொண்டிருந்தனர். எனினும் அவர்களில் ஒருவருக்கேனும் இந்த அநியாயத்தைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்ற உணர்வோ உத்வேகமோ பிறக்கவில்லை. இவ்வாறு அதனைத் தட்டிக் கேட்கவோ தடுத்து நிறுத்தவோ முனையாது நின்ற மக்களை, பாரதி மக்களென்றே மதிக்கவில்லை. இதனை அவன்,

> பாண்டவர் தம் தேவியவள், பாதியுயிர் கொண்டு வர,
> நீண்ட கருங்குழலை நீசன் கரம்பற்றி
> முன்னிழுத்துச் சென்றான் வழிநெடுக மொய்த்தவராய்
> 'என்ன கொடுமை இது;' என்று பார்த்திருந்தார்

என்று வில்லிபுத்தூராரை அடியொற்றியே பாடுகிறான். எனினும் பெண் விடுதலைக்காகக் குரல் கொடுக்கும் பாரதி, அடுத்து வரும் அடிகளில், அந்த மக்களின் கோழைத் தன்மையயும், அடிமைப் புத்தியையும் ஆத்திரத்தோடு தாக்கி, கவிக் கூற்றாகவே பாடுகிறான்:

ஊரவர்தம் கீழ்மை உரைக்கும் தரமாமோ ?
வீரமிலா நாய்கள்! விலங்காம் இளவரசன்
தன்னை மிதித்துத் தராதலத்திற் போக்கியே,
பொன்னை அவள் அந்தப் புரத்தினிலே போக்காமல்
நெட்டை மரங்களென நின்று புலம்பினார்
பெட்டைப் புலம்பல் பிறர்க்குத் துணையாமோ ?

இவ்வாறு மனம் கொதித்துப் பாடி விட்டு, மேலும் கதையைக் கூறத் தொடங்குகிறான்.

பாஞ்சாலியை வீதி வழியே இழுத்து வந்தபோது, மக்கள் எவ்வாறு செயலிழந்து நின்றார்களோ, அவ்வாறு நாட்டின் அறநிலையமாகக் கருதப்படும் அரச சன்னிதானத்திலுள்ள அறிஞர் பெருமக்களும், தர்ம கர்த்தாக்களும் செயலிழந்தே நிற்கின்றனர். பாஞ்சாலிக்குத் துரியோதனனும் அவனது சகாக்களும் இழைக்கும் கொடுமையை எதிர்த்து, பாஞ்சாலியின் கணவர்களான பாண்டவர்களோ, அல்லது வேறு எவரோ தமது கண்டனக் குரலை எழுப்பவில்லை. அந்த அநீதியைத் தடுக்கக் கை நீட்டவில்லை. அது மட்டுமல்ல. அறிஞர் பெருமக்களில் ஒருவனாகக் கருதப்படும் வீட்டுமாசார்யனோ, பாஞ்சாலிக்கு இழைக்கப்படும் கொடுமை சாஸ்திர சம்மதமானதே எனச் சட்டம் படிக்கத் தொடங்கித் தலை குனிகிறான். அதாவது மனசாட்சி ஏற்றுக் கொள்ளாத ஒரு சட்டத்தை, அது மனசாட்சிக்கு விரோத மானதாக இருந்த போதிலும், அதனை முறித்தெறியச் சக்தியோ, தெம்போ, திராணியோ இல்லாத தனது ஏலாத்தனத்தை அம்பலப் படுத்திக் கொள்கிறான்:

இப்பொழுதை நூல்களினை எண்ணுங்கால், ஆடவருக்கு
    ஒப்பில்லை மாதர்; ஒருவர் தன் தாரத்தை
விற்றிடலாம்; தானமென வேற்றுவர்க்குத் தந்திடலாம்
    முற்றும் விலங்கு முறைமையன்றி வேறில்லை

என்றும்,

...சாத்திரம்தான்
வைகும் நெறியும் வழக்கமும் நீ கேட்பதனுல்
ஆங்கவையும் நின் சார்பில் ஆகா வகை உரைத்தேன்
தீங்கு தடுக்கும் திறமிலேன்

என்று கூறி, தரும சாஸ்திரம் தனது கைகளைக் கட்டிப் போட்டு விட்டது என்று தனது கையாலாகாத் தனத்துக்குச் சட்ட நியாயம் கற்பிக்க முனைகிருன்.

இவ்வாறு வீட்டுமாசார்யன் சாஸ்திர சம்மதம் குறித்துப் பேசியதைக் கேட்ட பாஞ்சாலி, அந்தச் சாஸ்திரங்களையே தாக்கிப் பேசுகிருள்.

பேயரசு செய்தால் பிணம் தின்னும் சாத்திரங்கள்

என்று அந்தச் சாஸ்திரங்களையும் அதனை உருவாக்கியவர்களையுமே அவள் தாக்குகிருள். எனினும் 'பேயரசு செய்யும்' அந்த அரச சபையில் பாஞ்சாலியின் மானம் காப்பாற்றப்படவில்லை. அவளது துகில் பறிக்கப்படுகிறது. பாஞ்சாலிக்கு இழைக்கப்படும் கொடுமை யைக் கண்டு பாண்டவர்களைச் சேர்ந்த பீமனுக்கு ஆத்திரம் பொங்கு கிறது. அண்ணன் செய்து விட்ட தீமையை, கட்டிய மனைவியைச் சூதாடித் தோற்றுவிட்ட சிறுமையைக் கண்டு அவன் கொதித் தெழுகிருன்.

இது பொறுப்பதில்லை—தம்பி!
எரிதழல் கொண்டு வா!
கதிரை வைத்திழந்தான்—அண்ணன்
கையை எரித்திடுவோம்

(பாடல் 281)

என்று ஆத்திரப்படுகிருன்.

இத்தகைய ஆத்திரத்துக்கும் அவமானத்துக்கும் மத்தியில், தருமத்தின் குரல் அடியோடு செத்துவிடவில்லை என்பதை உணர்த்தும் விதத்தில் ஒரே ஒரு குரல் மட்டும் பாஞ்சாலிக்காக வாதாட முன் வருகிறது. அந்தக் குரல் விகர்ணன் என்ற இளைஞனின் குரல். அவன் ஒருவன்தான் வீட்டுமாசார்யனின் 'சாஸ்திர சம்மத' மான பேச்சை வெட்டிப் பேசுகிருன்.

......விலே மாதர்க்கு
விதித்ததையே பிற்கால நீதிக்காரர்
சொந்தமெனச் சாத்திரத்தில் புகுத்தி விட்டார்

என்று அவன் சாஸ்திர கர்த்தாக்களேயே தாக்கிப் பேசுகிருன். விகர்ணன் பேச்சில்தான் அந்தச் சபையில், அதாவது உலகில், தரு மத்தின் குரல் அடியோடு ஒடுங்கி ஓய்ந்து போய்விடவில்லை என்ற உண்மை புலப்படுகின்றது. விகர்ணனின் பேச்சுத்தான் அங்குக் கூடி நின்ற மன்னர்களின் அவிந்து கிடந்த மனச்சாட்சியைத் தூண்டி விடும் தூண்டுகோலாக அமைகிறது. இதன் காரணமாக அவர்கள் தமது ஆட்சேபத்தையும் கண்டனத்தையும்தான் தெரிவிக்கிருர்களே ஒழிய, பாஞ்சாலிக்குப் பலவந்தமாக இழைக்கப்படும் கொடுமையைத் தடுத்து நிறுத்துவதே சரியான தர்மம் என்பதை உணரத் தவறி விடுகின்றனர்.

எனவே, பாஞ்சாலி மானபங்கத்துக்கு ஆளாகிருள். மான பங்கத்துக்கு ஆளாகி நின்ற பாஞ்சாலிதான் தன்னை அவமானப் படுத்தியவர்களைப் பழிக்குப் பழி வாங்கியே தீருவேன் என்று சபதம் செய்கிருள். தன்னைத் துகிலுரித்து அவமானப்படுத்திய துச்சாதனனின் ரத்தத்தையும், அவனைத் தூண்டிவிட்ட துரியோதனனின் ரத்தத்தை யும், தனது கூந்தலில் அள்ளிப்பூசுவதாகச் சபதம் செய்கிருள்; அவர்கள் செய்த அவமானத்தால்அவிழ்ந்து குலைந்த கூந்தலைத் தனது சபதம் நிறைவேறும் வரையிலும் அள்ளி முடிப்பதில்லை என்றும் விரதம் பூண்கிருள்.

இத்துடன் பாரதியின் பாஞ்சாலி சபதக் கதை முற்றுப் பெறுகிறது.

## உறை பொருள் என்ன?

இதிலிருந்து பாரதி ஏன் பாஞ்சாலியின் கதையைப் பாடினுன் என்ற கேள்விக்கு, பெண் விடுதலை பற்றிய பாரதியின் நோக்குத் தான் காரணம் என்பதை நாம் புரிந்து கொள்ளலாம். ஆயினும், தனது நோக்கத்துக்கு இந்தக் கதையை அவன் தேர்ந்தெடுத்துக் கொண்டது ஏன்? அவ்வாறு தேர்ந்தெடுத்த போதும் கதையைப் பாஞ்சாலியின் சபதத்தோடு நிறுத்திக் கொண்டதற்குக் காரணம் என்ன? என்ற கேள்விகள் எழுகின்றன.

முதலாவது கேள்வியைப் பார்ப்போம்: பாரதி இந்தக் கதையைத் தேர்ந்தெடுத்ததேன் ?

பாரதக் கதையில் பாஞ்சாலி துரியோதனனின் சபையில் அவனது தம்பி துச்சாதனனால் மானபங்கம் செய்யப்படுகிறாள்; துகிலுரியப்படுகிறாள். துகிலுரியப்படும் இடமோ நீதி தேவனின் கொலுபீடமாகக் கருதப்படும் அரச சன்னிதானம்; அந்தச் சன்னிதானத்தில் குழுமியிருப்பவர்களோ நூல் வல்லார்கள்; சாஸ்திர விற்பன்னர்கள்; அரச வம்சத்தினர்; ஆண்மை மிகுந்த வீரர்கள். இத்தகையதொரு 'சத்சங்க'த்தின் சந்நிதியில்தான், ஒரு பெண், ஓர் அரசகுமாரி ஓர் ராஜ்யத்தின் ராணி, வீரர்களின் மனைவி மானபங்கப்படுத்தப்படுகிறாள். இந்த மானங்கெட்ட செயலைத் தடுத்து நிறுத்த அங்கிருந்த யாருக்குமே வலியில்லை; வகையில்லை. கூடி நிற்கும் மனிதகுல மாணிக்கங்கள் எவரும் தனது பாதுகாப்புக்கு வழிகோல முன் வரவில்லை என்ற நிலைமையில்தான், பாஞ்சாலி தனக்குக் கடவுளைத் துணைக்கு அழைத்துக் குரல் கொடுக்கிறாள். இந்நிலையில் திக்கற்று நிற்கும் பெண்ணுக்குத் தெய்வமே துணை என்ற முறையில், கண்ணனின் திருவிளையாடலால் பாஞ்சாலி காப்பாற்றப்படுகிறாள் என்பதே கதை.

பாரதக் கதை இந்திய இதிகாசத்திலேயே மிகவும் பழைமையானது. எனவே, பாரதத்தில் காணப்படும் பழக்க வழக்கங்களும் பாரதக் கதை தோன்றிய காலத்துக்கு முன்பே வழக்கில் இருந்து வந்திருக்க வேண்டும். அதாவது பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, பாரதக் கதை பிரதிபலிக்கும் சமுதாய அமைப்பும் கட்டுப்பாடும் இருந்திருக்க வேண்டும். எனவே பாஞ்சாலிக்கு இழைக்கப்பட்ட கொடுமையும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நிகழ்ந்த ஒன்றாகத்தான் இருக்க வேண்டும்.

ஓர் அரசகுமாரி, பட்டமகிஷி, வீரர்களான பாண்டவர்களின் மனைவி என்றெல்லாம் கூறக்கூடிய பெண்ணொருத்திக்கு, அரசர்களும் சாஸ்திர விற்பன்னர்களும் நிறைந்த சபையில், அதாவது நீதியை நிலைநாட்ட வேண்டிய நீதி மன்றத்திலேயே, இத்தகைய கொடுமை நிகழ்ந்திருக்குமானால், அந்தக் காலத்தில் அந்த நாட்டில் வாழ்ந்த சாதாரணப் பெண்களின் நிலை எவ்வாறு இருந்திருக்கும்? அதை நம்மால் கற்பனைகூடச் செய்துபார்க்க முடியுமா? அன்று தொடங்கிய, அல்லது அதற்கும் முன்பே நிலவி வந்த பெண்ணடிமைத்தனம், பாஞ்சாலியின் சபதம் நிறைவேறியதுடன் முடிவுகண்டுவிட்டதா? பாஞ்சாலிக்கு இழைக்கப்பட்ட கொடுமை, பாரதி வாழ்ந்த இருபதாம்

நூற்றுண்டில் மட்டும் மறைந்து விட்டதா? அவ்வாறு மறைந்திருந் தால், பீஜித் தீவிலிருந்த கரும்புத் தோட்டத்துப் பெண்களுக்காகவும் நடிப்புச் சுதேசிகளின் கையாலாகாத் தனத்துக்காகவும் அவன் கண்ணீர் சிந்தியிருக்க வேண்டியதில்லை; கனன்று பொங்கியிருக்க அவசியமில்லை. எனவே, பாஞ்சாலியின் காலம் தொட்டும், ஏன் அதற்கு முன்பிருந்தும்கூட, பெண்களுக்கு இழைக்கப்பட்டு வந்த சமூக அநீதி, பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னும் அழிந்தொழியவில்லை என்பதையும், அந்த அநீதி எவ்வாறு சமூகத்தில் வேரோடி விழுதோடி நிற்கின்றது என்பதையும் உணர்ந்து, அத்தகைய நச்சுமரத்தை வேரோடும் வேரடி மண்ணேடும் வெட்டி வீழ்த்த வேண்டியது அவசியம் என்ற காரணத்திஞல்தான் பாரதி பாஞ்சாலி சபதக் கதையைத் தேர்ந்தெடுத்துப் பாடிஞன் என்று நாம் கூறலாம்.

அவ்வாறு பாடிய போதும், அவன் பாரதி ஏன் பாஞ்சாலியின் சபதத்தோடு கதையை முடித்துக் கொண்டான்?

பாஞ்சாலியின் விரதம் பாரதக் கதையிலேதான் முடிவுற்றதே யன்றி, பாரத சமுதாயத்துப் பெண்களின் வாழ்வில் முடிவுறவில்லை. பாரத காலத்திலேயே நிலவிய பெண்ணடிமைத்தனம், பாரதி வாழ்ந்த இருபதாம் நூற்றுண்டிலும் நீடித்தது. பாரதக் கதையில்தான் பாஞ் சாலியின் கூந்தல் அள்ளி முடிக்கப்பட்டதே தவிர, பாரத நாட்டுப் பெண்களின் வாழ்வில், அவர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமையின் காரணமாக அவர்களது கூந்தல் அவிழ்ந்து விழுந்து கொண்டேதான் இருந்தது. பாரதியைப் பொறுத்த வரையில், பாரத நாட்டுப் பெண் குலத்தின் பிரதிநிதியாக, பாஞ்சாலி பாரத காலத்தில் எடுத்த சபதம், பாரதி காலத்திலும் நிறைவேருத சபதமாகவே இருந்து வந்தது. எனவேதான் பாரத நாட்டுப் பெண் குலத்தின் சகல அடிமைத்தனங்களும் நீங்கி, அவர்கள் விடுதலை பெறும் நாளில்தான், பாஞ்சாலியின் சபதம் உண்மையிலேயே நிறைவேறும், அதுவரை யிலும் பாஞ்சாலியின் சபதம் ஒலித்துக்கொண்டே இருக்கும், இருக்க வேண்டும் என்பதே பாரதியின் நோக்கமாக இருந்திருக்க வேண்டும். எனவேதான் அவன் தன் கதையைப் பாஞ்சாலியின் சபதத்தோடு முடித்துக் கொண்டான். இதுதான் பாரதியின் பாஞ்சாலி சபதத்தின் உறை பொருளாகும்.

இந்த உறை பொருளைத் தவிர, பாரதியின் பாஞ்சாலி சபதத்தில் ஏதேனும் மறைபொருளும் உண்டா? உண்டு என்றே நாம் கூறலாம்.

அதனைப் புரிந்துகொள்வதற்கு. நாம் பாரதி பாஞ்சாலி சபதத்தை இயற்றிய காலச் சூழ்நிலையையும், அந்தக் காலத்தில் பாரதிக்கிருந்த மனோநிலையையும் தெரிந்துகொள்ள வேண்டும்.

## பாஞ்சாலி சபதம் இயற்றப்பட்ட காலம்

பாரதி 1908ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் சென்னையிலிருந்து வெளியேறி, பாண்டிச்சேரியில் அடைக்கலம் புகுந்து, மூன்றாண்டு களுக்கும் மேல் கழிந்த பின்னர், 1912ல்தான் பாரதியின் 'பாஞ்சாலி சபதம்' பாரதியாலேயே வெளியிடப்பட்டது. அப்போதும் அவனிருந்த நிலைமையில், நிதி வசதி இல்லாத காரணத்தால், அதன் முதல் பாகத்தை மட்டுமே அவனால் வெளியிட முடிந்தது. அதன் இரண்டாம் பாகமும் சேர்ந்த முழுநூல், பாரதியின் மறைவுக்குப் பின் 1924ல் தான் சென்னையிலிருந்து பாரதி பிரசுராலயத்தால் வெளியிடப்பட்டது. எனவே பாரதி தனது பாஞ்சாலி சபதத்தை 1911ஆம் ஆண்டில் இயற்றி முடித்திருக்கக் கூடும் என்று நாம் கொள்ளலாம்.

பாரதி பாஞ்சாலி சபதத்தை இயற்றி வெளியிட்ட இந்தக் காலத்தின் சூழ்நிலை எவ்வாறு இருந்தது?

1905ஆம் ஆண்டில் நிகழ்ந்த வங்கப் பிரிவினையையொட்டி இந்திய நாட்டில் தீவிரத் தேசியவாத இயக்கம் வீறுபெற்று எழுந்த காலத்தில், பாரதி அந்த இயக்கத்தில் ஈடுபட்டிருந்த தேசியக்கவிஞனாகவே விளங்கினான் என்றும், அதே காலத்தில் ஆயுதந்தாங்கிப் போராடும் விடுதலைப் போராட்டத்தை நோக்கமாகக் கொண்டு, நமது நாட்டில் புரட்சி நோக்கங்கொண்ட ரகசியச் சங்கங்களும் மும்முரமாகச் செயல்படத் தொடங்கின என்றும், தீவிரத் தேசிய வாத இயக்கத்தின் தலைவர்களும்கூட, ஆயுதம் தாங்கிப் போராடும் விடுதலைப் போராட்டத்தை நிராகரிக்கவில்லை என்றும், பாரதியும் அக்காலத்தில் அத்தகைய கருத்தையே கொண்டிருந்தான் என்றும், அதற்கு அனுசரணையாகவே அவனது கவிதைகளும் கதையும் கூட இருந்தன என்றும் முதல் சொற்பொழிவின்போது நாம் குறிப்பிட்டோம்.

உலகின் பல நாடுகளிலும் நாட்டின் விடுதலைக்காக ஆயுதம் தாங்கிய போராட்டத்தில் ஈடுபடும் புரட்சி நோக்கத்தோடு, ரகசியச் சங்கங்களும் இயக்கங்களும் தோன்றிச் செயல்படும் காலத்தில்,

ஆயுதம் தாங்கிய போராட்டத்தை இறுதி லட்சியமாகக் கொண்டு செயல்பட முனையும் இளைஞர்கள், அதிகார வர்க்கத்தின் அடக்கு முறையையும் அதிகாரிகள் செய்யும் கொடுமையையும் சகித்துக் கொள்ள முடியாமல், பொறுமை இழந்து, தமது இயக்கத்தின் அடியாரம்ப நாட்களில் துர்ப்பாக்கியவசமாகப் பாலாரிஷ்டம் போல், இளம் பிள்ளைவாதம் போல் தோன்றும் வெடிகுண்டு வீச்சு முதலிய தனிநபர் பயங்கரவாதச் செயல்கள் போன்ற அராஜகப் போக்கு களிலும் ஈடுபட்ட, ஈடுபடுகின்ற நிலையை நாம் உலக வரலாற்றில் காண முடியும். இதற்கு இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் இந்திய நாட்டில் செயல்பட்டு வந்த ரகசியச் சங்கங்களும் விதி விலக்காக இருக்கவில்லை. இந்திய நாட்டில் அன்னியர் ஆட்சியை எதிர்த்து விடுதலை பெறும் வேட்கையோடு புரட்சி இயக்கத்தில் ஈடுபட்டு வந்த இளைஞர்கள் ஆங்கிலேய அதிகார வர்க்கத்தினர் அத்துமீறி அக்கிரமங்களையும் அடக்குமுறையையும் மேற்கொண்டு வந்த காலத்தில், அத்தகையோரைத் துப்பாக்கி வேட்டினுலோ, வெடிகுண்டினுலோ தீர்த்துக் கட்டுவதும் நியாயம் என்றும், அதுவும் புரட்சி இயக்கத்தின் ஒரு பகுதிதான் என்றும் கருதினர். இதனுல், வங்கப் பிரிவினை எதிர்ப்பு இயக்கத்தையும், வந்தே மாதர கோஷத்தையும் தான்தோன்றித் தனமாக அதிகாரத்தைப் பயன்படுத்தி அடக்கி ஒடுக்க முயன்றவனை கிழக்கு வங்கா ளத்தின் லெப்டினென்ட் கவர்னர் சர் பாம்பைல்டு புல்லர் என்பவனை அரவிந்தரின் தம்பி பரீந்திர கோஷும் பிறரும் கொல்லத், திட்டமிட்டனர். இதனுல் அவர்கள் 1907 டிசம்பர் 6ஆம் தேதியன்று, புல்லர் பயணம் செய்த ரயிலை வெடி வைத்துத் தகர்க்க முயற்சி செய்தனர். ஆனுல் இந்த முயற்சி பலிக்கவில்லை. வெடி வைத்ததால் ரயில் தடம் புரண்டதே தவிர, புல்லரோ வேறு எவருமோ சாகவில்லை புல்லரும்கூட இதன் பின் இங்கிலாந்துக்கு ஓடிப் போய் விட்டான். இதன் பின் வங்கப்பிரிவினை எதிர்ப்பு இயக்கம் நடந்து வந்த காலத்தில், பல தேசபக்தர்களுக்கும் பத்திரிகை ஆசிரியர்களுக்கும் சிறைத் தண்டனை விதித்தவனும், சுசில் சென் என்ற பள்ளி மாண வனுக்கு முச்சந்தியில் சவுக்கடி கொடுக்குமாறு தண்டனை விதித்தவனு மான கல்கத்தா நகரத் தலைமை நீதிபதி கிங்ஸ்போர்டைக் கொல்ல அவர்கள் குறி வைத்தனர். அப்போது பீகாரில் முஜாபர்பூரில் நீதி பதியாக இருந்த கிங்ஸ்போர்டைக் கொல்வதற்காகப் பதினேழு வயதான பிரபுல்லா சக்கி என்ற இளைஞனையும், பதினுறு வயதுகூட நிரம்பாத குதிராம் போஸ் என்ற இளைஞனையும் ரகசிய இயக்கத்தைச்

சேர்ந்தவர்கள் வெடிகுண்டுடன் முஜபர்பூருக்கு அனுப்பி வைத்தனர். அவர்கள் 1908 ஏப்ரல் 30 அன்று கிங்ஸ்போர்டைக் கொல்ல முயன்றனர். ஆனால் கிங்ஸ்போர்டின் மாளிகையில் இருந்து வெளிவந்த இரண்டு கோச் வண்டிகளில் கிங்ஸ்போர்டு இரண்டாவது வண்டியில் இருந்ததைத் தெரிந்து கொள்ளாமல், முதல் வண்டியின்மீது இருவரும் வெடிகுண்டுகளை வீசியதால், அந்த வண்டியில் வந்த இரு ஆங்கில மாதரே கொலையுண்டனர். பிரபுல்லா சக்கி போலீசார் தன்னைப் பிடிக்குமுன் தன்னைத் தானே சுட்டுக் கொண்டு இறந்து விட்டான்; குதிராம்போஸ் போலீசாரிடம் பிடிபட்டான். இதனைத் தொடர்ந்து அரவிந்தரின் தம்பி பரீந்திரகோஷ் பங்கெடுத்து வந்த ரகசியச் சங்கத்தின் இருப்பிடமான மானிக்டோலா தோட்ட ஆசிரமம் சோதனையிடப்பட்டது; அங்கிருந்த வெடிகுண்டுகள், தோட்டாக்கள் முதலியன கைப்பற்றப்பட்டன. பரீந்திரகோஷ், அரவிந்தர் உட்பட 34பேர் கைது செய்யப்பட்டனர். இந்தக் கொலை வழக்குத்தான் பிரசித்தமான அலிப்பூர் சதி வழக்காகும். இதற்குக் காரணமாக விளங்கிய வெடிகுண்டு வீச்சுத்தான் இந்தியாவில் நிகழ்ந்த முதல் வெடிகுண்டு நிகழ்ச்சியும் ஆகும்; வெடிகுண்டு வீச்சின் தொடக்கமாகும். இதனைத் தொடர்ந்து இத்தகைய வேறுபல நிகழ்ச்சிகளும் நிகழ்ந்தன. 1911 ஜூன் 7 அன்று மணியாச்சியில் ஆஷ் துரையை வாஞ்சிநாதன் சுட்டுக் கொன்றதும் இத்தகையதொரு நிகழ்ச்சியேயாகும்.

1908ஆம் ஆண்டில் முதல் வெடிகுண்டு நிகழ்ச்சியைத் தொடர்ந்து 1911 ஆண்டு வரையில் நிகழ்ந்து வந்த நிகழ்ச்சிகள் யாவும், பயங்கரவாதத் தன்மை கொண்ட பலாத்கார நடவடிக்கையானது, அரசாங்கம் விடுதலை இயக்கத்தின் மீது முன்னெென்றும் காணாத அடக்குமுறையைக் கட்டவிழ்த்துவிடுவதற்கே வழி வகுக்கிறது என்பதையும், இதன் மூலம் அரசாங்கம் விடுதலை இயக்கத்தையே கொடிய அடக்குமுறையை மேற்கொண்டு நசுக்க முனைவதற்கு, அதற்கு ஒரு நியாயத்தையும் தேடி விடுகிறது என்பதையுமே புலப்படுத்தின. மேலும், ஆங்கிலேயர் சிலரைக் கொல்வதன் மூலம் ஆங்கிலேயர் ஆட்சி ஒழிவதற்குப் பதிலாக, அது தனது அடக்குமுறை ஆயுதத்தைப் பலப்படுத்தி, மேலும் நன்றாகக் காலூன்றிக் கொள்ளவும், வீரம் படைத்த இளைஞர்கள் சிலர் வீணாகப் பலியாகவும், அதே சமயம் அரசாங்கம் தலைவர்களையும் தொண்டர்களையும் சிறைக்குள்ளே தள்ளி விடும் நிலையில், விடுதலை இயக்கமே தலைமையை

இழந்து தறிகெட்டுச் சிதறிப் போகவும், இதனால் நாட்டு விடுதலையை அருகிலே கொண்டு வருவதற்குப் பதிலாக, அதனை வெகுதூரத்துக்கு அடித்து விரட்டி விடவும் தான் வழி வகுக்கும் என்பதையே இந்த நிகழ்ச்சிகள் புலப்படுத்தின. உண்மையில் இவ்வாறுதான் நடந்தது.

1907 டிசம்பரில் வங்காளத்தின் லெப்டினென்ட் கவர்னரான புல்லரைக் கொல்ல முயன்ற முயற்சிக்குப் பின்னால், ஆங்கிலேய அரசாங்கம், ரகசிய இயக்கங்களின் மீது மட்டுமல்லாது, தீவிரத் தேசியவாத இயக்கத்தின் மீதும் அடக்குமுறையைப் பெருமளவில் கட்டவிழ்த்து விட்டது.

தமிழ்நாட்டில் வ. உ. சிதம்பரம் பிள்ளையும், சுப்பிரமணிய சிவாவும் 1908 மார்ச் 12ஆம் தேதியன்று கைது செய்யப்பட்டு விசாரணைக் கைதிகளாகச் சிறையில் அடைக்கப்பட்டனர். அதே மாதம் 17ஆம் தேதியன்று பாரதியின் நண்பரான காஞ்சிபுரம் கிருஷ்ணசாமி சர்மா, கரூரில் நடந்த கூட்டத்தில் வ. உ. சி. யையும் சிவாவையும் கைது செய்ததைக் கண்டித்துப் பேசிய காலத்தில் 'ராஜத்துரோகமாக'ப் பேசி விட்டார் என்ற குற்றத்துக்காக, கோயமுத்தூர் நிதீமன்றத்தில் விசாரிக்கப்பட்டு ஐந்தாண்டுச் சிறைத் தண்டனைக்கு உள்ளானார். இதே போல் பாரதியின் மற்றொரு நண்பரான ஹரி சர்வோத்தம ராவ், அதே மார்ச் மாதம் 26ஆம் தேதி தமது 'சுயராஜ்யா' பத்திரிகையில் வ. உ. சி., சிவா ஆகியோர் கைது செய்யப்பட்டதைக் கண்டித்து எழுதியதற்காக, மூன்றாண்டுச் சிறைத் தண்டனை பெற்றார். இதன் பின் 1908 ஜூலை 7ஆம் தேதியன்று திருநெல்வேலி ஜில்லாக் கோர்ட்டில் வ உ. சி. க்கும் சிவாவுக்கும் எதிராக நடந்த ராஜத்துரோக வழக்கில் வ. உ. சி. க்கு இரட்டை ஆயுள் தண்டனையும், சிவாவுக்குப் பத்தாண்டுத் தண்டனையும் விதிக்கப்பட்டன. இவர்களுக்குச் சிறைத் தண்டனை விதித்ததைக் கண்டித்து அதே மாதம் 27ஆம் தேதியன்று பாரதியின் மற்றொரு நண்பரான சுரேந்திரநாத் ஆர்யா பேசிய குற்றத்துக்காக அவரும் ஐந்தாண்டுச் சிறைத் தண்டனை பெற்றார். இதற்கு அடுத்த மாதம், அதாவது 1908 ஆகஸ்டு 21ஆம் தேதியன்று சென்னையில் பாரதியின் 'இந்தியா' பத்திரிகை அலுவலகம் சோதனையிடப்பட்டது. அதன் ஆசிரியராகச் சட்டப்படி அறிவிக்கப்பட்டிருந்த முரப்பாக்கம் சீனிவாசன் என்பவர் கைது செய்யப்பட்டார். 'இந்தியா பத்திரிகையில் 1908 மே மாதத்திலும் ஜூன் மாதத்திலும் வெளிவந்த கட்டுரைகளுக்காக,

சீனிவாசனுக்கு 1908 நவம்பர் 13 அன்று ஐந்தாண்டுக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. 'இந்தியா' பத்திரிகை அலுவலகம் சோதனையிடப்பட்ட காலத்தில், அங்கிருந்து தப்பித் தலைமறைவாகி விட்ட பாரதி சில நாட்களில் பாண்டிச்சேரி போய்ச் சேர்ந்து விட்டான். அவனும் கைதாகியிருந்தால், அவனுக்கும் எத்தகைய கொடிய தண்டனை விதிக்கப்பட்டிருக்குமோ, தெரியவில்லை.

அன்றைய சென்னை மாகாணத்தில் மேற்கண்ட நிகழ்ச்சிகள் நடைபெற்ற அதே சமயத்தில், பம்பாயிலும் வங்கத்திலும் இதே போன்ற பல நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன.

வ. உ. சி. திருநெல்வேலியில் விசாரணைக் கைதியாகச் சிறையில் அடைபட்டிருந்த காலத்திலேயே, அவரது குருநாதரான திலகர் முஜாபர்பூரில் நடந்த வெடிகுண்டு வீச்சைப் பற்றி எழுதிய கட்டுரைகளுக்காக, 1908 ஜூன் 6 அன்று கைது செய்யப்பட்டார். வ. உ. சி. க்கு இரட்டை ஆயுள் தண்டனை விதித்த ஒரு வார காலத்துக்குள் திலகரின் மீது விசாரணை தொடங்கியது. 1908 ஜூலை 22ஆம் தேதி அவருக்கு ஏழாண்டுச் சிறைத் தண்டனை விதிக்கப் பட்டது; மேலும், திலகரை ஆங்கில அரசாங்கம் பர்மாவிலிருந்த மாண்டலே சிறைக்கு அனுப்பி வைத்தது. இதேபோல் வங்காளத்திலும் 1908 ஏப்ரலில் நடந்த முஜாபர்பூர் வெடிகுண்டு நிகழ்ச்சியைத் தொடர்ந்து அரவிந்தரின் தம்பியான பரீந்திர கோஷும் மற்றும் பலரும் கைது செய்யப்பட்டனர். இதன் பின் மே மாதம் 5ஆம் தேதி அரவிந்தரும் இதே வழக்குச் சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டார். முஜாபர்பூரில் வெடிகுண்டு வீசிய குதிராம் போஸ் என்ற இளைஞனுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப் பட்டது. அவன் 1908 ஆகஸ்டு 11ஆம் தேதி தூக்கிலிடப்பட்டான். அரவிந்தரின் தம்பி பரீந்திரர் முதலான இளைஞர்களுக்கு, வழக்கின் முடிவில் ஆயுள் தண்டனையிலிருந்து ஓராண்டுச் சிறைத் தண்டனை வரை பல்வேறு தண்டனைகள் விதிக்கப்பட்டன. இதே போல் இதற்கு அடுத்த 1909ஆம் ஆண்டில் மகாராஷ்டிரத்தில் விநாயக தாமோதர சவர்க்காரின் சகோதரர் கணேச சாவர்க்காருக்கு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது. அடுத்த 1910ஆம் ஆண்டில் விநாயக தாமோதர சாவர்க்காரும் அதே தண்டனைக்கு உள்ளானார்.

இவ்வாறு அடிமேல் அடியாக ஆங்கிலேய அரசாங்கம் தீவிரத் தேசியவாதத் தலைவர்களுக்கும், ரகசியச் சங்கங்களுக்கும் எதிராக

அடக்குமுறைப் பாணங்களைத் தொடுத்து, தீவிரத் தேசியவாத இயக்கத்தையும், புரட்சி இயக்கத்தையும் அடக்கி ஒடுக்கி, அவை செயல்படுவதை முடக்கி வந்த காலத்திலும், பாரதி நம்பிக்கையைத் தளர விட்டுவிடவில்லை. அவன் பாண்டிச்சேரியிலிருந்து வெளியிட்டு வந்த 'இந்தியா' பத்திரிகையில் 1908 நவம்பர் 21ஆம் தேதியிட்ட இதழில், இத்தாலிய நாட்டு விடுதலை வீரனான மாஜினி தனது போராட்டத்தில் முதலில் அடைந்த தோல்விக்குப் பின், விடுதலைப் போரின் இரண்டாவது கட்டம் விரைவிலேயே நிச்சயம் தொடங்கும் என்று எழுதிய கட்டுரையை அப்படியே மேற்கோள் காட்டிவிட்டு' ''திலகருக்குத் தீவாந்தர சிக்ஷை விதித்ததோடு பாரத தேசத் தாயின் சுதந்திரப் போரிலே முதற் சருக்கம் முடிவுற்றது. இரண்டாம் சருக்கம் தொடங்கவில்லை. சிறிது காலத்துக்கு இரு திறத்தாரும் இளைப் பாறுவார்கள்'' என்றே எழுதினான் (மேற்கோள்: புதுவையில் பாரதி ப.கோதண்டராமன். பக் .17—22).

ஆனால் பாரதி எதிர்பார்த்ததுபோல், தீவிரத் தேசியவாத இயக்கம் நடத்திய போராட்டத்தின் இரண்டாவது கட்டம் தொடங்கவே இல்லை; மாறாக, தீவிரத் தேசியவாத இயக்கமே 1911 வாக்கில் முடிவு கண்டுவிட்டது. உண்மையில் இதன் பின் 1915 வாக்கில் காந்தியடிகள் இந்தியாவுக்குத் திரும்பி வந்து, இந்தியத் தேசிய இயக்கத்தின் தலைமையை ஏற்று, 1919ல் ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கியபோதுதான் விடுதலைப் போரின் இரண்டாவது கட்டம் தொடங்கியது எனலாம்; எனினும் காந்தியடிகளின் போராட்ட மார்க்கமும் முறையும் தீவிரத் தேசியவாத இயக்கத்தின் நோக்குக்கும் போக்குக்கும் முற்றிலும் மாறானவையாகவே இருந்தன என்பதை நாமறிவோம்.

உண்மையில், பாரதி கூறியதுபோல் தீவிரத் தேசியவாத இயக்கம் ஒன்றும் இளைப்பாறவில்லை. திலகர், வ.உ.சி. முதலியோர் சிறைப்பட்டிருந்த காலத்தில் அந்த இயக்கம் ஓய்ந்து ஒடுங்கியே போய்விட்டது. தீவிரத் தேசியவாதத் தலைவர்களில் ஒருவரான லாலா லஜபதிராய் திலகரை மாண்டலேக்கு நாடு கடத்திய பின், விரைவிலேயே அமெரிக்கா சென்றுவிட்டார். இதன் பின் அவர் அமெரிக்காவிலும் லண்டனிலும் பல ஆண்டுகள் இருந்துவிட்டு 1920ம் ஆண்டில்தான் இந்தியா திரும்பினார். வங்கத்தில் அரவிந்தரின் தோழராகவும் தீவிரத் தேசியவாத இயக்கத்தின் மற்றொரு தலைவராகவும் விளங்கியவர் விபின் சந்திரபாலர் என்பவர். 1907ஆம்

ஆண்டு மே மாதத்தில் பாரதி இவரைச் சென்னைக்கு அழைத்து வந்து பல சொற்பொழிவுகளை நிகழ்த்தச் செய்தான். ஆவேசமாகச் சொற்பொழிவாற்றுவதில் வல்லவரான இவர் சென்னையில் ஆற்றிய சொற்பொழிவுகள் தமிழ்நாட்டில் தீவிரத் தேசியவாத இயக்கம் பலப்படுவதற்குப் பெரும் பங்காற்றின. கேம்பிரிட்ஜ் இந்திய வரலாறு, ''மிஸ்டர் விபின் சந்திரபாலர் என்ற ஊர்சுற்றியான ஆவேசப் பிரசங்கி ஆற்றிய தொடர் சொற்பொழிவுகளுக்குப் பின்னரும், உள்ளூர் அரசியல்வாதியான சிதம்பரம் பிள்ளை என்பவரின் நெருப்புப் பொறி பறக்கும் பல பேச்சுக்களுக்குப் பின்னரும் சென்னை மாகாணத்தில் பல கலவரச் சம்பவங்கள் நிகழ்ந்தன'' என்று குறிப்பிட்டுள்ளது. (Cambridge History of India. Ed. H.M. Dodwell, Vol.6)

இவ்வாறு தீவிரத் தேசியவாத இயக்கத்தின் முக்கியத் தலைவர்களில் ஒருவராகவும் அதன் பிரசாரப் பீரங்கியாகவும் விளங்கிய விபின் சந்திரபாலர், திலகர், வ.உ.சி. போன்ற தலைவர்கள் சிறை சென்ற ஒரு மாதத்துக்குள், குதிராம்போஸ் தூக்கிலிடப்பட்ட பத்தே நாட்களுக்குள், 1908 ஆகஸ்டு 20ஆம் தேதியன்று கல்கத்தாவிலிருந்து இங்கிலாந்துக்குக் கப்பல் மூலமாகப் புறப்பட்டுச் சென்றார். அவ்வாறு செல்லும்போது அவர் சென்னை வழியாகவே சென்றார். என்றாலும், ஒரு வருடத்துக்குமுன் தாம் வந்து ஆவேசப் பிரசங்கங்கள் ஆற்றிய சென்னை நகரை அவர் இறங்கிக்கூட பார்க்கவில்லை. மேலும், இந்தியாவில் இருந்தபோது பூரண சுயராஜ்ய முழக்கமிட்ட அவர், பின்னால் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் புகழ் பாடியவராகவும், இந்தியா அந்த சாம்ராஜ்யத்தோடு நிரந்தரமாகச் சேர்ந்தே இருக்க வேண்டும் எனக் கூறியவராகவும்கூட மாறிவிட்டார். தீவிரத் தேசியவாத இயக்கத்தின் மற்றொரு தலைவரான அரவிந்தர் அலிப்பூர் சதி வழக்குச் சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டு ஓராண்டுக்காலம் காவல் கைதியாக இருந்த பின் 1909 மே மாதம் விடுதலையடைந்தார். தாம் சிறையிலிருந்த காலத்தில் தமக்குக் ''கிருஷ்ண பகவான் காட்சியளித்து'' உபதேசம் அருளிச் செய்ததன் பேரில், ''சுதேசியம் அரசியல் அல்ல, சனாதன தருமமே சுதேசியம். அந்தச் சனாதன தருமம் அழியக்கூடுமானால் இந்து சமுதாயமே அதனுடன் அழியும்'' என்று தேர்ந்து தெளிந்து (அரவிந்தரின் உத்தரபாரா பிரசங்கம்: ஸ்ரீ அரவிந்தர் வாழ்க்கை வரலாறு. ப.கோதண்டராமன். பக்.216), அரசியலிலிருந்தே விலகிக்கொண்டார். இதன் பின் சிறை மீண்டு

வந்த தம்மை அரசாங்கம் மீண்டும் கைது செய்யக்கூடும் என்ற தகவலறிந்ததும், ஆண்டவன் தம்மைப் ''புதுவை செல்லுமாறு பணித்'ததன்பேரில், (மேற்கூறிய நூல். பக் .307) 1910 முதல் வாரத்தில் பாண்டிச்சேரி சென்று அங்கேயே ஆயுள் முழுவதும் தங்கி விட்டார். 1914 ஜூன் மாதம் திலகர் சிறையிலிருந்து திரும்பி வந்த பின், அரவிந்தரிடம் தமது தூதர் ஒருவரை அனுப்பி அவரை மீண்டும் அரசியல் பணிக்குத் திரும்ப வருமாறு அழைத்ததாகவும், ஆனால் அரவிந்தர் ஆன்மிக மார்க்கத்தில் வெகுதூரம் சென்று விட்டதால், அந்த அழைப்பை ஏற்றுக்கொள்ளவில்லை என்றும், திலகரின் வரலாற்றாசிரியர்கள் எழுதுகின்றனர். (Lokamanya Tilak – G. P. Pradhan and A. K. Bhagwat, p. 277)

இவ்வாறு 1905ஆம் ஆண்டில் நிகழ்ந்த வங்கப் பிரிவினையோடு தோன்றிய தீவிரத் தேசியவாத இயக்கம், 1908ஆம் ஆண்டின் முதல் வெடிகுண்டு வீச்சுக்குப் பின் தேய்ந்து நலிந்துவிட்டது; மேலும் 1911ஆம் ஆண்டின் இறுதியில் ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் இந்தியாவுக்கு வரவிருந்த தருணத்தில், இந்திய மக்களை ஏமாற்று றுவதற்காக, ஆங்கிலேய அரசாங்கம் வங்கப் பிரிவினையை ரத்துச் செய்து பிறப்பித்த உத்தரவோடு முடிவு கண்டுவிட்டது. இதற்கு அடுத்தது என்ன என்பது கேள்விக்குறியாகிவிட்டது. இந்தக் காலகட்டத்தின் நிலைமை பற்றி, ஜவாஹர்லால் நேரு தமது சுய சரிதத்தில், ''1912ஆம் ஆண்டின் இறுதியில் இந்திய அரசியல் ஒரே மந்தமாக இருந்தது. திலகர் சிறையில் இருந்தார். தீவிரவாதிகள் ஊக்குவிக்கத்தக்க தலைவரின்றி உறங்கிக் கிடந்தனர். வங்காளப் பிரிவினைக் கிளர்ச்சிக்குப் பின் வங்கத்திலும் அமைதி நிலவியது... காங்கிரஸ் ஆண்டுதோறும் கூடுவது, சில தீர்மானங்களை நிறை வேற்றுவது என்ற அளவிலேயே இருந்து வந்தது'' என்று எழுதுகிறார் (சுயசரிதை – அத்.5).

இந்தச் சூழ்நிலைக்குத் தமிழ்நாடும் விதிவிலக்கல்ல. தமிழ் நாட்டில் நிலைமை எவ்வாறு இருந்தது என்பதற்கு, சிலம்புச் செல்வர் ம.பொ.சி. ''விடுதலைப் போரில் தமிழகம்'' என்ற தமது நூலில், ''சிதம்பரனார் 1912ஆம் ஆண்டு டிசம்பர் இறுதியில் சிறையிலிருந்து விடுதலை பெற்றார். சிறை வாயிலிலே அவ்வீரரை வரவேற்க ஆளில்லை. சிறைக்குப் போகும்போது வீதிதோறும் வெள்ளம்போல் மக்கள் திரண்டு வழியனுப்பி வைத்தனர் தூத்துக்குடியிலே! அது நிகழ்ந்து

நான்கரையாண்டுக்குள் 'வா' என்று சொல்லி வரவேற்க ஒரு ஆள் இல்லாத நிலையிலே சிறையிலிருந்து விடுதலை பெற்றார். அந்த அளவுக்கு அடக்குமுறைக் கொடுமையால் நாட்டு மக்களின் உள்ளங்கள் எல்லாம் ஒடுங்கிக் கிடந்தன'' (விடுதலைப் போரில் தமிழகம். முதல் தொகுதி. பக். 262) என்று எழுதியுள்ளதிலிருந்தே புரிந்து கொள்ளலாம்.

பாரதியைப் பொறுத்த வரையில், அவன் 1908ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில், 'இந்தியா' பத்திரிகை அலுவலகத்தில் சோதனை நடந்தபின் பாண்டிச்சேரிக்குத் தப்பித்துச் சென்ற பிறகும் அவன் வாளாவிருக்கவில்லை. பாண்டிச்சேரி சென்ற பின் அவன் 'இந்தியா' பத்திரிகையை அங்கிருந்து 1908 அக்டோபர் மாதம் முதற்கொண்டு வெளிக்கொண்டுவரவே செய்தான். பாரதியும் அவனது நண்பர்களும் பாண்டிச்சேரியிலிருந்து ''விஜயா'' என்ற தினசரிப் பத்திரிகையையும் வெளியிடத் தொடங்கினர். மேலும், 'கர்மயோகி' என்ற தமிழ்ப் பத்திரிகை, 'பால பாரதா' என்ற ஆங்கிலப் பத்திரிகை முதலியவற்றையும் அவர்கள் வெளியிட்டனர்; 'சித்திராவளி' என்ற சித்திரங்கள் அடங்கிய மாதப் பத்திரிகை ஒன்றையும் வெளியிட அவர்கள் முயற்சியை மேற்கொண்டனர். ஆனால் ஆங்கிலேய அரசாங்கம் இதனையெல்லாம் நெடுங்காலத்துக்கு அனுமதித்துக் கொண்டிருக்கவில்லை. அது 'இந்தியா'வும் 'விஜயா'வும் பிரிட்டிஷ் இந்தியாவுக்குள் வருவதற்குத் தடை விதித்தது. இதனால் 'இந்தியா' 1910 மார்ச் 12ஆம் தேதி இதழுடன் நின்றுவிட்டது; 'விஜயா'வும் அத்துடன் நின்று விட்டது. பாரதி வரலாற்றாசிரியர் ரா. அ. பத்மநாபன், ''இந்தியாவுக்கு நேர்ந்தகதி சீக்கிரமே மற்ற பத்திரிகைகளுக்கும் நேர்ந்தது. 1910ஆம் வருஷம் முடிவதற்குள், தமக்கென ஒரு பத்திரிகை இல்லாத சங்கடமான நிலைமையை அடைந்துவிட்டார் பாரதி'' (சித்திரபாரதி – பக் .59) என்று எழுதுகிறார்.

இவ்வாறு 1910ஆம் ஆண்டுடன் பாரதிக்குத் தன் கருத்துக்களைத் தெரிவிப்பதற்குப் பத்திரிகைகள் எதுவும் இல்லாது போய்விட்ட நிலை, தேசிய இயக்கத்தில் அவனுக்கு உற்ற துணைவர்களாக இருந்த வ.உ.சி., ஆகியோரும் பிற நண்பர்களும் சிறையில் அடைபட்டிருந்த நிலை, மேலும் 1911 ஜூன் மாதத்தில் ஆஷ் துரை கொலையுண்டபின் அரசாங்கம் பலரது வீடுகளைச் சோதனையிட்டும், பலரைக் கைது செய்தும் அடக்கு முறையைக் கட்டவிழ்த்துவிட்டிருந்த நிலை,

பாரதியின் சகாக்களான நீலகண்ட பிரம்மசாரி, சங்கர கிருஷ்ணன் முதலிய பலரும் ஆஷ் கொலை வழக்குச் சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டு நீதி விசாரணைக்கு உட்பட்டிருந்த நிலை, அத்துடன் இந்தக் கொலையில் பாரதி உள்ளிட்ட பாண்டிச்சேரியிலிருந்த தேசபக்தர்களுக்குச் சம்பந்தமுண்டு என்று கருதி, அவர்களைப் பாண்டிசேரியிலிருந்து வெளியேற்றி, பின்னர் அவர்களைக் கைது செய்ய ஆங்கிலேய அரசாங்கம் செய்து வந்த முயற்சிகள், பாரதிக்கு எதிராகவே ஆங்கில அரசாங்கம் பிடிவாரண்டைப் பிறப்பித்திருந்த நிலை, இதனால் ஏற்பட்ட ஒற்றர் தொல்லைகள், மேலும் பாரதியின் 'ஆறில் ஒரு பங்கு' என்ற நூலையும், 'கனவு' என்ற நூலையும் ஆங்கிலேய அரசாங்கம் பறிமுதல் செய்து தடை செய்த காரியம், இத்தனைய நிலைமைகளால் தீவிரத் தேசியவாத இயக்கம் தமிழ் நாட்டிலும் நிலைகுலைந்து செயலிழந்து போயிருந்த நிலைமை, அடுத்து என்ன செய்வது என்பதை எவராலும் தீர்மானிக்க இயலாதிருந்த சூழ்நிலை–ஆகிய பலவும் நிலவிய ஒரு காலத்தில்தான் பாரதி தனது 'பாஞ்சாலி சபத'த்தை இயற்றி முடித்திருக்கிறான் என்பதை நாம் கருத்தில் கொள்ளவேண்டும்.

தீவிரத் தேசியவாத இயக்கம் முப்முரமாக நடைபெற்று வந்த காலத்தில் அந்த இயக்கத்துக்கு உதவும் தனிப் பாடல்களையே இயற்றிக் குவித்து வந்த பாரதிக்கு, பத்திரிகைகளுக்குக் கட்டுரை களும் செய்திக் குறிப்புக்களும் எழுதித் தள்ளவேண்டிய அவசியம் அற்றுப் போய் விட்ட பாரதிக்கு, சாவதானமாக அமர்ந்து பெரும் கவிதைப் படைப்புக்களைப் படைப்பதற்குப் போதிய அவகாசம் இருந்த காரணத்தினால் மட்டும்தான் அவன் தனது பெரும் கவிதைப் படைப் பான 'பாஞ்சாலி சபத'த்தை இயற்றி முடித்தான் என்பதில்லை. உண்மையில், தனது அரசியல் கருத்துக்களை நேரடியாகச் சொல்ல முடியாத, தெரிவிக்க முடியாத ஒரு சூழ்நிலையில், அவன் பாஞ்சாலியின் கதையைத் தனது கருத்தைத் தெரிவிப்பதற்கு ஒரு கருவியாக்கிக் கொண்டான் என்று சொல்வதே பொருத்தமாகும். சொல்லப்போனால், தேசிய இயக்கமே சீர்குலைந்து செயலிழந்து நின்ற ஒரு தருணத்தில், அந்த இயக்கத்தில் சம்பந்தப்பட்டிருந்தவர்களுக்கும் நாட்டு மக்களுக் கும், தன்னம்பிக்கையையும் ஊக்கத்தையும் உற்சாகத்தையும் ஊட்டும் கருத்தோடுதான் பாரதி தனது பாஞ்சாலி சபதத்தை எழுதி முடித் தான் என்று நாம் சொல்ல வேண்டும். 'பாஞ்சாலி சபத'த்தில், பாஞ்சாலிக்கு மானபங்கம் இழைக்கப்பட்டதைக் கண்டு மனம்

கொதித்து, பீமன் தருமனைப் பலவாறாகக் கடிந்து கொள்வதைக் கட்டு, அர்ஜுனன் இவ்வாறு சொல்கிறான் :

'தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும்;
தருமம் மறுபடி வெல்லும்' எனும் இயற்கை
மருமத்தை நம்மாலே உலகம் கற்கும்
வழிதேடி விதியிந்தச் செய்கை செய்தான்.

கருமத்தை மேன்மேலும் காண்போம். இன்று
கட்டுண்டோம்; பொறுத்திருப்போம்; காலம் மாறும்.
தருமத்தை அப்போது வெல்லக் காண்போம்.
தனுவுண்டு காண்டீவம் அதன்பேர்''

(பாடல் 283)

அர்ஜுனனின் வாய்மொழியாகக் கூறப்படும் இந்தக் கூற்று, உண்மையில், நாட்டில் அன்று நிலவிய சூழ்நிலையில் பாரதி தனது இயக்கத்தைச் சேர்ந்தவர்களுக்கும், நாட்டு மக்களுக்கும் நம்பிக்கையூட்டி, அவர்களை மனம் சோராது கடமையாற்றிவரத் தூண்ட விடுத்த கவிக் கூற்றாகவே ஒலிக்கிறது எனலாம்.

## பாஞ்சாலி சபதக் கதையை தேர்ந்தெடுத்த காரணம்

பாஞ்சாலி சபதக் கதையை, பாரதி தனது கவிப் பொருளாகத் தேர்ந்தெடுத்துக்கொண்டதற்கு, அந்தக் கதையின்மூலம் பெண்ணடிமைத் தனத்துக்கு எதிராகவும், பெண் விடுதலைக்கு ஆதரவாகவும் தான் குரல் கொடுக்க முடியும் என்பதை அவன் உணர்ந்திருந்தான் என்றும், எனவே பெண் விடுதலைக் கருத்தே பாஞ்சாலி சபதத்தின் உறைபொருள் என்றும் முன்னர்க் குறிப்பிட்டோம். அதே சமயம், தனது அரசியல் கருத்தை நேரடியாகச் சொல்ல முடியாத நிலையிலிருந்த அவன், அந்தக் கருத்தை மறை பொருளாகத் தெரிவிக்கவும் பாஞ்சாலி சபதக் கதை தனக்கு இடம் தருகிறது என்பதையும் உணர்ந்து கொண்டதன் காரணமாகவே அந்தக் கதையைத் தேர்ந்தெடுத்துக்கொண்டான்.

பாரதக் கதையில் தருமன் சூதாடும்போது, அவன் தன் செல்வங்கள் அனைத்தையும் மட்டுமல்லாது, தான் ஆண்டு வந்த நாட்டையும் சூதில் பந்தயமாக வைத்துத் தோற்று விடுகிறான். இதற்குப்

பின்னரே அவன் தான் தன் தம்பியரையும், தன்னையும் பந்தயம் வைத்தும், இறுதியில் பாண்டவர் மனைவி பாஞ்சாலியையும் பந்தயம் வைத்துத் தோற்று விடுகிறான். பாஞ்சாலியின் கதையைப் பாட வரும் தேசபக்தனான பாரதிக்கு, தருமன் நாட்டைப் பந்தயப் பொருளாக வைத்துச் சூதாடித் தோற்ற செயல், சகிக்க முடியாத செயலாகத் தோன்றுகிறது. எனவே தருமன் தனது ஆட்சிக்குட்பட்ட நாட்டையும் வைத்துத் தோற்ற நிகழ்ச்சியைப் பாடி முடித்த பின்னர், பாரதி தருமனின் இந்த இழிசெயலைக் கண்டித்து,

கோயிற் பூசை செய்வோர் — சிலையைக்
கொண்டு விற்றல் போலும்,
வாயில் காத்து நிற்போன் — வீட்டை
வைத்திழத்தல் போலும்,
தேயம் வைத்திழந்தான் — சிச்சீ!
சிறியர் செய்கை செய்தான்
(பாடல் 219)

என்று தருமனின் செயலை அற்பர் செய்கை என இடித்துக் கூறி விட்டு, பின்னர் கவிக் கூற்றாகப் பின்வருமாறு பாடுகிறான்:—

நாட்டு மாந்த ரெல்லாம் — தம்போல்
நரர்கள் என்று கருதார்;
ஆட்டு மந்தையாம் என்று — உலகை
அரசர் எண்ணி விட்டார்.
காட்டும் உண்மை நூல்கள் — பலதாம்
காட்டி னார்க ளேனும்,
நாட்டு ராஜ நீதி — மனிதர்
நன்கு செய்யவில்லை.

ஓரம் செய்திடாமே — தருமத்
துறுதி கொன்றிடாமே
சோரம் செய்திடாமே — பிறரைத்
துயரில் வீழ்த்திடாமே
ஊரையாளும் முறைமை — உலகில்
ஓர் புறத்தும் இல்லை.
சாரமற்ற வார்த்தை — மேலே
சரிதை சொல்லுகின்றோம்.
(பாடல் 220—211)

இவ்வாறு தான் சொல்ல வந்த கதையை விட்டு விலகி, நாட்டை ஆளும் ஆட்சியாளர்களைக் கண்டித்து விட்டு, 'சாரமற்ற வார்த்தை மேலே சரிதை சொல்லுகின்றேம்' என்று பாரதி கதையை மேலும் கூற முற்படுகிறான். உண்மையில், பாரதி இங்கு தருமன் செய்த செயலைக் கண்டிக்கும் விதத்தில் பாடினாலும், அன்றைய ஆங்கிலேய ஆட்சி மேற்கொண்டு வந்த அடக்குமுறையையும், அநீதியான செயல்களையுமே மறைமுகமாகக் கண்டித்திருக்கிறான் என்பதை நாம் புரிந்து கொள்ளலாம்.

இது மட்டும் அல்ல. பாரதி பாஞ்சாலி சபதக் கதையைத் தேர்ந்தெடுத்தபோது, அவன் பாஞ்சாலியைப் பெண் குலத்தின் பிரதிநிதியாக மட்டும் பார்க்கவில்லை. அவன் பாஞ்சாலியை, பாரத நாடாகவுமே உருவகப்படுத்தித்தான், தனது பாஞ்சாலி சபதத்தைப் பாடியுள்ளான். இந்த உட்பொருளை உணர்த்தும் விதத்தில், கதையில் பாஞ்சாலியைப் பந்தயப் பொருளாக வைக்க முனையும் நிகழ்ச்சியைக் கூற வரும்போது, அவன் பாஞ்சாலியை,

பாவியர் சபைதனிலே — புகழ்ப்
பாஞ்சால நாட்டினர் தவப்பயனை,
ஆவியில் இனியவளை — உயிர்த்
தணி சுமந்துலவிடு செய்யமுதை,
ஓவியம் நிகர்த்தவளை — அருள்
ஒளியினைக் கற்பனைக் குயிரதனை

என்று பாடி வரும்போதே, அடுத்து வரும் அடிகளில்,

தேவியை, நிலத் திருவை — எங்கும்
தேடினும் கிடைப்பரும் திரவியத்தை
(பாடல் 242)

என்றும் பாடுகிறான். இங்கு அவன் தேவி என்றும், நிலத்திரு என்றும், எங்கும் தேடினும் கிடைப்பரும் திரவியம் என்றும் பாடுவது, பாரத தேவியை பாரத நாட்டைக் கருத்தில் கொண்டுதான் என்பதை நாம் உணர்ந்துகொள்ள முடியும்.

இங்கு ஒரு விஷயத்தை நாம் நினைவூட்டிக்கொள்ள வேண்டும், வங்கப் பிரிவினைக்குப் பின்னர், தீவிரத் தேசியவாத இயக்கம் மேலோங்கிய காலத்தில், அந்த இயக்கத்தின் தலைவர்கள், பாரத

நாட்டை பாரத தேவியாக மட்டுமல்லாது காளி, துர்க்கை, சக்தி முதலிய பெண் தெய்வ மூர்த்தங்களாகவும் கண்டு, மக்களது சமய உணர்ச்சியையும் தேச பக்தியுணர்ச்சியைத் தூண்டுவதற்குப் பயன் படுத்திக்கொண்டனர். உதாரணமாக, விபின் சந்திர பாலர், 'நமது கோடானு கோடி மக்கள் இன்று தமது தாய்நாட்டை, துர்க்கை, காளி, ஜகதாத்ரி என்றெல்லாம் போற்றிப் புகழத் தொடங்கியுள்ள னர். இவை இனியும் புராணக் கருத்துக்களாகவோ, கதைகளில் வரும் கற்பனை நபர்களாகவோ, கவிதா உருவங்களாகவோ இருந்து வரவில்லை. இவை மாதாவின் பல்வேறு வடிவத் தோற்றங்களேயாகும். இந்த மாதாதான் இந்தியாவின் உணர்ச்சி' என்று எழுதினர் (The Soul of India, India: The Mother, p. 187)

எனவேதான் அவர்கள் அந்நாளில் நாட்டு வணக்கத்தை ஊக்குவிப்பதற்காக, பவானி பூஜை முதலியவற்றையும் நடத்தினர்; அரவிந்தர் ரகசிய இயக்கம் ஒன்றைத் தொடங்குவதற்காக ஒரு நூலை எழுதியபோது, அதற்குப் 'பவானி மந்திர்' (பவானி கோவில்) என்றே பெயரிட்டார். இந்த ரகசியச் சங்கத்தில் சேர்ந்த இளைஞர் களெல்லாம் பவானி தெய்வத்தின் பேராலேயே, தாய்நாட்டு விடுதலைக்குப் போராடுவதற்காக விரதம் ஏற்றுக்கொண்டிருந்தனர். பாரதியும் இந்த வழிபாட்டு முறையைக் கருத்தில்கொண்டே, தனது தேசியப் பாடல்களில், பாரத தேவியைக்காளியின் வடிவமாகவே கண்டு பாடினன். அவன் குரு கோவிந்தரைப் பற்றிப் பாட வரும் போதும், அவர் தம் சீடர்களை நோக்கி.

> காளியும் நமது கனக நன்னாட்டுத்
> தேவியும் ஒன்றெனத் தேர்ந்த நல் அன்பர்காள்!
>
> (குரு கோவிந்தர் - வரிகள் 104-105)

என்று கூறியதாகப் பாடுகிருன். இதேபோல் அவன் பாரத நாட்டைப்பாட வரும்போது,

> முப்பது கோடி முகமுடையாள் — உயிர்
> மொய்ம்புற ஒன்றுடையாள் — இவள்
> செப்பு மொழி பதினெட்டுடையாள் — எனில்
> சிந்தனை ஒன்றுடையாள்
>
> (எங்கள் தாய் - பாடல் 3)

என்று நாட்டைப் பெண்ணாக உருவகித்துப் பாடி விட்டு,

பூமியினும் பொறை மிக்குடையாள்பெரும்
புண்ணிய நெஞ்சினள் தாய் — எனில்
தோமிழைப்பார் முன் நின்றிடுங்கால், கொடும்
துர்க்கை யனையவள் தாய்

(பாடல் 6)

என்று நாட்டைத் துர்க்கையாகவும் உருவகித்துப் பாடுகிறன். இத்தகைய துர்க்கையான பாரதத்தாய்,

நல்லறம் நாடிய மன்னரை வாழ்த்தி
நயம் புரிவாள் எங்கள் தாய்—அவர்
அல்லவ ராயின் அவரை விழுங்கிப் பின்
ஆனந்தக் கூத்திடுவாள்

(பாடல் 9)

என்று கூறி, அவள் கொடுங்கோலரை வீழ்த்தி வெற்றி வாகை சூடவும் செய்வாள் என்றும் பாடுகிறன். மேலும், அவன் வேறெரு பாட்டில்,

பாரதப் போரெனில் எளிதோ ? - விறல்
பார்த்தன்கை வில்லிடை ஒளிர்வாள்;
மாரதர் கோடி வந்தாலும் — கணம்
மாய்த்துக் குருதியில் திளைப்பாள்

(வெறிகொண்ட தாய — பாடல் 5)

என்றும் பாடுகிறன். இங்கு அவன் பாரதப் போரைப் பாரத நாட்டின் விடுதலைப் போரோடு உவமித்து, போரின் முடிவில் அவள் விடுதலை பெற்று வெற்றி வாகை சூடுவாள் என்று உருவகித்தே பாடுகிறன். இந்த உண்மையையும் நாம் கருத்தில் கொண்டால், பாரதப் போருக்குக் காரணமாகவிருந்த பாஞ்சாலிசபதத்தை, பாரதி ஏன் தனது கருப் பொருளாகத் தேர்ந்தெடுத்துக்கொண்டான் என்பதை நாம் தெரிந்துகொள்ளலாம். இந்த உண்மையை நாம் பாரதியின் பாஞ்சாலி சபதக் காவியத்திலும் காண முடியும்.

தருமன் பாஞ்சாலியைப் பந்தயப் பொருளாக வைத்துத் தோற்று விட்ட பின்னல், பிரபஞ்சமும் கடவுளர்களும்கூட நிலைகெட்டுத் திரிந்து போனதாக, பாரதி பாடியுள்ளதை முன்னர்க் குறிப்பிட்டோம். அவ்வாறு நான்முகனர் நாவடைத்தும், நாமகட்குப் புத்தி கெட்டும், திருமாலின் அறிதுயில் ஆழ்ந்த துயிலாக மாறியும், சீதேவியின்

முகத்தில் செம்மை நீங்கிக் கருமை சூழ்ந்தும், மாதேவன் யோகம் மதிமயக்கமாக மாறியும் விட்ட நிலையில், அதாவது மும்மூர்த்திகளும், கலைமகளும், திருமகளும் தம் நிலை கெட்டுத் திரிந்துவிட்ட நிலையில், பாஞ்சாலிக்கு இழைக்கப்பட்ட அநீதியைக் கண்ட பராசக்தியின் நிலைமட்டும் எவ்வாறு இருந்தது என்பதையும் பாரதி பாடுகிறான்:

வாலை, உமாதேவி, மாகாளி, வீறுடையாள்,
மூலமா சக்தி, ஒரு மூவிலைவேல் கையேற்றாள்
மாயை தொலைக்கும் மகாமாயை தானாவாள்,
பேயைக் கொலையைப் பிணக்குவையைக் கண்டுவப்பாள்,
சிங்கத்தி லேறிச் சிரித்தெவையும் காத்திடுவாள்,
நோவும் கொலையும் நுவலொணாப் பீடைகளும்
சாவும் சலிப்புமெனத் தான்பல் கணமுடையாள்,
கடா வெருமை ஏறும் கருநிறத்துக் காலனார்
இடாது பணிசெய்ய இலங்கு மகாராணி,
மங்களம், செல்வம், வளர்வாழ்நாள், நற்கீர்த்தி,
துங்கமுறும் கல்வியெனச் சூழும் பலகணத்தாள்,
ஆக்கம் தானாவாள், அழிவு நிலையாவாள்,
போக்கு வரவெய்தும் புதுமையெலாம் தானாவாள்,
மாறி மாறிப் பின்னும் மாறி மாறிப் பின்னும்
மாறி மாறிப் போம் வழக்கமே தானாவாள்
ஆதிபராசக்தி ...... (பாடல் 252)

என்று பராசக்தியின் புகழைப் பாடிவிட்டு,

ஆதிபராசக்தி அவள் நெஞ்சம் வன்மையுற

என்று கூறி, அந்த அநியாயத்தைக் கண்டு, பராசக்தியின் நெஞ்சம் மட்டும் ஈவிரக்கம் கருணை எல்லாவற்றையும் துறந்து, கல்லாகி விட்டதாக, அதாவது இந்த அநியாயத்தை இழைத்தவர்களைப் பழிக்குப் பழிவாங்க, பராசக்தியே மனத்தில் வன்மம் கொண்டு விட்டதாகப் பாரதி பாடுகிறான்.

இதன் பின் பாஞ்சாலியைத் துச்சாதனன் அரச சபையில் துகிலுரித்த காலத்தில், கண்ண பெருமானின் அருளால் பாஞ்சாலி யின் துகில் வளர்ந்து கொண்டேயிருந்ததால், அவன் கை சலித்துக் கீழே விழுந்துவிட்ட காட்சியைப் பாடி முடிக்கும் பாரதி, இந்தக் காட்சியைக் கண்டு,

தேவர்கள் பூச்சொரிந்தனர் — 'ஓம்
ஜெய ஜெய பாரத சக்தி' என்றே
ஆவலோ டெழுந்து நின்று — முன்னை
ஆரிய வீட்டுமன் கை தொழுதான்;
சாவடி மறவரெல்லாம் — 'ஓம்
சக்தி சக்தி சக்தி' என்று கரம்குவித்தார்.
(பாடல் 302)

என்றும் பாடுகிறான். அதாவது, பாரத நாடான பாரத தேவி அவமானத்துக்கும் அலங்கோலத்துக்கும் அடிமைத்தனத்துக்கும் உள்ளானாலும், இறுதியில் தெய்வத்தின் அருளால், பராசக்தியின் அருளால் காப்பாற்றப்படுவாள் என்று மறைமுகமாக உணர்த்தும் விதத்தில் தான், பாரதி இங்கு 'ஓம்' ஜெய ஜெய பாரத சக்தி!' என்று மற்றவர்கள் அவளை வாழ்த்திக் கோஷமிடுவதாகப் பாரதி பாடுகிறான்.

இதன் பின் வீமன் சபதம் செய்யத் தொடங்குவதைப் பாட வரும் போதும்,

வீமன் எழுந்துரை செய்வான் — ''இங்கு
விண்ணவர் ஆணை, பராசக்தி ஆணை ......''
(பாடல் 303)

என்று அவன் பராசக்தியின் மீது ஆணையிட்டே தனது சபதத்தைக் கூறுவதாகப் பாரதி பாடுகிறான். வீமன் தனது சபதத்தைக் கூறி முடிக்கும் போதும்,

''நடைபெறும் காண்பீர், உலகீர்! — இது
நான் சொலும் வார்த்தையென் றெண்ணிடல் வேண்டா,
தடையற்ற தெய்வத்தின் வார்த்தை — இது
சாதனை செய்க, பராசக்தி!''
(பாடல் 305)

என்று கூறுவதாகவே பாரதி பாடுகிறான்.

இறுதியாக, பாஞ்சாலி தன் சபதத்தைக் கூறத் தொடங்குவதைப் பாடும் போதும்,

தேவி திரௌபதி சொல்வாள் — 'ஓம்
தேவி பராசக்தி ஆணை யுரைத்தேன்......
(பாடல் 307)

என்று ஆணையிட்டே அவள் சபதத்தைக் கூறத் தொடங்குவதாகப் பாரதி பாடுகிறான். இவ்வாறு பாஞ்சாலி சபதம் செய்து முடித்ததும், இந்தச் சபதம் வெற்றி பெறும் என்று வாழ்த்தித் தேவர்கள் பூமாரி பொழிந்ததாகவும், வானம் உறுமியதாகவும், பூமி அதிர்ந்ததாகவும், புயற்காற்று வீசியதாகவும், ஐம்பெரும் பூதங்களும் இறுதியில் தருமனுக்கே வெற்றி எனச் சாட்சியுரைத்ததாகவும் பாடி,

நாமும் கதையை முடித்தோம் — இந்த
நானிலம் முற்றும் நல்லின்பத்தில் வாழ்க !
(பாடல் — 308)

என்று பாரதி தனது பாஞ்சாலி சபத நூலை முடிக்கிறான்.

இவை அனைத்தையும் கருத்தில் கொண்டு பார்க்கும்போது, பாரதி தனது 'பாஞ்சாலி சபத'த்தை இயற்றிய காலத்தில், நாட்டில் நிலவிய அரசியல் நிலையை, நம்பிக்கை வறட்சியையும், சோர்வையும் பலர் மனத்திலும் ஏற்படுத்தியிருந்த அரசியல் சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு, தேசபக்தர்களுக்கும் நாட்டு மக்களுக்கும் ஊக்கத்தையும் உற்சாகத்தையும் தன்னம்பிக்கையையும் ஊட்டும் நோக்கத்தோடு, பாரத நாட்டின் நிலையைப் பாஞ்சாலியின் நிலையில் இனம் கண்டு, அவளுக்கு நேர்ந்த துன்பம் பாரதப் போரின் முடிவிலே நீங்கியது போலவும், அவளது சபதம் நிறைவேறியதைப் போலவும், பாரத நாட்டின் அவல நிலை நீங்கி, பாரத தேச பக்தர்கள் மேற்கொண்டிருந்த விடுதலைப் போர் இயக்கமும் வெற்றி பெறத்தான் செய்யும் என்பதை உணர்த்தும் விதத்திலும்தான் தனது 'பாஞ்சாலி சபத'க் காவியத்தைப் பாடி முடித்திருக்கிறான் என்பதை நாம் புரிந்துகொள்ளலாம். இன்னும் சொல்லப் போனால், பாரதியின் பாஞ்சாலி சபதத்தில் பாஞ்சாலி எடுத்துக்கொள்ளும் சபதமானது, தீவிரத் தேசியவாத இயக்கமும், இந்திய நாட்டுப் புரட்சி இயக்கமும் அடக்குமுறையினால் நிலைகுலைந்து போயிருந்த ஒரு தருணத்தில், அந்த இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் சார்பிலும், நாட்டு மக்களின் சார்பிலும், பாரதியே எடுத்துக் கொள்ளும் சபதமேயாகும். இவையே பாஞ்சாலி சபதத்தில் குடிகொண்டுள்ள மறைபொருளாகும்.

# 3

# பாரதியின் 'கிருதயுகம்'—ஓர் ஆராய்ச்சி

பல மொழி பேசும் இந்திய நாட்டுக் கவிஞர் பெருமக்கள் அனைவரிலும், நமது மகாகவி பாரதிதான் 1917ஆம் ஆண்டில் ரஷ்யாவில் நிகழ்ந்த அக்டோபர் சோஷலிசப் புரட்சியை, பொதுவுடைமைப் புரட்சியை வாழ்த்தி வரவேற்றுப் பாடிய முதற் பெருங் கவிஞனாக விளங்கியுள்ளான். இந்த உண்மையை இப்போது சோவியத் நாட்டினரும் கண்டுணர்ந்து அவனைப் போற்றுகின்றனர். உதாரணமாக, ''சோவியத் பண்பாடு'' என்ற சோவியத் சஞ்சிகை, 1982ல் பாரதி நூற்றாண்டு விழாவையொட்டி எழுதிய கட்டுரையொன்றில், ''இந்திய - சோவியத் உறவு வரலாற்றின் முதல் பக்கங்களை அவர்தான் (பாரதிதான்) எழுத வேண்டும் என விதிக்கப் பெற்றதுபோல் அமைந்துவிட்டது'' என்று எழுதியது. (*THE HINDU* 18-11-1982).

அந்தப் புரட்சியை வாழ்த்தி வரவேற்றுப் பாட முனைந்த பாரதி,

மாகாளி பராசக்தி உருசிய நாட்டினில்
கடைக்கண் வைத்தாள்; அங்கே
ஆகாவென்று எழுந்தது பார் யுகப்புரட்சி!
(புதிய ருஷ்யா – பாடல் 1)

என்று எடுத்த எடுப்பில் அதனை ஓர் ''யுகப் புரட்சி என்று குறிப்பிட்டு வாழ்த்துகிறான். இதன் பின் அவன் தன் பாடலை முடிக்கும்போதும்,

குடி மக்கள் சொன்னபடி குடிவாழ்வு
மேன்மையுற, குடிமை நீதி
கடியொன்றில் எழுந்தது பார்; குடியரசென்று
உலகறியக் கூறி விட்டார்;
அடிமைக்குத் தளையில்லை, யாருமிப்போது
அடிமையில்லை, அறிக என்றார்;
இடிபட்ட சுவர்போலே கலி விழுந்தான்;
கிருத யுகம் எழுக மாதோ!
(புதிய ருஷ்யா – பாடல் 6)

என்று பாடித் தனது 'புதிய ருஷ்யா' என்ற பாடலை முடிக்கிறான்.

ரஷ்யாவில் நிகழ்ந்த அந்தப் புரட்சியைக் கலியுகம் முடிந்து கிருத யுகம் தொடங்கிய யுக மாற்றமாக, ஓர் யுகப் புரட்சியாகப் பாரதி கண்டது வெறும் கற்பனை நயம்தானா? கவிதா உருவகம்தானா?

இல்லை. உண்மையில் பாரதியின் 'கிருத யுகம்' பற்றிய இந்தக் கருத்துக்கு, ஒரு தர்க்கரீதியான பரிணாம வளர்ச்சியே இருந்திருக்கிறது. அதன் விளைவாகவே அவன் அந்தப் புரட்சியை ஓர் யுகப்புரட்சி என வருணித்துப் பாடினான் என்பதை நாம் பாரதியின் எழுத்துக்களை ஊன்றிப் படித்தால் உணர்ந்துகொள்ள முடியும். அந்தப் பரிணாம வளர்ச்சியை ஆராய்ந்து இனம் கண்டறிவதே இந்தச்சொற்பொழிவின் கருப்பொருளாகும்.

## கலியுகம்

கலியுகம் என்பது என்ன?

இந்திய நாட்டுப் பௌராணிகர்கள் உலக வரலாற்றுக் காலத்தை, கிரேதா யுகம், துவாபர யுகம், கலி யுகம், கிருத யுகம் என நான்கு யுகங்களாகப் பிரித்துக் கூறினார்கள். இவற்றில் கலியுகத்துக்கு முந்திய துவாபர யுகம் கிருஷ்ணன், பாண்டவர்கள் ஆகியோரின் ஆட்சிக் காலத்தோடு முடிவுற்றது. இதன் பின் கலியுகம் தொடங்கியது. இந்தக் கலியுகத்தில் பொய்யும் புலையும், சூதும் வாதும், மோசடியும் முழுப்புரட்டும், அக்கிரமங்களும் அநியாயங்களும் நிறைந்திருக்கும் என்றும் அவர்கள் கூறினார்கள். அவர்களில் கூற்றுப்படி நாம் இப்போது வாழ்ந்து வரும் யுகம் கலியுகமேயாகும். இந்தக் கலியுகம் எவ்வளவு காலம் நீடிக்கும்? பௌராணிகர்களின் கணக்குப்படி, இந்தக் கலியுகத்தின் மொத்தக் கால அளவு, நான்கு லட்சத்து முப்பத்திரண்டாயிரம் ஆண்டுகளாகும். பஞ்சாங்கக் கணக்குப்படி, இப்போது நடப்பது கலியுகத்தின் 5087ஆம் ஆண்டேயாகும். எனவே பௌராணிகர்களின் கூற்றுப்படி, இந்தக் கலியுகம் முடிவதற்கு நாம் இன்னும் நான்கு லட்சத்து இருபத்தாயிரத்துச் சொச்சம் ஆண்டுகள் வரை காத்திருக்க வேண்டும்.

சரி. இந்தக் கலியுகம் யாரால், எவ்வாறு முடிவு காணும்?

எப்போதெப்போது தருமத்துக்குப் பங்கமுண்டாகி, அதருமம் தலைதூக்கி நிற்கிறதோ, அப்போதெல்லாம் நான் தோன்றுகிறேன்.

சாதுக்களைக் காக்கும் பொருட்டும், தீங்கு செய்வோர்களை நாசம் செய்யும் பொருட்டும், தருமத்தை நன்கு நிலைநாட்டும் பொருட்டும் நான் யுகம்தோறும் வந்து பிறக்கிறேன்' (பகவத் கீதை – 4: 7, 8) என்று குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் அர்ஜுனனுக்குக் கீதோபதேசம் செய்த கிருஷ்ண பரமாத்மாதான், தனது கூற்றுக்கேற்ப, தனது அவதாரங்களில் பாக்கியாகவுள்ள கல்கி அவதாரத்தைக் கலியுக முடிவில் மேற்கொண்டு, பூமியில் அவதரித்து, உலகில் துஷ்டர்களைச் சங்காரம் செய்து தருமத்தையும் நீதியையும் நிலை நாட்டுவான். அதன் பின் சகல தருமங்களும் நீதிகளும் தழைத் தோங்கும் ''கிருதயுகம்'' தொடங்கும். இதுதான் பௌராணிகர்களின் கணிப்பு.

இவ்வாறு உலகில் அதருமமும் அநியாயமும் கோலோச்சும் கலியுகம் இன்னும் லட்சக் கணக்கான ஆண்டுகள் கழித்தே, அதுவும் ஆண்டவன் மீண்டும் அவதாரம் செய்யும் காலத்திலேயே முற்றுப் பெறும் என்று பௌராணிகர்கள் கூறியபோதிலும்கூட, அநீதியும் அதருமமும் மலிந்த கலியுகம் விரைவிலேயே முடிந்து, நீதியும் தருமமும் நிலைக்கவும் தழைக்கவும் செய்யும் கிருதயுகம் சீக்கிரமே தோன்ற வேண்டும் என்ற வேட்கை ஞானிகளிடமும், தத்துவாசாரியர்களிடமும் மேலோங்கியே இருந்து வந்துள்ளது. உதாரணமாக, ஆழ்வாராதியர்களில் சிறந்த தத்துவ ஞானியாக மதிக்கப்படும் நம்மாழ்வார்,

பொலிக! பொலிக! பொலிக!
போயிற்று வல்லுயிர்ச் சாபம்;
நலியும் நரகமும் நைந்த;
நமனுக்கு இங்கு யாதொன்றும் இல்லை!
கலியுகம் கெடும்; கண்டு கொண்மின்......

(திவ்யப் பிரபந்தம் 3352)

திரியும் கலியுகம் நீங்கித்
தேவர்கள் தாமும் போந்து
பெரிய கிதயுகம் பற்றிப்
பேரின்ப வெள்ளம் பெருக,

கரிய முகில் வண்ணன், எம்மான்
கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல்
இரியப் புகுந்து, இசைபாடி
எங்கும் இடம் கொண்டனவே
(திவ்வியப் பிரபந்தம் 3354)

தொக்க அமரர் குழாங்கள்
எங்கும் பரந்தன; தொண்டீர்!
ஒக்கத் தொழுகிற் றிராகில்
கலியுகம் ஒன்றும் இல்லையே!
(திவ்யப் பிரபந்தம் 3361)

என்றெல்லாம் தமது 'திருவாய் மொழி'யில் பாடிச் சென்றுள்ளார். எனினும், 'ஒக்கத் தொழுகிற்றிராகில் கலியுகம் ஒன்றும் இல்லை' என்று அவர் பாடியுள்ளதால், உலக மக்களெல்லாம் ஒன்று சேர்ந்து நாராயணனைத் தொழுது வழுத்தினுல் அவன் அருளினுல் கலியுகம் அற்றுப் போய்விடும் என்று அவர் கருதியதாகவே நாம் கொள்ள லாம். சொல்லப்போனுல், தமிழ்நாட்டில் புறச்சமயங்கள் எனக் கூறப்பட்ட சமண, பௌத்த சமயங்களின் ஆதிக்கம் மேலோங்கி, வைதிக சமயங்களின் செல்வாக்கு குன்றியிருந்ததைக் கண்டு, வைதிக சமயங்களுக்கு ஆதரவாக எழுந்த பக்தி இயக்கத்தைச் சேர்ந்த நம்மாழ்வார், சமண, பௌத்த சமயங்களின் ஆதிக்கத்தையே கலியுகம் எனக் கருதினுர் என்றும், எனவே மக்கள் அவற்றை ஆதரிப் பதைக் கைவிட்டு, நாராயணனை வணங்கும் வைண சமயத்தைத் தழுவி, அதனை ஆதரிக்கமுன்வந்து விட்டால், கலியுகம் முடிந்து கிருதயுகம் தோன்றிவிடும் என்றே அவர் கூறினுர் என்றும் கொள்ளவும் நமக்கு இடமுண்டு.

பாரதியும் நம்மாழ்வாரின் பாசுரங்களைக் கற்றவன்தான். மேலும், அவனே 'யாரைத் தொழுவது?' என்ற தனது கட்டுரையொன்றில் (கட்டுரைகள் — தத்துவம்) 'ஒக்கத் தொழுகிற்றிராகில் கலியுகம் ஒன்றுமில்லை என்று நம்மாழ்வார் சொல்கிருர். ஹிந்துக்கள் தங்க ளுடைய வேதப் பொருளை நன்ருகத் தெரிந்துகொண்டு கூடித் தொழுவார்களேயானுல், கலியுகம் நீங்கிப் போய்விடும்' என்று எழுதுகிருன். மேலும், தான் பாண்டிச்சேரியில் வாழ்ந்து வந்த காலத்தில் இயற்றிய கண்ணன் பாட்டில், நம்மாழ்வாரைப் பற்றி பின்பற்றி,

தீர்ப்பான் இருளை; பேர்ப்பான் கலியை;
ஆர்ப்பார் அமரர் பார்ப்பார் தவமே!
(கண்ணன் திருவடி — 6)

என்றும் அவன் பாடியுள்ளான்.

## கிருத யுகம் பற்றிய முதற் குறிப்பு

ஆனால், பாரதி ருஷ்யப் புரட்சி வெற்றி பெற்றதை வாழ்த்திப் பாடியபோது, அவன் அங்கு நிகழ்ந்த பொதுவுடைமைப் புரட்சியையே கலியுகத்துக்கு முடிவு கட்டி, கிருத யுகத்தைத் தோற்றுவித்த புரட்சியாகக் கண்டிருக்கிறான் என்பதையே நாம் அவனது 'புதிய ருஷ்யா' என்ற பாடலில் காண்கிறோம். அவ்வாறு காணும்போது, அரசியல், பொருளாதார, சமூக விடுதலைகள் ஆகிய அனைத்தையும் உத்தரவாதம் செய்யக்கூடிய பொதுவுடைமை மலரும் காலத்தையே அவன் கிருத யுகத்தின் உதயகாலமாகக் கருதியுள்ளான் என்பதை நாம் உணர்கிறோம்.

கலியுகத்தையும் கிருத யுகத்தையும் பற்றிப் பௌராணிகர்கள் கூறியுள்ள ஒரு கருத்து, பாரதியின் உள்ளத்தில் ஒரு புதிய அர்த்த பாவத்தைப் பெற்று எவ்வாறு பரிணமித்தது ?

பாரதியின் கவிதைகளின் கால வரிசைப்படி பார்த்தால், கலியுகம் மாறிக் கிருதயுகம் தோன்றுவது பற்றிய கருத்து, அவன் 1907ஆம் ஆண்டில் இயற்றிய கவிதையில்தான் முதன் முதலில் இடம் பெறக் காண்கிறோம்.

எனது முதற் சொற்பொழிவின்போது, வங்கத்தில் ஆயுதந் தாங்கிய விடுதலைப் போராட்டத்துக்காக, ரகசியச் சங்கங்களை அமைத்து வந்தவர்களில், சுவாமி விவேகானந்தரின் தம்பியான பூபேந்திரநாத தத்தர் என்ற புரட்சிவாதியான இளைஞரும் ஒருவர் எனக் குறிப்பிட்டேன். இவரை ஆங்கிலேய அரசாங்கம் 1907ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் கைது செய்து, இவர் மீது ராஜத்துரோக வழக்கொன்றைத் தொடுத்தது; இந்த வழக்கு ஜூலை 22ல் தொடங்கியது; வழக்கின் முடிவில் இவருக்கு ஓராண்டுச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது. இவ்வாறு பூபேந்திர நாதர் சிறையிலடைக்கப்பட்ட காலத்தில், பாரதி அவரை வாழ்த்தி நான்கு பாடல்களைக் கொண்ட ஒரு கவிதையை இயற்றினான்.

பாபேந்திரியம் செறுத்த எங்கள்
　　விவேகா னந்தப் பரமன் ஞான
ரூபேந்திரன் தனக்குப் பின் வந்தோன்,
　　விண்ணவர்தம் உலகையாள் பிர
தாபேந்திரன் கோபமுறினும் அதற்கு
　　அஞ்சி அறம் தவிர்க்கிலாதான்,
பூபேந்திரப் பெயரோன், பாரத நாட்டிற்
　　கடிமை பூண்டு வாழ்வோன்

வீழ்த்தல் பெறத் தருமமெலாம், மறமனைத்தும்
　　கிளைத்துவர, மேலோர் தம்மைத்
தாழ்த்த தமர் முன்னோங்க, நிலைபுரண்டு
　　பாதகமே ததும்பி நிற்கும்
பாழ்த்த கலியுகம் சென்று மற்றொருகம்
　　அருகில் வரும் பான்மை தோன்றக்
காழ்த்தமன வீரமுடன் யுகாந்தரத்தின்
　　நிலையினிது காட்டி நின்றான்.

(பூபேந்திர விஜயம் – பாடல்கள் 1, 2

என்று அந்தக் கவிதையில் அவரை வாழ்த்தினான்.

இந்தக் கவிதையை மேலோட்டமாகப் பார்த்தால், நாட்டு விடுதலைக்காகப் போராடியதன்மூலம் பூபேந்திரநாதர் கலியுகம் மறைந்து கிருதயுகம் தோன்றக்கூடிய யுகசந்தி நிலையைக் காட்டி நின்றார் என்றே நாம் பொருள்கொள்ளத் தோன்றும். ஆனால் பூபேந்திரர், அரவிந்தரின் தம்பி பரீந்திரர் மற்றும் அவினாஷ் பட்டாசார்யா என்ற மற்றொரு புரட்சிகரமான இளைஞர் ஆகியோரோடு சேர்ந்து, 'யுகாந்தர்' என்ற வாரப் பத்திரிகை ஒன்றை நடத்தி வந்தார். இந்தப் பத்திரிகைக்குப் பூபேந்திரரே ஆசிரியப் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருந்தார். இந்தப் பத்திரிகை ஆயுதந்தாங்கிய புரட்சிப் போராட்டத்துக்கான அவசியத்தைப் பற்றியும், அதற்கான வழிவகைகளைப் பற்றியும், மிகவும் பகிரங்கமாகவே துணிந்து எழுதி வந்தது. பூபேந்திரரைச் சார்ந்து நின்ற இளைஞர்கள் எல்லோரும் தம்மை 'யுகாந்தர் குழு'வைச் சேர்ந்து புரட்சிவாதிகள் என்றே கூறிக்கொண்டனர். 'யுகாந்தர்' பத்திரிகையும் இந்தக் குழுவின் குரலாகவே ஒலித்து வந்தது. இந்தப் பத்திரிகையில் வெளிவந்த கட்டுரைகளுக்காகவே இந்தப் பத்திரிகை அலுவலகம் சோதனையிடப்

பட்டது; பத்திரிகையின் மீதும் அதன் ஆசிரியரான பூபேந்திரரின் மீதும் வழக்குத் தொடரப்பட்டது. இந்த உண்மையைக் கருத்தில் கொண்டு பார்த்தால்,

காழ்த்த மன வீரமுடன் யுகாந்தரத்தின்
நிலை இனிது காட்டி நின்ருன்

என்று பாரதி பாடியபோது, அவன் பூபேந்திர நாதரின் 'யுகாந்தர்' என்ற பத்திரிகையின் பெயரைக் கருத்தில்கொண்டுதான் அவ்வாறு பாடினுன் என்பதை நாம் புரிந்துகொள்ளலாம்.

'யுகாந்தர்' என்ற சொல்லுக்கு என்ன பொருள்? 'யுகாந்தர்' என்ருல், யுக முடிவு அல்லது யுக சந்தி என்றே பொருள்படும். 'யுகாந்தர்' பத்திரிகை தனது தலைப்பில், நாம் முன்னர்க் குறிப்பிட்ட 'எப்போதெப்போது தருமம் அழிந்து அதர்மத்தின் கை மேலோங்கு கிறதோ, அப்போதெல்லாம் நான் பூமியில் அவதாரம் செய்கிறேன்' என்று கூறும் பகவத் கீதையின் சுலோகத்தையே பொறித்திருந்தது. அதாவது ஆங்கிலேயர் ஆட்சியிலிருந்து இந்திய நாடு விடுதலை பெறுவதே கலியுகம் தோன்றிக் கிருதயுகம் தோன்றும் காலமாகும், அத்தகைய காலம் நெருங்கி வரும் சந்தி நிலையில் நாம் இருக்கி ரோம் என்பதை உணர்த்தும் விதத்திலேயே, அந்தப் பத்திரிகை 'யுகாந்தர்' என்ற பெயரைச் சூடியிருந்தது. இதனைக் கருத்தில் கொண்டுதான் பாரதியும்,

பாழ்த்த கலியுகம் சென்று, மற்ருெருகம்
அருகில் வரும் பான்மை தோன்ற

எனப் பாடினுன் என்பதை நாம் புரிந்துகொள்ளலாம்.

மேலும், எனது முதற் சொற்பொழிவின்போது, இத்தாலிய நாட்டு விடுதலை வீரன் மாஜினி தோற்றுவித்த "Young Italy" — இளம் இத்தாலி – என்ற சங்கத்தின் பெயரைக் கருத்தில்கொண்டு, சென்னையில் பாரதியின் பங்கெடுப்போடு 'பால பாரத சங்கம்' என ஒரு சங்கம் தோற்றுவிக்கப்பட்டதைப் பற்றிக் குறிப்பிட்டேன். இந்தப் 'பால பாரத சங்கம்' தான் 1906 இறுதியில் கல்கத்தா காங்கிரசுக்குச் செல்ல வேண்டிய பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தது. இந்தக்

காங்கிரசுக்குப் பாரதியும் ஒரு பிரதிநிதியாகச் சென்ருன். இந்தச் சங்கம் வெளியிட்ட துண்டுப் பிரசுரம் ஒன்றை, பாரதி தனது ,இந்தியா பத்திரிகையில், 1907 மார்ச் 3 அன்று வெளியிட்டிருந்தான். அந்தத் துண்டுப் பிரசுரத்தின் தலைப்பிலும் நாம் முன்னர்க் கூறிய பகவத் கீதை வாசகத்தின் வடமொழி மூலமும், அதன் தமிழாக்கமும் இடம் பெற்றிருந்தன. மேலும் அந்தத் துண்டுப் பிரசுரத்தின் இறுதியில். ''இப்போது நடைபெற்று வரும் பிரிட்டிஷ் ராஜாங்க முறைமையிலே நாம் மேலே கூறியது போன்ற அநீதிகள் எத்தனையோ இருக்கின்றன. இந்த அநீதிகளை நாசம் செய்யும் பொருட்டாக, நமக்கிடையே கடவுள் பத்தாம் அவதாரம் செய்திருக்கின்ருர். இப்போது மனித ரூபத்தில் அவதாரம் செய்யவில்லை. அவருடைய அவதாரத்தின் பெயர் சுதேசியம்; அவருடைய ஆயுதம் Boycott ; அதாவது அன்னிய சம்பந்த விலக்கு அல்லது பகிஷ்காரம். அவருடைய மந்திரம் வந்தே மாதரம்'' என்று கூறப்பட்டிருந்தது. (பாரதி தரிசனம். தொகுதி 2. பக்.68).

இவற்றிலிருந்து, இந்திய நாட்டின் விடுதலைப் போராட்ட காலத்தில் பூபேந்திரர் முதலிய புரட்சிவாதிகள், கலியுகம் மற்றும் கிருதயுகம் பற்றிப் பௌராணிகர்கள் கூறிய கருத்தை, அன்னியருக்கு அடிமையாக இருக்கும் காலமே கலியுகம், அவர்களோடு போராடி அரசியல் விடுதலை பெறுவதே கிருதயுகத்தின் உதயம் என்ற அரசியல் கருத்தாக மாற்றியிருந்ததை அடியொற்றியே பாரதி மேற்கூறிய வாறு பாடினுன் என்று நாம் கொள்ள இடமுண்டு.

## விடுதலைக்கு ஜாதகம்

எனது முதற் சொற்பொழிவின்போது, இந்திய நாட்டில் இந்த நூற்ருண்டின் தொடக்கத்தில் எவ்வாறு ஆயுதந்தாங்கிய விடுதலைப் போருக்கான புரட்சி இயக்கங்கள் தோன்றின என்றும், அவற்றில் பாரதிக்கும் எவ்வாறு ஈடுபாடு இருந்தது என்றும் குறிப்பிட்டேன். இந்த நூற்ருண்டின் தொடக்கத்தில் 1905ஆம் ஆண்டில் நிகழ்ந்த முதல் ரஷ்யப் புரட்சியினுல் உத்வேகம் பெற்று, அன்றைய ஆங்கி லேய அரசாங்கத்துக்கு எதிராக ஆயுதம் தாங்கிப் போராட வேண்டும், தனி நபர் பயங்கரவாதச் செயல்களில் ஈடுபடுவதோடுகூட, ராணு வத்துக்குள்ளும் புரட்சியைத் தூண்டிவிட வேண்டும், மக்கள் மத்தி யிலும் ஆயுதந் தாங்கிய போருக்குப் படை திரட்டவேண்டும் என்றெல்

லாம் கருதிச் செயல்பட்டு வந்த புரட்சிவாதிகள், ஆயுதப் போராட்டத்துக்கு விரைவிலேயே தயாராகி, அந்தப் போரையும் நடத்தி, ஒரு சில ஆண்டுகளிலேயே நாட்டு விடுதலையைப் பெறுவதில் வெற்றி கண்டுவிடலாம் என்றே கருதி வந்தனர்; அவ்வாறே கூறியும் வந்தனர். இதனால்தான் அரவிந்தரும்கூட, புரட்சிக்கான ரகசியச் சங்கங்களில் சேர முன்வரும் இளைஞர்கள், ஒரு சில ஆண்டுகள் — அதாவது விடுதலையைப் பெறும் காலம் வரையிலும் — பிரம்மசரிய விரதம் ஏற்றுப் பணிபுரிய வேண்டும் என்று தமது 'பவானி மந்திர்' என்ற நூலில் எழுதினார். இதுபற்றி நான் எனது முதற் சொற்பொழிவிலேயே குறிப்பிட்டிருக்கிறேன்.

இவ்வாறு அவர்கள் நம்பியிருந்ததை எடுத்துக்காட்டுவதற்கு நாம் பல உதாரணங்களைக் காட்ட முடியும். உதாரணமாக, பூபேந்திரரை ஆசிரியராகக்கொண்டு வெளிவந்த 'யுகாந்தர்' பத்திரிகை 1907ஆம் ஆண்டில், 'நாம் நீண்ட காலம் காத்திருக்க வேண்டியதில்லை... போராட்ட வெறி கொண்டு நம் மக்களிடையே (பாரத) தேவி போர்க்கோலம் பூண்டு வந்து நிற்பதை நம் தெய்வீகக் கண்களால் காண்கிறோம். அதோ அங்கே குருதி தோய்ந்த வாள் செந்தழல் ஒளியுடன் பிரகாசிப்பதையும் விரைந்து சுழல்வதையும் பாருங்கள். கொரில்லாப் படையினர் நாடெங்கும் திரண்டு எழுவதையும் காணுங்கள். அதோ அன்னையின் ஆசியினால் பலப்பட்டு, ஆயுதசாலைகளை அவர்கள் கொள்ளையடிப்பதை நோக்குங்கள். அவர்கள் போடும் வெற்றிக் கோஷங்கள் விண்ணையதிரச் செய்து பகைவனிடையே பீதியைக் கிளப்புகின்றன. அங்கே வங்காள விரிகுடாக் கடல் அசுரர்களின் வெற்றுச் சிம்மாசனத்தை அடித்துச் செல்வதையும் காணுங்கள்' என்று எழுதியது (மேற்கோள்: இந்தியப் புரட்சி இயக்கம்— ப. கோதண்டராமன், பக். 84). இதனால்தான் பாரதி பூபேந்திரநாதரைப் பற்றித் தான் பாடிய பாட்டில்

> பாழ்ந்த கலியுகம் சென்று மற்றொருகம்
> அருகில் வரும் பான்மை தோன்ற

பூபேந்திரர் 'யுகாந்தர்' பத்திரிகையை நடத்தி வந்ததாகப் பாடினான். அது மட்டுமல்ல. 'யுகாந்தர்' பத்திரிகை விரைவில் வரப்போகும் சுதந்திரப் போரை மனக் கண்ணால் கண்டு சித்திரித்ததையும் மிஞ்சும் விதத்தில், 'சுதந்திரமே வந்துவிட்டது' என்று நம்பிக்கையூட்டி, அதே 1907ஆம் ஆண்டில் பாரதி,

ஆடுவோமே! பள்ளுப் பாடுவோமே!
ஆனந்த சுதந்திரம் அடைந்துவிட்டோம் என்று...
(சுதந்திரப்பள்ளு—பல்லவி)

என்றே பாடி விட்டான்!

'யுகாந்தர்' பத்திரிகையைப் போலவே, வெளிநாடுகளிலிருந்து கொண்டு இந்திய நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்டு வந்த இந்திய தேசபக்தர்களில் ஒருவரும், ஐரோப்பாவில் லண்டனிலிருந்து கொண்டு, இந்திய விடுதலைக்காக 'இந்தியச் சமூகவியல்வாதி' (Indian Sociologist) என்ற சஞ்சிகையை நடத்தி வந்த புரட்சிவாதியுமான சியாம்ஜி கிருஷ்ணவர்மா என்பவரும், இந்தியாவில் ஒருசில ஆண்டுகளில் ஆயுதந்தாங்கிய விடுதலைப் போரை நடத்தி வெற்றி கண்டு விடலாம் என்றே நம்பிக்கை ஊட்டி வந்தார். இவர் தமது பத்திரிகையில் எழுதி வந்த விஷயங்களைப் பற்றி, சென்னையில் அதிதீவிரவாதிகளாகத் தம்மைக் காட்டிகொண்ட இளைஞர்கள் சிலர் சென்னை ஜன சங்கம் என்ற அமைப்பில் பேசிக்கொண்டதைப் பற்றி, பாரதி 1910 பிப்ரவரியில் பாண்டிச்சேரியில் இருந்து வெளியிட்ட 'ஞானரதம்' என்ற நூலில், ஒருவன் 'நாம் இந்த ரேட்டில் இந்த விதமாகவே வேலை செய்துகொண்டு வந்தால், ஆங்கிலேயரின் வர்த்தகப் பெருமை ஆறு மாதத்தில் காற்ருய்ப் போய்விடும்' என்பான். மற்ெருருவன் 'சியாம்ஜி கிருஷ்ணவர்மா ஸ்வராஜ்யம் கிடைக்கப் பத்து வருஷமாகுமென்று கணக்குப் போட்டிருக்கிருர். ஆறு வருஷத்தில் கிடைத்துவிடுமென்று எனக்குத் தோன்றுகிறது' என்பான். தவளையுருவம் கொண்ட மூன்ருமவன் 'ஆறு மாதமென்று சொல்லடா' என்று திருத்திக்கொடுப்பான்...'' (ஞானரதம். அத். மண்ணுலகம்) என்று அவர்களைக் கேலி செய்து எழுதியுள்ளான். இதன் மூலம் சியாம்ஜி கிருஷ்ணவர்மா ஸ்வராஜ்யம் கிடைக்கப் பத்து வருடமே ஆகும் என்று கணக்குப் போட்டிருந்தார் என்பதை நாம் தெரிந்துகொள்ளலாம்.

இதேபோல் அரவிந்தரும் ஆயுதந்தாங்கிய சுதந்திரப் போர் விரைவிலேயே நடைபெற்று வெற்றியும் கண்டுவிடும் என்றே நம்பி வந்தார்; அத்தகைய நம்பிக்கையையும் அவர் ஊட்டி வந்தார். பாண்டிச்சேரியிலிருந்து 'இந்தியா' பத்திரிகை வெளிவந்துகொண்டிருந்த காலத்தில், பாரதி அப்பத்திரிகையின் 1909 செப்டம்பர்

18ஆம் தேதியிட்ட இதழில், 'இந்தியா' பத்திரிகையின் 'பிரதிநிதி' ஒருவர் அரவிந்தரைக் கல்கத்தாவில் பேட்டி கண்ட விவரத்தை வெளியிட்டிருந்தான். அதில் அரவிந்தர் இவ்வாறு கூறியிருந்தார் :

''ஒரு பிரளயம் வருகின்றது. அப்பிரளயம் வருவதற்கான முன் அடையாளங்கள் எல்லாம் தென்படுகின்றன. 1908ஆம் வருஷத்துடன் கலியுகம் 5000ஆண்டுகள் ஆகிவிட்டன. 1907ஆம் வருஷ முதல் ஓர் புதிய காலம் தொடங்கியிருக்கிறது. இஃது பலத்திலும் அளவிலும் மிகுதி பெற்றுக்கொண்டே வருகின்றது. இன்னும் நான்கு வருஷங்களில் இப்பிரளயம் எல்லோர் கண்ணுக்கும் தெரியும்படி, நன்ருக விருத்தியடைந்திருக்கும். அதற்கடுத்த 4 அல்லது 5 வருஷங்களுக்குள் இது பரிபூரணமாகி விடும்''.

இதன் பின் பத்திரிகையின் நிருபர் ''இந்தப் பிரளயம் எப்படிப் பட்டது?'' என்று அரவிந்தரிடம் கேட்கிருர். அதற்கு அரவிந்தர் இவ்வாறு பதில் சொல்கிருர் :

''மகாப் பிரளயம்; மாறுதல்; புரட்சி; மகாக்கிராந்தி; உயர்ந்தோர் தாழ்தல்; தாழ்ந்தோர் உயர்தல்; மாறுதல், மாறுதல்; எங்கு பார்த்தாலும் மாறுதல்; அரசாட்சியிலே மாறுதல்; நமது ஜனங்களிடம் மாறுதல்; புதிய பிரச்சினைகள், புதிய சிந்தனைகள்; எல்லாச் செயல்களிலும் புதிய வழிகள்'' (மேற்கோள்: புதுவையில் பாரதி. ப. கோதண்டராமன். பக். 33)

(அரவிந்தரோடு நடத்திய இந்தப் பேட்டி, பாரதி நடத்தி வந்த 'விஜயா' என்ற தினசரிப் பத்திரிகையிலும் வெளிவந்துள்ளது என்பது, ஆஷ் கொலை வழக்கின்போது சமர்ப்பிக்கப்பட்ட 'எக்ஸிபிட் பிபிபி' – Exhibit BBB-யில் இந்தப் பேட்டி ''விஜயா Extract'' என்ற குறிப்புடன் உள்ளதிலிருந்து தெரிய வருகிறது).

அரவிந்தர் கூறிய கணக்கென்ன? 1907ஆம் ஆண்டில் வீறு பெற்றெழுந்துவிட்ட புரட்சி நடவடிக்கைகள் விரைவிலேயே அதிகரித்து, 1909ஆம் ஆண்டில் அவர் தெரிவித்த கணக்குப்படி, நான்கே ஆண்டுகளில் அதாவது 1913–1914ஆம் ஆண்டு வாக்கில், சுதந்திரப் போர் வெற்றி பெற்று இந்தியா விடுதலை பெற்றுவிடும், அரசாட்சியும் மாறிவிடும் என்று அவர் கருதினர் என்பதுதான்.

இதேபோல், 1911ல் ஆஷ்துரை கொலையுண்ட பின்னர், போலீசார் நடத்திய சோதனைகளின்போது அகப்பட்ட தமிழ்நாட்டு ரகசியச் சங்கத்தின் பிரகடனம், மற்றும் அச்சங்கத்தில் சேர்பவர்கள் செய்துகொண்ட சத்தியப் பிரமாணம் ஆகியவையும், ஆயுதம் தாங்கிய போராட்டத்தில் நம்பிக்கை வைத்திருந்த தமிழ்நாட்டு இளைஞர்களும் தேசபக்தர்களும் விடுதலைப் போர் விரைவில் வெற்றி பெற்றுவிடும் என்றே நம்பியிருந்தனர் என்பதற்குச் சான்று பகர் கின்றன. ஆஷ் கொலை வழக்கில் 'எக்ஸிபிட் 9' (Ext. T. 9) ஆகச் சமர்ப்பிக்கப்பட்ட அந்தப் பிரகடனத்தில், ''நமது நாட்டில் ஸ்வதேசி யுத்தம் கிளம்பிவிட்டது. ஆநந்த வருஷத்திற்குள் வலுத்த யுத்தம் நடத்த வேண்டியது......ஆரிய வீரர்களே! இனிமேல் தயங்காதீர்கள்! உங்களுக்கு ஈசுவரன் மங்களத்தைத் தருவாராக! ஜெய பாரத!'' என்று கூறப்பட்டிருந்தது. இதேபோல் 'எக்ஸிபிட் 10' (Ext. T. 10) ஆகச் சமர்ப்பிக்கப்பட்ட அபிநவபாரத சமாஜம் என்ற ரகசியச் சங்கத்தின் சத்தியப் பிரமாணத்திலும், ''பறங்கி இந்த நாட்டிலிருந்து வருகிற ஆநந்த வருஷத்துக்குள் தொலைந்துவிட வேண்டியது என்று பகவத் சங்கல்பம் இருப்பதினாலும், அது காரணம்பற்றி மகரிஷி களும் சித்த புருஷர்களும் இந்த அருங்காரியத்தைப் பின்னிருந்து நடத்திக் கொண்டிருப்பதினாலும், இந்த ஆவேசம் சத்துருவின் சூழ்ச்சியினால் அடக்கப்படாமல் காட்டுத் தீபோல் எங்கு பார்த்தாலும் பரவிக்கொண்டு வருகிறது'' எனக் கூறப்பட்டிருந்தது. இதில் குறிப்பிட்டுள்ள 'ஆனந்த வருஷம்' என்பதும் 1914-1915ஆம் ஆண்டுதான். இவ்வாறு பூபேந்திரநாதர் தொடங்கி, சியாம்ஜி கிருஷ்ணவர்மா, அரவிந்தர் மற்றும் அபிநவபாரத சமாஜத்தினர் வரையிலும், இந்தியா அன்னிய ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெறும் காலத்தைக் குறித்து ஒரு ஜாதகமே குறித்துக் கொடுத் திருந்தனர்.

ஆனால், இந்தியாவில் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் வீறுபெற்ற புரட்சி இயக்கத்தைச் சேர்ந்தவர்கள், 1908ஆம் ஆண்டில் வீசிய முதல் வெடிகுண்டு வீச்சைத் தொடர்ந்து, அதாவது புரட்சி இயக்கத்தில் பயங்கரவாதம் தலைதூக்கிய பிறகு, புரட்சி இயக்கமும் சரி, தீவிரத் தேசியவாத இயக்கமும் எவ்வாறு அடக்கி ஒடுக்கப்பட்டன, தீவிரத் தேசியவாத இயக்கமே எவ்வாறு நிலைகுலைந்து 1911ஆம் ஆண்டுவாக்கில் செயலிழந்து முடிவு கண்டுவிட்டது என்பதை முந்திய சொற்பொழிவின்போது குறிப்பிட்டோம். இதனால் இந்தியா

விடுதலை பெறும் வாய்ப்பே மிகவும் தள்ளிப்போய்விட்டது. அரவிந்தர், சியாம்ஜி கிருஷ்ணவர்மா முதலியோர் எதிர்பார்த்தபடி. விடுதலைப் போரும் நடக்கவில்லை; அதாவது அவர்கள் எதிர்பார்த்திருந்த அரசியல் விடுதலை என்ற யுக மாற்றம், கிருத யுகத்தின் தோற்றம் நிகழவில்லை. பாரதியும்கூட அவர்களைப் போலவே அரசியல் விடுதலைக்கான போர் விரைவிலேயே வெற்றி பெறக்கூடும் என்று நம்பியிருந்திருக்கலாம். ஆயினும் அவன் அரசியல் விடுதலை பெறுவதை மட்டுமே கலியுகம் முடிந்து கிருதயுகம் தோன்றும் யுக சந்தியாகக் கருதிக்கொண்டிருக்கவில்லை என்பது தெளிவு.

## விடுதலை பற்றிய பாரதியின் கண்ணோட்டம்

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றிய தீவிரத் தேசியவாத இயக்கத்தின் தலைவர்கள் அரசியல் விடுதலை, அதாவது அன்னியராட்சியில் இருந்து பெறும் விடுதலை ஒன்றை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டிருந்தனர், அதனால் அவர்கள் சமூகச் சீர்திருத்தங்களை ஆதரிக்கவில்லை, சமயங்களில் அவற்றை எதிர்க்கவும் கூடச் செய்தனர் என்றும், ஆனால் பாரதியோ தீவிரத் தேசியவாத இயக்கத்தில் ஈடுபடுவதற்கு முன்பே சமூகச் சீர்திருத்தத்திலும் ஈடுபாடு கொண்டிருந்தான், அவன் விரும்பிய சமூகச் சீர்திருத்தங்களில் பெண் விடுதலையும் ஒன்றாகும், இதனைக் கருத்தில்கொண்டுதான் அவன் பாஞ்சாலிசபதத்தை இயற்றினான் என்றும் முந்திய சொற்பொழிவின் போது குறிப்பிட்டோம். எனவே பாரதி அரசியல் விடுதலை ஒன்றை மட்டுமே குறிக்கோளாகக்கொண்டிருக்கவில்லை. அந்தக் குறிக்கோளை எய்துவதே கிருதயுகத்தின் தோற்றமாகும் என்றும் அவன் கருதவில்லை. அவனே 'தமிழ் நாட்டின் விழிப்பு' என்ற ஒரு கட்டுரையில் (கட்டுரைகள் - மாதர்) ''இன்று தமிழ்நாட்டில் மாத்திரமேயல்லாது, பூமண்டலம் முழுவதிலும் பெண்ணைத் தாழ்வாகவும், ஆணை மேலாகவும் கருதி நடத்தும் முறைமை ஏற்பட்டிருப்பது முற்றிலும் தவறு. அது துன்பங்களுக்கெல்லாம் அஸ்திவாரம்; அநீதிகளுக்கெல்லாம் கோட்டை கலியுகத்தின் பிறப்பிடம்'' என்று எழுதியிருக்கிறான். எனவே பெண்களும் விடுதலை பெற்று அவர்கள் ஆண்களுக்குச் சமமாக மதிக்கப்படும் காலத்தில்தான் கலியுகம் மறைந்து கிருதயுகம் தோன்றும் என அவன் கருதியிருக்கிறான் என்பது தெளிவு. இதனா லேயே அவன் பெண் விடுதலை பற்றிய தனது பாடல் ஒன்றில்,

அலி அழிப்பது பெண்கள் அறமடா!
கைகள் கோத்து களித்து நின்ருடுவோம்!
(பெண்கள் வாழ்க, பாடல் 3
என்றும் பாடினன்.

மேலும், அவன் கிருதயுகம் பற்றிய தனது கருத்தை வேறு பல கட்டுரையில், (கட்டுரைகள் – தத்துவம்) ''பலஹீன ஐந்துக்களுக்கு மனிதன் எதுவரை அநியாயம் செய்கிருனே அதுவரை கலியுகம் இருக்கும். அநியாயம் நீங்கினல் கலி இல்லை; உலகம் முழுவதிலும் கலியில்லை ... எவன் அநியாயத்தைக் கைவிடுகிருனே, அவனுக்குக் கிருதயுகம் அந்த க்ஷணமே கைமேலே கிடைக்கும். இதில் சந்தேகம் இல்லை'' என்று எழுதுகிருன். ''பழைய உலகம்'' என்ற மற்ெருரு கட்டுரையில், ''ஏழை பாடு எப்போதும் கஷ்டம். பணக்காரனுக்குப் பலவித சௌக்கியங்களுண்டு' கோயில் காத்தவனுக்குப் பஞ்சமில்லை. சாமிகள் முக்கால்வாசிகளுக்குக் குறையாமல் பாதி கல்; பாதி சாமி. முழுச்சாமி இருந்து கோயில் நடத்தினல் உடனே கிருதயுகம் பிறந்து விடாதா?'' என்று எழுதுகிருன். (பாரதியார் கட்டுரைகள் – சமூகம்). ''சும்மா'' என்ற தனது கதையொன்றில் (பாரதியார் கதைகள்) ''எந்த ஐந்துவும் வேறு எந்த ஐந்துவையும் ஹிம்சை பண்ணு மலும் எல்லா ஐந்துக்களும் மற்றெல்லா ஐந்துக்களையும் வேதா ரூபமாகக் கண்டு வணங்கும்படிக்கும் விதியுண்டானல் அதுதான் கிருதயுகம்'' என்றும் எழுதுகிருன்.

மேலும், அவன் ''விடுதலை'' என்ற தலைப்பில், கலியுக முடிவில் வானுலகில் நடப்பதாக எழுதிய சிறு கவிதை நாடகமொன்றில், வானவர் கூற்ருகப் பின்வருமாறு பாடுகிருன்:

இந்திரன்: எல்லாப் பொழுதினும் ஏழை மானுடர்
இன்பம் கருதி, இளைத்தனர்; மடிந்தார்;
கங்கை விரும்பிக் கானல்நீர் கண்டார்;
அமுதம் வேண்டி விடத்தினை உண்டார்......
மதியின் வலிமையால் மானுடன் ஓங்குக.

ஒளி: ஒருவனைக் கொண்டு, சிறுமை நீக்கி
நித்திய வாழ்விலே நிலைபெறச் செய்தால்,
மானுடச் சாதி முழுதுநல் வழிபடும்;
மானுடச் சாதி ஒன்று; மனத்திலும்
உயிரிலும் தொழிலிலும் ஒன்றேயாகும்......

எனவே கிருதயுகம் பற்றிய பாரதியின் கருத்து அரசியல் விடுதலைக்கும் அப்பால் மிகவும் மேம்பட்ட ஒன்ருகவே, சுருங்கக் கூறின் மானிட சமுதாயம் அரசியல் விடுதலைமட்டுமல்லாமல், பொருளாதார விடுதலை, சமூக விடுதலை, கலாசார விடுதலை, ஆன்மிக விடுதலை முதலிய சகல விடுதலைகளையும் பெற்று வாழவேண்டும், அதுவே கிருதயுகம் எனப் பாரதி கருதினுன் என்று நாம் கூறலாம். எனவேதான் அவன் தனது விடுதலைப்பாட்டில் இவ்வாறு பாடினுன் :

விடுதலை! விடுதலை! விடுதலை!

பறையருக்கும் இங்கு தீயர்
புலையருக்கும் விடுதலை;
பரவரோடு குறவருக்கும்
மறவருக்கும் விடுதலை;

திறமை கொண்ட தீமையற்ற
தொழில் புரிந்து யாவரும்
தேர்ந்த கல்வி ஞானம் எய்தி
வாழ்வம் இந்த நாட்டிலே!

ஏழையென்றும் அடிமையென்றும்
எவனும் இல்லை, ஜாதியில்
இழிவு கொண்ட மனிதர் என்பது
இந்தியாவில் இல்லையே

வாழி கல்வி செல்வம் எய்தி
மனமகிழ்ந்து கூடியே
மனிதர் யாரும் ஒரு நிகர்
சமானமாக வாழ்வமே!

மாதர்தம்மை இழிவு செய்யும்
மடமையைக் கொளுத்துவோம்;
வைய வாழ்வு தன்னில் எந்த
வகையினும் நமக்குளே

தாதர் என்ற நிலைமை மாறி
ஆண்களோடு பெண்களும்
சரிநிகர் சமானமாக
வாழ்வம் இந்த நாட்டிலே!

(விடுதலை. பாடல்கள் 1, 2, 3)

இந்தப் பாடல்களின்மூலம் பாரதி ஏழை, அடிமை என்ற பேதங்கள் ஒழிந்து, ஜாதியின்பேரால் மக்களை இழிவுபடுத்தும் கொடுமை தொலைந்து, பெண்களை அடிமைப்படுத்தும் புன்மை மறைந்து, சகல மக்களும் நல்ல கல்வியறிவைப் பெற்று, தீமையற்ற தொழில் புரிந்து. சரிநிகர் சமானமாக வாழும் ஒரு சமுதாயத்தையே, அரசியல் விடுதலை, பொருளாதார விடுதலை, சமூக விடுதலை ஆகிய வற்றுக்கு வகை செய்யும் ஒரு சமத்துவ சமுதாயத்தையே குறிக் கோளாகக்கொண்டிருக்கிறன் என்பதை நாம் புரிந்துகொள்ளலாம்.

மேலும், பூபேந்திரநாதர் போன்ற புரட்சிவாதிகளான இளைஞர் களும், அ ர வி ந் த ர் முதலியோரும், ஆயுதம் தாங்கிய விடுதலைப் போராட்டத்தின்மூலம் நாட்டு விடுதலையை விரைவில் பெற்று விடலாம் என்று நம்பிக்கொண்டிருந்த காலத்தில், 1907ஆம் ஆண்டில் பாரதியும்

ஆடுவோமே! பள்ளுப் பாடுவோமே!
ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம் என்று ......

ஆடுவோமே என்று அப்போதே விடுதலை கீதம் இசைத்து விட்டான் என்று முன்னர் குறிப்பிட்டோம். பொருளாதார விடுதலை, சமூக விடுதலை முதலிய பிற விடுதலை எதைப் பற்றியும் கவலைப்படாமல், அவற்றையெல்லாம்கூடப் புறக்கணித்து, அரசியல் விடுதலை ஒன்றேயே, ஆங்கிலேயரின் ஆட்சியிலிருந்து விடுபடும் விடுதலை ஒன்றையே குறிக்கோளாகக்கொண்டு, தீவிரத் தேசியவாத இயக்கத் தலைவர்கள் செயல்பட்டு வந்த காலத்தில், சொல்லப்போனல் தீவிரத் தேசியவாத இயக்கம் அதன் உச்சகட்டத்தை எட்டியிருந்த 1907ஆம் ஆண்டில் தான் எழுதிய 'சுதந்திரப்பள்ளு' என்ற இந்தப் பாட்டிலேயே பாரதி பின்வருமாறும் பாடினன்.

பார்ப்பானை ஐயரென்ற காலமும் போச்சே — வெள்ளைப்
பறங்கியைத் துரையென்ற காலமும் போச்சே — பிச்சை
ஏற்பாரைப் பணிகின்ற காலமும் போச்சே — நம்மை
ஏய்ப்போருக் கேவல் செய்யும் காலமும் போச்சே!

எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு — நாம்
எல்லோரும் சமமென்ப துறுதியாச்சு
சங்கு கொண்டே வெற்றி ஊதுவோமே — இதைத்
தரணிக்கெல்லாம் எடுத்து ஓதுவோமே!

உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்—வீணில்
உண்டு களித்திருப்போரை நிந்தனை செய்வோம்;
விழலுக்கு நீர் பாய்ச்சி மாயமாட்டோம் — வெறும்
வீணருக்கு உழைத்துடலம் ஓயமாட்டோம்!

(சுதந்திரப்பள்ளு — பாடல்கள் 1, 2, 4)

இதன்மூலம் அவன் தேசிய கவியாக மலர்ந்து, தீவிரத் தேசியவாத இயக்கத்தில் கலந்து, செயல்பட்டு வந்த காலத்திலேயே அவனுக்கு விடுதலை என்றால் அது அரசியல் ரீதியில்மட்டுமல்லாமல், பொருளாதார ரீதியிலும், சமூக ரீதியிலும் பெறும் விடுதலையாகவே இருந்தாக வேண்டும் என்ற கருத்து உரம் பெற்றிருந்தது என்று நாம் புரிந்துகொள்ளலாம். இதனாலும், அவன் அரசியல் விடுதலையை மட்டுமே கிருத யுகத்தின் உதயம் எனக் கருதவில்லை என்பதை நாம் தெரிந்துகொள்ளலாம். இது அவனே எழுதியுள்ள ஒரு குறிப்பினாலும் நமக்குத் தெளிவாகிறது. சியாம்ஜி கிருஷ்ணவர்மா இந்தியாவுக்கு சுயராஜ்யம் கிடைக்கப் பத்து வருஷம் ஆகும் என்று கணக்குப் போட்டிருந்த விஷயத்தை, தனது 'ஞான ரதம்' என்ற நூலில் 'மண்ணுலகம்' என்ற பகுதியில் குறிப்பிட்ட பாரதி, அதே நூலில் 'தர்மலோகம்' என்ற பகுதியில் வரும் கண்வாசாரியார் என்ற பாத்திரத்தின் வாய்மொழியாக, ''பாரத நாட்டைப் பற்றிக் கேட்டீர். பாரத நாட்டில் இப்போது கலியுகம். ஆனால் இன்னும் இரண்டு மூன்று தலைமுறைகளில் கலியுகம் நீங்கிக் கிருதயுகம் பிறக்கப் போகிறது'' என்றும் கூறியுள்ளான். எனவே கிருதயுகம் பற்றி அவன் கொண்டிருந்த கருத்து, தீவிரத் தேசியவாத இயக்கத் தலைவர்களும் அன்றைய புரட்சிவாதிகளும் கொண்டிருந்த கருத்தில் இருந்து வேறுபட்டதாக, அதிலிருந்து மிகவும் மேம்பட்ட ஒன்றாகவே இருந்தது என்பது தெளிவு. அத்தகைய கிருதயுகம் தோன்றுவதற்குச் சில தலைமுறைகள் ஆகலாம் என்பதே அவனது நம்பிக்கையாக இருந்தது.

அவ்வாறாயின், பாரதி கிருதயுகம் பற்றிய கருத்தை எவ்வாறு உருவாக்கிக்கொண்டான்? இதனைப் புரிந்து கொள்வதற்கு நாம் ஆங்கில நாட்டுப் புரட்சிக் கவிஞன் ஷெல்லியிடம்தான் செல்ல வேண்டும்.

## ஷெல்லியின் பொற்காலம்

பாரதி ஷெல்லியிடம் எவ்வளவு ஈடுபாடுகொண்டிருந்தான் என்பதையும், அவன் ஆரம்பத்தில் எட்டயபுரத்தில் இருந்த காலத்தி

லேயே தன்னை ஷெல்லிதாசன் என்று கூறிக்கொண்டான் என்பதையும் முந்திய சொற்பொழிவின்போது குறிப்பிட்டோம். ஆங்கிலக் கவிஞன் ஷெல்லியை, ஆங்கில விமர்சகர்கள் பிரஞ்சுப் புரட்சியின் குழந்தை என்று குறிப்பிடுவார்கள். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற முப்பெரும் கோஷங்களோடு பிறந்த குடியரசுத் தத்துவத்தை நிலைநாட்டும் முயற்சியாகவே 1789ஆம் ஆண்டில் பிரஞ்சுப் புரட்சி வெடித்தது. இந்தப்புரட்சிக்குப்பின் சில ஆண்டுகளில் பிறந்தவன்தான் ஷெல்லி. இந்தப்புரட்சியின் கருத்துக்கள் இங்கிலாந்தில் முற்போக்கான சிந்தனையாளர்கள் பலரையும் கவர்ந்திருந்த ஒரு சமயத்தில்தான் ஷெல்லி அவர்களில் ஒருவனாக விளங்கியதோடுமட்டுமல்லாமல், இந்த முப்பெரும் கோஷங்களையே தனது லட்சியமாகக்கொண்ட புரட்சிக் கவிஞனாகவும் மாறினான்; அதன் காரணமாகவே அவன் பிரஞ்சுப் புரட்சியின் குழந்தை என்றும் அழைக்கப்பட்டான். ஷெல்லி தனது பதினெட்டாவது வயதிலேயே ராணி மாப் (Queen Mab) என்ற நெடுங்கவிதை ஒன்றைப் படைத்தான். உலக வாழ்க்கையையும் மனிதகுல விடுதலையையும் விமோசனத்தையும் பற்றிய ஷெல்லியின் தத்துவ தரிசனம் அவன் முதன்முதலில் படைத்த இந்த நெடுங் கவிதைப் படைப்பிலேயே இடம் பெற்றுவிட்டது எனலாம். ராணி மாப் கதை வடிவில் அமைந்த நெடுங்கவிதை, அந்தக் கதையில் வரும் ராணி மாப் சர்வமும் அறிந்த ஒரு தேவதை. அவள் ஒரு மந்திர ரதத்தில் ஏறி, தூங்கிக்கொண்டிருக்கும் ஒரு கன்னியிடம் வந்து அவளது ஆத்மாவை மட்டும் கூட்டிக்கொண்டு வான மண்டலத்தி லுள்ள அற்புதமானதோர் அரண்மனைக்குச் செல்கிறாள். அங்கிருந்து இருவரும் பூலோகத்தைக் காண்கின்றனர். அப்போது ராணி மாப் அந்த ஆத்மாவுக்கு உலகின் கடந்தகால, நிகழ்கால, வருங்கால நிகழ்ச்சிகளையெல்லாம் வருணித்துக் கூறுகிறாள்; உலகின் தீமைகளை இனம் காட்டுகிறாள்; வருங்காலத்தில் இத்தகைய தீமைகளெல்லாம் நீங்கி, புதியதொரு பொற்காலம் (Golden Age) மலரும் என்று கூறி, அந்தக் கன்னியின் ஆத்மாவை மீண்டும் பூலோகத்தில் தூங்கிக் கொண்டிருக்கும் அவளது உடலுக்கு அனுப்பிவைக்கிறாள். இதுதான் ராணி மாபில் கூறப்படும் கதை. இந்த நெடுங்கவிதைப் படைப்பின் கடைசி இரு படலங்களிலும் (படலம் 8, 9) ஏறத்தாழ நானூறு வரிகளில் ஷெல்லி தான் கனவு காணும் பொற்காலத்தை வருணித்துப் பாடியுள்ளான்.

அவன் காணும் பொற்கால உலகில் மன்னர்கள் இல்லை; அங்கு காலம் ஒன்றுதான் மன்னனாக இருக்கிறது. அந்த உலகில் அன்பின் உதய காலம் மெல்லமெல்ல விடிந்து, புது உலகம் மலர்கிறது. அங்கு நோயும் நொடியும் மனித உடம்பிலிருந்து நீங்கி மடிந்து விடுகின்றன. இளமையும் ஆரோக்கியமும் உடம்பில் குடி கொள்கின்றன. துணிவும் உயர்ந்த மனமும் உள்ளத்தில் குடியேறு கின்றன. அங்கு மனித ஆத்மாக்களின் பரஸ்பரமான பரிவுணர்ச்சி களைக் கட்டுப்படுத்த, கொடுங்கோன்மையான சட்டதிட்டங்கள் எதுவும் இல்லை. அங்கு ஆணும் பெண்ணும் சமத்துவமாகவும் சுதந்திரமாகவும் நடமாடுகிறார்கள். பஞ்சத்தின் முனகலும், வறுமைக் கண்ணீரும் அங்கில்லை. சிறைக்கூடங்களும் அங்கில்லை. ''இவ்வாறு அங்கு மனித ராசிகள் பரிபூரணத்துவம் எய்தின. தனது தாயின் அன்பின்கீழ் வளரும் குழந்தையைப்போல், உலகமானது எல்லா மேன்மையோடும் பலம் பெற்றது. ஆண்டுக்காண்டு மேன்மேலும் அழகோடும் மேன்மையோடும் வளர்ச்சி பெற்றது''.

> Thus human things were perfected, and earth
> Even as a child beneath its mother's love
> Was strengthened in all excellence and grew
> Fairer and nobler with each passing year

(பாடல் 9, வரிகள் 134–137)

என்று பாடுகிறான் ஷெல்லி.

ஷெல்லியின் ராணி மாபில் வருணிக்கப்பெறும் பொற்கால லட்சியம் பாரதியை மிகவும் கவர்ந்திருந்தது என்பதை நாம் பாரதியின் படைப்புக்களிலிருந்து தெரிந்துகொள்ளலாம். பாரதியின் வசனப் படைப்பான 'ஞானரதம்', ராணி மாபின் வடிவ அமைதியையே பின்பற்றியுள்ளது எனலாம். ராணி மாபில் முக்காலமும் உணர்ந்த மாப் என்ற தேவதை, கன்னியின் ஆவியை மந்திர ரதத்தில் ஏற்றிக் கூட்டிச் சென்று, முக்கால வரலாற்றையும் தன்மைகளையும் கூறுவதையும் போலவே, பாரதியும் 'ஞானரதம்' என்ற கற்பனைத் தேரில் ஏறி, கந்தர்வலோகம் சென்று, பர்வத குமாரி என்ற கந்தர்வ யுவதியின் துணையோடு, பல லோகங்களிலும் சஞ்சரித்துவிட்டு பூலோகம் திரும்புவதாகத் தனது நூலை அமைத்திருக்கிறான். ஷெல்லி தனது ராணி மாபில் செல்வம்தான், பணம்தான் மனித குலத்தின் மீது படிந்த சாபமாக விளங்குகிறது என்று கூறி,

உலகில் தனியுடைமையால் மனித வாழ்க்கை எவ்வாறு கறைப்பட்டுள்ளது என்பதை வருணிக்கிறான் :

Commerce has set the mark of selfishness
The signet of its enslaving power
Upon a shining ore, and called it gold
Before whose image bow the vulgar great,
The vainly rich. the miserable proud,
The mob of peasants, nobles, priests and kings
And with blind feelings reverence the power
That grinds them to the dust of misery,
But in the temple of their hireling hearts
Gold is a living god, and rules in scorn
All earthly things but virtue

(Queen Mab 5 : 53-63)

""வர்த்தகமானது சுயநலத்தின் முத்திரையை, எல்லாவற்றையும் அடிமைகொள்ளும் அதன் சக்தியின் ராஜமுத்திரையை, ஒரு பளிச்சிடும் கனிப் பொருளின் மீது பதித்துள்ளது; அதனைத் தங்கம் என்று அழைத்தது. அந்தத் தங்க வடிவத்தின் முன்னால், கொச்சைப் பட்ட பெரிய மனிதர்களும், வெற்றுடம்பரமான செல்வந்தர்களும், பரிதாபத்துக்குரிய கர்விகளும், விவசாயிகளின் பெருங்கூட்டமும், பிரபுக்களும், மத குருக்களும், மன்னர்களும் வணங்குகின்றனர். மேலும் தம்மையே துயரத்தின் புழுதியோடு புழுதியாய் அரைத்து நொறுக்கும் சக்திக்கு, குருட்டுத்தனமான உணர்ச்சிகளோடு மரியாதை செலுத்துகிறார்கள். ஆனால், அவர்களது கைக்கூலி இதயங்களின் ஆலயத்துக்குள்ளோ, தங்கமானது ஓர் உயிருள்ள கடவுளாக வீற்றிருக்கின்றது; தர்மத்தைத் தவிர, எல்லாப் பூமண்டல விஷயங்களின் மீதும், அது ஏளனத்தோடு ஆட்சி புரிகிறது'' என்று ஷெல்லி கூறுகிறான்.

இந்த வரிகளின் எதிரொலிபோல் பாரதி தன் 'ஞானரத'த்தில் மண்ணுலகம் என்ற அத்தியாயத்தில், ""ஐயோ! என்ன உலகமடா, இந்த மண்ணுலகம்! ஒழியாத ஏமாற்று, ஒழியாத வஞ்சனை, ஒழியாத கவலை, சாரமில்லை; சத்துக் கிடையாது. உள்ளூரப் பூச்சியரித்துக் கொண்டிருக்கும் வாழ்க்கை. ஒவ்வொருவனும் மற்றவன் மீது பழி

கூறுகிறான்... பிறரை நம்புவதற்கு இடமில்லை என்றெண்ணி ஏமாற்று கிறான். ஐயோ! மூடா! நீ ஏமாற்றுவதனால் முன்னைக் காட்டிலும் பரஸ்பர நம்பிக்கை அதிகரித்துவிடுமென்று நினைக்கிறாய்? மனித ஜாதிக்குத் தீராத நோய் ஒன்று பிடித்திருக்கிறது. மாறாத சாபம்; இறங்காத விஷம். அதன் பெயர் பணம். இப்பேய்க்கு வணங்கும் படி அவனைத் தூண்டிவிடுவது விருப்பம். அதாவது ருசி நீங்கிய விருப்பம்; அறிவற்ற விருப்பம்...'' என்று எழுதுகிறான்.

மேலும் ஷெல்லி தான் சுவீகரித்துக்கொண்ட சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற முப்பெரும் லட்சியங்களை முழங்கும் விதத்தில் பல பாடல்களையும் பாடியுள்ளான் என்பதை ஷெல்லியைக் கற்றவர்கள் நன்கறிவார்கள். உதாரணமாக, உழைக்கும் மக்களைச் சுரண்டி வாழும் கொடுமையைப் பற்றிப் பாட வந்த அவன், இங்கிலாந்து மக்களை நோக்கி இவ்வாறு பாடுகிறான்:

The seed ye sow, another reaps;
The wealth ye find, another keeps;
The robes ye weave, another wears;
The arms ye forge, another bears.

Sow seed - but let no tyrant reap;
Find wealth - let no imposter heap;
Weave robes- let not the idle wear;
Forge arms - in your defence to bear.

(Song to the Men of England. Stanzas 5, 6)

''நீங்கள் விதைக்கிறீர்கள்; இன்னொருவன் அறுக்கிறான். நீங்கள் செல்வத்தைக் கண்டெடுக்கிறீர்கள்; இன்னொருவன் அதனை வைத்துக்கொள்கிறான். நீங்கள் ஆடைகளை நெய்கிறீர்கள்; அதனை வேறொருவன் அணிகிறான். நீங்கள் ஆயுதங்களைச் செய்கிறீர்கள்; அதனை வேறொருவன் ஏந்துகிறான்.

''விதையை விதையுங்கள்—ஆனால் எந்தக் கொடுங்கோலனையும் அறுக்க விடாதீர்கள். செல்வத்தைத் தேடுங்கள்-ஆனால் எந்த ஏமாற்றுக்காரனையும் குவிக்க விடாதீர்கள். ஆடைகளை நெய்யுங்கள்-

ஆனால் சோம்பேறிகள் அவற்றை அணிய விடாதீர்கள். ஆயுதங்களைச் செய்யுங்கள்-ஆனால் அவற்றை உங்கள் தற்காப்புக்காகவே தாங்கி நில்லுங்கள்!''

ஷெல்லியின் இந்த வரிகள்தான்,

ஏற்பாரைப் பணிகின்ற காலமும் போச்சே—நம்மை
ஏய்ப்போருக் கேவல்செய்யும் காலமும் போச்சே!...

உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்—வீணில்
உண்டு களித்திருப்போரை நிந்தனை செய்வோம்!
விழலுக்கு நீர் பாய்ச்சி மாய மாட்டோம்! வெறும்
வீணருக்கு உழைத்துடலம் ஓய மாட்டோம்!

(சுதந்திரப் பள்ளு—பாடல் 1, 4)

என்று பாரதி தனது 'சுதந்திரப் பள்ளு'ப் பாடலில் பாடுவதற்கான உத்வேகத்தை வழங்கியிருக்க வேண்டும் என்பதை நாம் புரிந்து கொள்ளலாம்.

மேலும், ஷெல்லியைப் போலவே, பாரதியும் பிரஞ்சுப் புரட்சியின் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற முப்பெரும் கோஷங்களைத் தனது தாரக மந்திரமாகவும் ஏற்றுக்கொண்டான். 1906ஆம் ஆண்டின் முற்பாதியில், அதாவது அவன் தேசிய கவியாக மலர்ச்சி பெற்றிருந்த காலத்தில், அவன் ஆசிரியப் பொறுப்பு ஏற்றுக் கொண்ட 'இந்தியா' பத்திரிகையின் தலைப்பிலும் அவன் இந்த முப்பெரும் கோஷங்களையே அதன் லட்சியமாகப் பொறித்திருந்தான். மேலும், அவன் குரு கோவிந்தரைப்பற்றிப் பாடவந்த பாட்டிலும் கூட, குரு கோவிந்தரின் வாய்மொழியாக இதே லட்சியத்தை, அவன் உலக தர்மமாகப் பிரகடனம் செய்கிறான்:

நுமக்கினித் தருமம் நுவன்றிடக் கேண்மின்!
ஒன்றாம் கடவுள் உலகிடைத் தோன்றிய
மானிடரெல்லாம் சோதரர்; மானிடர்
சமத்துவம் உடையார்; சுதந்திரம் சார்ந்தவர்

(குரு கோவிந்தர்—வரிகள் 177-180)

என்று குரு கோவிந்தர் கூறுவதாகப் பாடுகிறான்.

இதேபோல் அதே கவிதையில் பிறிதோரிடத்தில் பாரதி குரு கோவிந்தரின் கூற்ருகவே,

அரசன் இல்லாது தெய்வமே அரசாய்
மானிடர் துணைவராய் மறமே பகையாய்
குடியரசு இயற்றும் கொள்கையார் சாதி

(வரிகள். 94—96)

என்றும் அவன் குடியரசு லட்சியத்தையே புதிய பாரதத்தின் லட்சிய மாகவும் வகுத்துக் கூறுகிருன்.

இவ்வாறு சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவை பற்றி, பாரதி பாடியுள்ள பாடல்களையும், அவனது பிற படைப்புக் களையும் நாம் ஊன்றிப் படித்தால், பாரதி கிருதயுகம் பற்றிய தனது கருத்தை, ஷெல்லியின் Golden Age- பொற்காலம் பற்றிய கருத்தில் இருந்தே உருவாக்கி, அதனை இந்திய நாட்டின் சூழ்நிலைக்கும் மரபு களுக்கும் ஏற்பச் செழுமைப்படுத்திக்கொண்டான் என்பதை நாம் உணர முடியும். சுருங்கக் கூறின், இருபதாம் நூற்ருண்டின் புரட்சிக் கவிஞகை விளங்கிய பாரதி, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றை உத்தரவாதம் செய்ய உதவும் ஓர் உலகையே, அதாவது சோஷியலிசம் என்று நாம் இன்று குறிப்பிடும் பொதுவுடைமை நிலவும் உலகையே, கிருத யுகத்தின் உதய காலம் எனக் கருதினன் என்பதையும், அதுவே அவனது லட்சியமாக விளங்கியது என்பதை யும் நாம் கண்டுகொள்ள முடியும். எனவேதான், தீவிரத் தேசிய இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் பலர், அரசியல் விடுதலை தள்ளிப் போய்விட்டதையும், இயக்கமே சீர்குலைந்து போய்விட்டதையும் கண்டு நம்பிக்கை வறட்சிக்கு உள்ளாகிவிட்ட நிலையிலும்கூட, பாரதிக்குத் தன் லட்சியத்தில் நம்பிக்கை வறட்சி ஏற்படவில்லை. உலகில் கலியுகம் மறைந்து தான் எதிர்பார்க்கும் கிருதயுகம் தோன்றத்தான் செய்யும் என்ற நம்பிக்கை அவனுக்கு இருந்தது. அந்த உறுதிபாட்டின் காரணமாகத்தான், அவன் தீவிரத் தேசியவாத இயக்கம் முடிவுகண்டுவிட்ட நிலையிலும், பாண்டிச்சேரியில் இருந்த காலத்தில் இயற்றிய 'விநாயகர் நான்மணி மாலை'யில்,

சூழ்க! துயர்கள் தொலைந்திடுக!
தொலையா இன்பம் விளைந்திடுக!
வீழ்க கலியின் வலியெல்லாம்
கிருதயுகம்தான் மேவுகவே! (பாடல் 37)

என்று பாடினான். மேலும் அதே 'விநாயகர் நான்மணி மாலை'யில்

பொய்க்கும் கலியை நான் கொன்று
பூலோகத்தார் கண் முன்னே
மெய்க்கும் கிருத யுகத்தினையே
கொணர்வேன். தெய்வ விதி இஃதே

(பாடல் 39)

என்று பாடி, உலகில் அத்தகைய சமுதாயம் தோன்றுவது தவிர்க்க முடியாத நியதி எனக் கூறினான். மேலும் அடுத்த பாடலிலேயே'

...பாரிடை மக்களே!
கிருத யுகத்தினைக் கேடின்றி நிறுத்த
விரதம் நான் கொண்டனன்

(பாடல் 40)

என்று பாடி, பாரத மக்களின் பிரதிநிதியாக நின்று, மனிதகுலத்தின் குரலாக ஒலித்து, அவன் சபதமும் எடுத்துக்கொள்கிறான்.

## பாரதியின் சமத்துவப் பற்று

1917ஆம் ஆண்டில் ரஷ்யாவில் பொதுவுடைமைப் புரட்சி வெற்றி பெற்றவுடன் அதனைப் பாரதி வாழ்த்தி வரவேற்றுப் பாடியதோடுமட்டுமல்லாமல், அதற்குப்பின் தான் எழுதிய பல கட்டுரைகளிலும் அவன் ரஷ்யாவில் நிகழ்ந்து வந்த மாற்றங்களையும் சீர்திருத்தங்களையும் பற்றிப் பலவாறு குறிப்பிட்டு எழுதியுள்ளான் என்பதை நாமறிவோம்.

உதாரணமாக, 1917 நவம்பர் 28 அன்று அவன் 'செல்வம்' என்ற தலைப்பில் 'சுதேசமித்திரனில்' எழுதிய கட்டுரையொன்றில், (பாரதியார் கட்டுரைகள்—சமூகம்) ''ருஷ்யாவில் சோஷலிஸ்ட் கட்சியார் ஏறக்குறையத் தம்முடைய நோக்கத்தை நிறைவேற்றிவிடக் கூடுமென்று தோன்றுகிறது... சொத்து விபாகம் செய்திருப்பதில் இப்போது செல்வரென்றும் பலர் ஏழைகள் என்றும் ஏற்பட்டிருப்பதை மாற்றி, உலகத்திலுள்ள சொத்தை, அதாவது பூமியை உலகத்து ஜனங்களுக்குச் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும் என்பதும்,

தொழில் விஷயத்தில் இப்போது போட்டிமுறை இருப்பதைமாற்றிக் கூடியுழைக்கும் முறையைக் கொண்டுவரவேண்டும் என்பதும் மேற்படி கட்சியாரின் முக்கிய கோட்பாடு'' என்று எழுதி, சோஷலிசத்துக்கு ஓரளவுக்கு விளக்கமும் கூறியுள்ளான். பின்னர் அதே கட்டுரையில் அவன் பிறதோரிடத்தில், இந்தக் கோட்பாட்டைப் பற்றி எழுதும்போது, ''இது நாளடைவில் ஐரோப்பாவில் மாத்திரமன்றி உலக முழுமையிலும் பரிபூரணமாக வெற்றி பெறும் என்பதில் சந்தேகமில்லை. இந்த சித்தாந்தம் பரிபூரண ஜயமடைந்து, மனிதருக்குள்ளே சகஜ தர்மமாக ஏற்பட்ட பிறகுதான், மானிடர் உண்மையான நாகரிகம் உடையோராவார்'' என்றும் எழுதியுள்ளான். இதன்மூலம் பாரதி அந்தக் கோட்பாட்டைத் தானும் ஆதரித்திருக்கிறான் என்பது தெளிவு. ஆயினும், பாரதி சோஷலிசக் கொள்கையைப் பற்றி, ரஷ்யாவில் பொதுவுடைமைப் புரட்சி வெற்றி பெற்ற பின்னர்தான் தெரிந்துகொண்டான் என்பதில்லை. சமத்துவக் கொள்கையில் ஈடுபாடு கொண்டிருந்த பாரதி, ஆரம்பத்திலிருந்தே அதில் அக்கறை காட்டி வந்திருக்கிறான் என்றே நமக்குப் புலனாகிறது.

இதற்கு உதாரணமாக நாம் ஒன்றைச் சுட்டிக் காட்ட முடியும். பிரபல சோவியத் ஆராய்ச்சியாளரான இ. கொமரோவ் ''லெனினும் இந்திய தேச விடுதலை இயக்கமும்'' என்ற நூலில் ''இந்தியாவில் பிரிட்டிஷ் காலனியாட்சிக்கு எதிரான போராட்டத்தைப் பொறுத்தவரை, பிரிட்டிஷ் சமுக-ஜனநாயகவாதியான ஹென்றி மேயர்ஸ் ஹைண்டுமன் ஆற்றிய பங்கைப்பற்றி லெனின் மிகவுயர்வாகக் கருதியிருந்தார். இவரது காலனியாதிக்க-எதிர்ப்புத் தன்மை வாய்ந்த நடவடிக்கைகளைப் பல ஆண்டுகளுக்கு முன் மார்க்ஸே ஆதரித்தார். ஹைண்டுமன் இந்தியாவில் நிலவிய நிலைமை குறித்து, தொடர்ச்சியாகப் பல குற்றச்சாட்டுக்களைக் கூறும் கட்டுரைகளை எழுதினர்; இவர் தாதாபாய் நவ்ரோஜி, சியாம்ஜி கிருஷ்ணவர்மா மற்றும் பிற இந்திய தேசபக்தர்களோடு ஒத்துழைத்து வந்தார். இவர் பிரிட்டிஷ் சமுக—ஜனநாயகவாதிகளின் வாரப் பத்திரிகையான **ஜஸ்டிஸ்** என்ற இதழையும் வெளியிட்டு வந்தார்; இது 1908ல் இந்தியாவில் தடை செய்யப்பட்டது'' என்று எழுதியுள்ளார். (Lenin and the National Liberation Movement in India–E. Komarov. பக். 56) கோமரோவ் சமுக-ஜனநாயகவாதிகள் எனக் குறிப்பிடுபவர்கள், இங்கிலாந்திலிருந்த சோஷலிஸ்டுக் கட்சியாளர்களேயாவர். சமுக-ஜனநாயகவாதிகளும் சோஷலிசம் பற்றிப் பேசியவர்களாகவே இருந்தபோதி

லும், அவர்கள் மார்க்சும் லெனினும் கூறிய புரட்சிக் கருத்துக்களை ஏற்றுக்கொள்ளாத சீர்திருத்தவாதிகளாகவே இருந்தனர். எனினும் இங்கிலாந்தில் அந்தக் காலத்தில் இருந்த இத்தகைய சோஷலிஸ்டுக் கட்சியினர், இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி நடத்தி வந்த கொள்ளை யையும், அநீதியையும் கண்டித்தே வந்தனர். ஹைண்டுமன் இவர் களில் முக்கியமானவர் ஆவார். ஹைண்டுமன் வெளியிட்டு வந்த **ஜஸ்டிஸ்** என்ற பத்திரிகையையும் பாரதி முறையாகப் படித்து வந் திருக்கிறான் என்று தெரியவருகிறது. பாரதி சென்னையிலிருந்து வெளியிட்டு வந்த 'இந்தியா' பத்திரிகையின் 1906 செப்டம்பர் 11ஆம் தேதி இதழில்,

''எச்.எம். ஹைண்டுமன் என்பவர் இந்தியாவிற்கு இங்கிலாந்தி லேயுள்ள முக்கிய நண்பர்களிலே ஒருவர். இவர் வேறு சிலரைப் போல் நம்மிடம் அரை மனதுடன் அனுதாபம் கொள்வாரில்லை. நம்மவர்களுக்கு முற்றிலும் சுயாட்சி கிடைக்கவேண்டுமென்பதையே பெருநோக்காகக்கொண்டவர். மார்லியின் 'வரவு செலவுக்கணக்கு'ப் பிரசங்கத்தைப்பற்றி **ஜஸ்டிஸ்** ('நீதி') என்றலண்டன் பத்திரிகையிலே ஒரு விஷயம் எழுதியிருக்கின்றார். இந்தியா சிறிது சிறிதாகச் செழிப் படைந்து வருகிறதென்று மிஸ்டர் மார்லி கூறியிருப்பதைப் பற்றி இவர் கண்டனை புரிந்து பேசுகிறார்'' என்று எழுதியுள்ளான். (பாரதி தரிசனம் முதற்பாகம். பக். 92).

இதன்பின் அவன் இரண்டு மாதங்கள் கழித்து 1906 நவம்பர் 10ஆம் தேதி எழுதிய ''பத்திராதிபரின் குறிப்புக்கள்'' என்ற தலையங்கப்பகுதியில், ''இந்தியாவும் இங்கிலாந்திலுள்ள சோஷலிஸ்ட் கட்சியாரும்'' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறான். அதில் அவன்,

''இங்கிலாந்திலேயுள்ள சில கட்சியாரின் தயவினால் இந்தியா விற்கு நன்மை ஊற்றுப்போல் பெருகிவிடப்போகிறதென்ற கோட் பாடு நம்முடையதன்று என்ற போதிலும் இங்கிலாந்திலுள்ள அநேக கட்சிகளில் எந்தக் கட்சி நம்மவர்களிடம் உண்மையான அனுதாபம் உடையதென்ற விஷயம் நாம் தெரிந்துகொள்வது அநாவசியமாக மாட் டாது. நமக்குத் தெரிந்தமட்டிலும் தொழிற்கட்சியும் முக்கியமாக அதில் ஒருபகுதியாகிய சோஷலிஸ்ட் கட்சியும் இந்தியா விஷயத்தில் உண்மை யான அனுகூல சித்தம் கொண்டனவாகும். லிபரல் கட்சியாரை நம்பி நாம் பல காரியங்களைச் சாதித்துவிடலாமென்று மேட்டாவைப்

போன்ற சில பெரியவர்கள் நம்பி வந்தார்கள். அந்த நம்பிக்கை யெல்லாம் காசு பெறமாட்டாதென்பது இப்போது வெட்ட வெளிச் சமாகிவிட்டது. உண்மையை ஒளித்து என்ன பிரயோஜனம் இருக்கிறது? இங்கிலாந்தில் ஆட்சிக்கு வரக்கூடிய எந்தக் கட்சியும் நமக்குப் பிரதிகூலமாய் இருக்குமேயல்லாமல் அனுகூலமாயிருக்க மாட்டாது'' என்று எழுதிவிட்டு,

''ஆனால் சோஷலிஸ்ட் கட்சியோ சீக்கிரம் அதிகாரத்துக்கு வரக் கூடியதன்று. சாதாரணமாக, பொதுஜனங்கள் கொண்டிருக்கும் கொள்கைகளுக்கு இக்கட்சி நேர்மாறான கொள்கைகளையுடையது. சோஷலிஸ்டுக் கட்சியாரின் கொள்கைகளிலே சிலவற்றைக் கீழே தருகிறோம்:

''1) ராஜா இருக்கக்கூடாது

2) உலகத்தில் தேசத்திற்குத் தேசம் யுத்தங்கள் நடப்பதை யெல்லாம் நிறுத்திவிடவேண்டும்

3) தேச நிலம், தேசஜனங்களுக்கெல்லாம் பொதுவாய் இருக்க வேண்டும். நிலத்துக்குச் சொந்தக்காரர் சிலரென்றும், நிலமில்லாதவர் சிலரென்றும் இப்போதிருக்கும் வேறு பாடுகள் பிழையானவை முதலியன.

''இங்ஙனம் எளிதில் நடக்கக்கூடாத கோட்பாடுகளை உடைய கட்சியார் ராஜ்யாதிகாரத்துக்கு வருவது சுலபமில்லையல்லவா?'' என்று எழுதுகிறான். (பாரதி தரிசனம்—முதற்பாகம் பக். 115-116)

இந்தக் கட்டுரையில் சோஷலிஸ்டுக் கட்சியார் இந்தியாவின் மீது காட்டி வந்த அனுதாபத்தைப் பாராட்டி எழுதுவதுதான் பாரதியின் நோக்கம். ஆயினும் இதனை முகாந்தரமாகக்கொண்டு அவன் சோஷலிசக் கொள்கைபற்றியும் சில வரிகள் எழுதி அதனைத் தனது வாசகர்களுக்குத் தெரிவிக்கவேண்டும் என்று கருதியிருக்கிறான் என்பதும் தெளிவாகிறது. எனவே அவன் ஆரம்பத்திலிருந்தே சோஷலிசம் என்ற சமத்துவக் கொள்கையில் ஈடுபாடு கொண்டே இருந்திருக்கிறான்.

இதன்பின் அவன் பாண்டிச்சேரி சென்று அங்கிருந்து தனது 'இந்தியா' பத்திரிகையை நடத்திவந்த காலத்திலும், அவன்

சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற தனது முப்பெரும் லட்சியங்களை மறந்துவிடவில்லை. 1909ஆம் ஆண்டில் வெளிவந்த 'இந்தியா' பத்திரிகை இதழ்களில், அவன் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற மூன்று தனித் தனித் தலைப்புக்களில் அவை பற்றித் தனிக் கட்டுரைகளும் எழுதினன். 1909 அக்டோபர் 11ஆம் தேதியன்று வெளிவந்த இதழில் 'சமத்துவம்' என்ற தலைப்பில் அவன் எழுதியிருந்த கட்டுரையில்,

''சமத்துவம் எப்பொழுதும் மனித இயற்கையைச் சேர்ந்ததே தவிர, ஜன சமூகத்துக்குச் செல்வம் முதலியவற்ருலுள்ள உயர்வு—தாழ்வு என்னும் வித்தியாசத்தைச் சேர்ந்ததல்ல. அந்த வித்தியாசமும் சமமாய் நிலவப்பட்டு, அதிலும் சமத்துவம் பாராட்டி வந்தால் மெத்த மேலானதே...... உலகில் எந்தவொரு நாட்டில் சமத்துவம் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறதோ அந்த நாடுதான் சுவர்க்கம். அந்த நாட்டினர்தான் உண்மையில் சந்தோஷமாய் மனமகிழ்ச்சியுடன் வாழ்வார்கள்'' என்று எழுதினன்.

இதன் பின் பாரதி 19.5ஆம் ஆண்டு மே மாதம் 21ஆம் தேதி எழுதிய 'வரவிருக்கும் யுகம் — The Coming Age என்ற ஆங்கிலக் கட்டுரையொன்றில் இவ்வாறு எழுதியுள்ளான்:

"What the Westerners call socialism is not clearly under stood here. But still for the West as well as the East, there is only one decent way of living, viz., to make the earth common property and live on it as fellow-workers and co-partners. We have a tradition that in the Krita-yuga, men lived like that in this country. That may or may not be true. But human will shall yet succeed in bringing about that Krita-Yuga in all countries and in not a far-off future. The higher Will of man has been baulk till now because for some reason or other it could not direct the main part of its energy towards rectifying the root of all our social ills. Justice must be made to triumph in the very formation of human society. And then she will naturally triumph in all human affairs and relations. So long as the principle of competition holds sway over the structure of human associations, so long as land and water do not belong commonly to all human

beings, men are bound to behave worse than brutes in their 'economics relations at any rate... When the majority of men realise this fact fully, we shall have taken the next step in our upward evolution".

(Agni and other poems and translations and Essays and other prose fragments. Ed. A. Natarajan. p. 97-98)

இதன் தமிழாக்கம் வருமாறு:

'சோஷலிசம் என்று மேலை நாட்டினர் குறிப்பிடுவது என்னவென்று இங்கு தெளிவாகப் புரிந்துகொள்ளப்படவில்லை என்றாலும், மேலை நாட்டுக்கும் சரி, கீழை நாட்டுக்கும் சரி, கௌரவமான வாழ்க்கை நடத்துவதற்கு ஒரே ஒரு மார்க்கம்தான் உள்ளது. உலகைப் பொது வுடைமையாக்கி, அதில் சக-தொழிலாளிகளாகவும் கூட்டுப் பங்காளி களாகவும் வாழ்வதே அந்த மார்க்கமாகும். கிருத யுகத்தில் மனிதர் கள் இம்மாதிரியே இந்த நாட்டில் வாழ்ந்தனர் என்று கூறும் மரபு நமக்குண்டு. அது உண்மையாகவும் இருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம். ஆயினும் எல்லா நாடுகளிலும், அதுவும் விரைவிலேயே கிருத யுகத்தைக் கொண்டு வருவதில் மானுட வைராக்கியம் இனியும் வெற்றி பெறவே செய்யும். மனிதனின் மிகவுயர்ந்த வைராக்கியம் இதுவரையில் ஏதோ காரணத்தினால் முடக்கப்பட்டிருந்தது; அது தனது சக்தியின் தலையாய அம்சத்தை, நமது சமுதாயப் புன்மைகள் அனைத்தின் வேரையும் களையும் பணியில் செலுத்த முடியாமல் இருந்தது. மனித சமுதாயத்தின் உருவாக்கத்திலேயே நீதியை வெற்றிபெறச் செய்தாக வேண்டும். பின் நீதி எல்லா மானிட விவ காரங்களிலும் உறவுகளிலும் இயல்பாகவே வெற்றி பெற்றுவிடும். மனிதக் கூட்டுறவுகளின் கட்டுக்கோப்பில், போட்டிக் கோட்பாடு கொடிகட்டிப் பறக்கின்ற வரையிலும், நிலமும் நீரும் மனிதர்கள் எல்லோருக்கும் பொதுவான சொத்தாக இல்லாத வரையிலும், எந்த விதத்திலும் மனிதர்கள் தமது 'பொருளாதார' உறவுகளில், மிரு கங்களைவிடவும் மோசமாகவே நடந்துகொள்வர்... இந்த உண்மை யைப் பெரும்பான்மையான மனிதர்கள் பூரணமாக உணரும்போது, நாம் நமது ஏறுமுகமான பரிணாமத்தில் அடுத்த அடியை எடுத்து வைத்துவிடுவோம்.''

பாரதியின் இந்த ஆங்கிலக் கட்டுரையிலிருந்து அவன் தனிச் சொத்துடைமையின் ஆதிக்கம் மறைந்து பொதுவுடைமை மலர்

வதைத்தான் சோஷலிசம் என்றும் சமத்துவம் என்றும், அதுவே மனித குலத்தின் பரிணாமத்தில் அடுத்த கட்டம் என்றும், அதாவது கிருத யுகத்தின் உதயமாகும் என்றும் புரிந்துகொண்டிருந்தான் என்பதை நாம் தெள்ளத்தெளிவாகத் தெரிந்துகொள்ளலாம். இவ்வாறு படிப்படியாக, 'சமத்துவம்' என்றால் என்ன என்பதைப் புரிந்துகொண்டு வந்த பாரதி, ரஷ்யாவில் நிகழ்ந்துவந்த புரட்சிகளையும் கூர்ந்து கவனித்து வந்திருக்கிறான் என்பதும் நமக்குப் புலனாகிறது.

## பாரதியும் ரஷ்யப் புரட்சியும்

ரஷ்ய நாட்டில் இந்த நூற்றாண்டில் பதின்மூன்று ஆண்டுகளுக்குள் மூன்று புரட்சிகள் நடந்தன. முதலாவது புரட்சி 1905ஆம் ஆண்டில் வெடித்த புரட்சி. இந்தப் புரட்சியே இந்திய நாட்டில் தோன்றிய தீவிர தேசியவாத இயக்கத்துக்கும், புரட்சிச் சங்கங்களுக்கும் உத்வேகமூட்டும் சக்தியாக விளங்கியது என்று முதல் சொற்பொழிவின்போது குறிப்பிட்டேன். 1905 ஜனுவரி 9ஆம் நாளன்று தமது குறைகளை எடுத்துக்கூறும் மனுவை ஜார் மன்னனிடம் கொடுப்பதற்காக (இன்றைய லெனின்கிராடான) பீட்டர்ஸ்பர்க் நகரிலிருந்த மாரிக்கால அரண்மனையின் முன்னால் அமைதி பூர்வமாகத் திரண்டிருந்த லட்சத்துக்கும் மேற்பட்ட நிராயுதபாணிகளான ரஷ்ய உழைக்கும் மக்களை, ஜார் மன்னனின் ராணுவம் துப்பாக்கிப் பிரயோகம் செய்து ஆயிரம் பேருக்குமேல் கொன்று தள்ளியது. இந்த நிகழ்ச்சிதான் 1905–1907 ஆம் ஆண்டுகளில் நடந்த முதல் ரஷ்யப் புரட்சியைத் தொடங்கி வைத்தது. இந்தப் புரட்சியிலும் லெனின் தலைமையிலிருந்த போல்ஷிவிக் கட்சி பங்கெடுத்தது. ஆனால் இந்தப் புரட்சி தோற்கடிக்கப்பட்டது. ''பின்னால் வரவிருந்த வெற்றிகரமான புரட்சிக்கு ஒத்திகை'' என்று லெனின் இந்தப் புரட்சியைப் பற்றிப் பின்னர் எழுதினார்.

இதன்பின் 1917ஆம் ஆண்டின் முற்பகுதியில் பிப்ரவரி மாதத்தில் ஒரு புரட்சி நிகழ்ந்தது. இதற்கும் லெனினது போல்ஷிவிக் கட்சியே தலைமை தாங்கியது. இந்தப் புரட்சி வெற்றி பெற்றது. எனினும் இந்தப் புரட்சியின்போது எழுப்பிய கோஷங்களை, புரட்சிக்குப் பின்னர் அரசாங்கத்தை ஏற்க நேர்ந்த கெரென்ஸ்கியின் கோஷ்டி நிறைவேற்ற மறுத்தது. உலக யுத்தத்திலிருந்து ரஷ்யா விலகிக் கொள்வது, உழுபவனுக்கே நிலம் சொந்தமாவது, தொழிற்

சாலைகளைத் தேச உடைமையாக்குவது, தேசிய இனங்களுக்குச் சுய நிர்ணய உரிமை வழங்குவது; இவற்றை நிறைவேற்ற ஜாராட்சியை அறவே ஒழித்து ஓர் அரசியல் நிர்ணய சபையைத் தோற்றுவிப்பது முதலியனவே அந்தக் கோஷங்கள்; கோரிக்கைகள். ஆனால் கெரென்ஸ்கியின் அரசாங்கம் இவற்றை நிறைவேற்ற முன்வரவில்லை. அவற்றையே அது நிராகரித்தது. யுத்தத்திலிருந்து விலகிக் கொள்ளவோ, அரசியல் நிர்ணய சபையைத் தேர்ந்தெடுக்கவோ அது முனையவில்லை. உண்மையில் கெரென்ஸ்கியின் அரசாங்கம் ஜார் ஆட்சியை மீண்டும் கொண்டுவருவதற்கான பாதையிலேயே சென்றது. முடி துறந்த ஜாரும்கூட, 'ருஷ்யா அழிந்துவிடாமல் காப்பாற்றக் கூடியவர் கெரென்ஸ்கி ஒருவர்தான்' என்று தனது டைரியில் எழுதி வைக்கும் அளவுக்கு, கெரென்ஸ்கியின் ராஜவிசுவாசம் இருந்தது.

இந்தச் சூழ்நிலையில்தான் புரட்சியின் கோஷங்களை நிறைவேற்றாத கெரென்ஸ்கியின் அரசாங்கத்தை எதிர்த்து மக்கள் கலகம் செய்தனர். 1917ஆம் ஆண்டு ஜூலை மாதம் நடந்த இந்தக் கலகத்தில் பங்கெடுத்த மக்களை, கெரென்ஸ்கியின் அரசாங்கம் ரத்த வெள்ளத்தில் மூழ்கடித்தது, ராணுவச் சட்டத்தைப் பிறப்பித்தது. புரட்சித் தலைவனான லெனினை, ஜெர்மானிய ஒற்றன் எனக்கூறி, அவரைக் கைது செய்ய உத்தரவிட்டது. இந்த நிலைமையில்தான் கெரென்ஸ்கியின் அரசாங்கத்தைக் கவிழ்த்து, புதிய தொழிலாளி வர்க்க அரசாங்கத்தைக் கொண்டுவருவதற்காக, அக்டோபர் புரட்சி எனக் கூறப்படும் சோஷலிசப் புரட்சி லெனின் தலைமையில் நடந்தது; வெற்றியும் பெற்றது. இதுதான் ரஷ்யப் புரட்சிகளின் வரலாறாகும்.

1905ஆம் ஆண்டின் முதலாவது ரஷ்யப் புரட்சி நடைபெற்று வந்த காலத்தில், பாரதிதான் நடத்திவந்த 'இந்தியா' பத்திரிகையில் 1906ஆம் ஆண்டின் ஜூன் மாதத்திலிருந்து செப்டம்பர் மாதம் வரை அதுபற்றி ஆறு செய்திக் கட்டுரைகளை எழுதினான். அவற்றில் ஜூலை மாதம் 28ஆம் தேதி எழுதிய கட்டுரையில், ''ருஷ்ய ஜனங்களாகிய ஆடுகள் மீது அரசேற்றும் கடுவாய் அரசனும் அவனது ஓநாய் மந்திரிகளும் நெடுங்காலமாய்த் தரித்திருக்க மாட்டார்கள். இவர்களின் இறுதிக்காலம் வெகு சமீபமாக நெருங்கி விட்டதென்பதற்குத் தெளிவான பல சின்னங்கள் புலப்படுகின்றன. நீதி ஸ்வரூபியாகிய சர்வேசனது உலகத்திலே அநீதியும், ருஷ்ய ஓநாய்த் தன்மைகளும் நிலைக்க மாட்டா'' என்று எழுதினான். (பாரதி

தரிசனம். முதற் பாகம். பக். 238). இதன்பின், செப்டம்பர் முதல் தேதியன்று ''ருஷ்யாவிலே ராஜாங்கப் புரட்சி'' என்ற தலைப்பில் எழுதிய கட்டுரையில், ''ருஷ்ய சக்கரவர்த்தியின் சிங்காதனம் இது வரை எந்தக் காலத்திலும் ஆடாதவாறு அத்தனை பலமாக இருக்க, இப்போது ஆடத் தொடங்கிவிட்டது .. சுயாதீனத்தின் பொருட்டும், கொடுங்கோன்மை நாசத்தின் பொருட்டும் நமது ருஷ்யத் தோழர்கள் செய்துவரும் உத்தமான முயற்சிகள் மீது ஈசன் பேரருள் செலுத்து வாராக!'' என்று எழுதி, இந்தப் புரட்சியில் 'நமது ருஷ்யத் தோழர்கள்' வெற்றி பெற வேண்டும் என்று பாரதி அவர்களுக்கு வாழ்த்தும் கூறினான். (மேற்கூறிய நூல். பக். 234).

ஆனால் 1905ல் தொடங்கிய இந்தப் புரட்சி 1907ஆம் ஆண்டில் தோற்றுப் போய் விட்டது.

இதன் பின் 1917ஆம் ஆண்டில் பிப்ரவரியில் அடுத்த புரட்சி நடந்து அது வெற்றி பெற்று. கெரென்ஸ்கி அரசாங்கம் ஏற்பட்டது. உண்மையில் இந்தப் புரட்சி ஒரு முதலாளித்துவ ஜனநாயகப் புரட்சி யாகவே முடிந்தது. அந்த அளவுக்கு அதுவும் ஒரு வெற்றிதான். எனினும் அந்தப் புரட்சி தொழிலாளிகள் புரட்சிக்குமுன் வைத்த கோஷங்களை நிறைவேற்றத் தவறிவிட்டது. இந்தப் புரட்சி நடந்து முடிந்த பின், அடுத்த மாத இறுதியில், 1917 மார்ச் 28ஆம் தேதி யன்று, 'சுதேசமித்திரன்' பத்திரிகையில் ''பொழுதுபோக்கு'' என்ற தலைப்பில் பாரதி ஓர் உரையாடலை எழுதினான். அதில் சந்தோஷ ராயர் என்ற நண்பரொருவர் பாரதியிடம் வந்து ரஷ்யாவில் நடக்கும் சம்பவங்கள் பற்றிய செய்திகளைக் குறித்துப் பேசிவிட்டு, ''அடுத்த மாதம் வால் நட்சத்திரம் எரி நட்சத்திரத்தின் வாலில் கவ்விக் கொண்டு, பூமியில் மோதிப் பூமியைத் தூள் தூளாக நொறுக்கப் போகிறது என்று ஜோதிடர்கள் சொல்கிறார்களே, வாஸ்தவமா?'' என்று கேட்கிறார். ரஷ்யாவில் நிகழ்ந்து வந்த மாற்றங்களால் உலகமே அழிந்துபடப் போகிறது என்று மேலைநாட்டுச் செய்தி நிறுவனங்கள் கதை கட்டி விட்டுக் கொண்டிருந்த காலம் அது. இந்தக் கேள்விக்குக் 'காளிதாஸன்' என்ற புனைபெயரில் மறைந்து நிற்கும் பாரதி இவ்வாறு பதில் கூறுகிறான்:

''இந்தப் பூமியில் இன்னும் நாமே நெடுநாளிலிருந்து பலவித நியாயங்கள் நடந்து நிறைவேறுவதைப் பார்க்கப்போகிறோம். பூமியில்

நல்ல யுகம் தோன்றப் போகிறது. மனித ஜாதி முழுமைக்கும் விடுதலை உண்டாகப் போகிறது. நீர் சொல்லிய ருஷ்ய ராஜ்யப் புரட்சியானது இனி வரப்போகிற நற்காலத்தின் முன்னடையாளங்களில் ஒன்று. பூமி தூளாகாது. மனிதர் ஒவ்வொருவர் செய்யும் அநீதி தூளாகும்'' (பாரதி தமிழ் – பெ. தூரன் தொகுப்பு. பக். 250).

இதன்மூலம், ரஷ்ய நாட்டு உழைப்பாளி மக்களைப்போலவே, அங்கு ஆட்சிக்கு வந்த கெரென்ஸ்கியின் அரசாங்கம் அந்த மக்கள் எழுப்பிய கோரிக்கைகளை நிறைவேற்றும் என்று பாரதியும் எதிர்பார்த்திருக்கிறான், எனவேதான் அந்தப் புரட்சியை ஒரு புதிய யுகத்தின் வரவை உணர்த்தும் முன்னடையாளங்களில் ஒன்றாகக்கருதியிருக்கிறான் ஆனால் அந்த ஆட்சி ரஷ்ய நாட்டுத்தொழிலாளர்களின் நம்பிக்கைகளைப் பொய்ப்பித்ததுபோல், பாரதியின் எதிர்பார்ப்பையும் பொய்க்கச் செய்துவிட்டது என்று தெரிந்துகொள்கிறோம். இதனைப் பின்னர் பாரதி கெரென்ஸ்கியைப்பற்றி எழுதிய கட்டுரை நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

ரஷ்யாவில் சோஷலிசப் புரட்சி வெற்றி பெற்ற பின் மேற்கொள்ளப்பட்ட சமூகச் சீர்திருத்தங்களில் ஒன்றான ஆண் பெண் சமத்துவம் குறித்து ''நவீன ருஷ்யாவில் விவாக விதிகள்'' என்ற தலைப்பில் தான் எழுதிய கட்டுரையின் தொடக்கத்திலேயே, ருஷ்யாவில் ஜார் சக்கரவர்த்தியின் ஆட்சி பெரும்பாலும் சமத்துவக் கட்சியார், அதாவது போல்ஷிவிஸ்ட் கட்சியாரின் பலத்தாலே அழிக்கப்பட்டது, எனினும், ஜார் வீழ்ச்சியடைந்த மாத்திரத்திலே அதிகாரம் போல்ஷிவிஸ்டுகளின் கைக்கு வந்துவிடவில்லை. அப்பால் சிறிது காலம் முதலாளித்துவக் கூட்டத்தார் கெரென்ஸ்கி என்பவரைத் தலைவராக நிறுத்தி, ஒரு விதமாகக் குடியரசு நடத்தத் தொடங்கினார்கள். ஆனால் கெரென்ஸ்கியின் ஆட்சி நீடித்து நடக்கவில்லை. இங்கிலாந்து, பிரான்ஸ் முதலிய நேச ராஜ்யங்களிடமிருந்து பல வகைகளில் உதவி பெற்ற போதிலும், புதிய கிளர்ச்சிகளின் வெள்ளத்திடையே கெரென்ஸ்கியால் தலைதூக்கி நிற்க முடியவில்லை. சில மாதங்களுக்குள்ளாகவே கெரென்ஸ்கி தன்னுயிரைத் தப்பிவித்துக் கொள்ளும் பொருட்டாக, ருஷ்யாவினின்றும் ஓடிப்போய், நேச வல்லரசு நாடுகளில் தஞ்சம் புக நேர்ந்தது'' என்று பாரதி எழுதியுள்ளான் (கட்டுரைகள் – மாதர்).

இதன் பின்னர் 1920 அக்டோபர் 30ஆம் தேதியன்று 'சுதேச மித்திரன்' பத்திரிகையில் ''வெனிஜிலாஸின் கதி'' என்ற தலைப்பில் எழுதிய அரசியல் குறிப்பிலும், ''இந்த வெனிஜிலாஸ் மந்திரியைப் போலவே, ருஷ்யாவை நேசக் கட்சிக்கு வாலாக்கி விட முயற்சி செய்த கெரென்ஸ்கி என்ற ருஷ்ய மந்திரியை 'மித்திரன்' நேயர்கள் மறந்திருக்க மாட்டார்கள் என்ற நம்புகிறேன். ஒருகாலத்தில் கெரென்ஸ்கியை ருஷ்ய தேசத்து நெப்போலியன் என்று சில ஆங்கிலேயப் பத்திராதிபர் முதலியோர் சொல்லி வந்தனர். இன்று அந்தக் கெரென்ஸ்கியின் பெயரையே உலகத்தார் மறந்து விடக் கூடிய நிலைமை வந்து விட்டது'' என்று எழுதினான் (பாரதி தமிழ்-தூரன். பக். 374)

கெரென்ஸ்கியைப் பற்றிய பாரதியின் இந்தக் குறிப்புக்கள் பாரதி ரஷ்யாவில் நிகழ்ந்து வந்த நிகழ்ச்சிகளை எவ்வளவு உன்னிப்பாகக் கூர்ந்து கவனித்து வந்திருக்கிறான் என்பதையே நமக்குப் புலப்படுத்துகின்றன. 1915ஆம் ஆண்டில் அவன் 'வரவிருக்கும் யுகம்' என்று எழுதிய ஆங்கிலக் கட்டுரையில் சோஷலிசம் ஏற்படுவதையே கிருத யுகத்தின் உதயமாகக் கருதினான் என்று பார்த்தோம். அதைப் போலவே அவன் 1917ஆம் ஆண்டின் பிப்ரவரிப் புரட்சி நடந்து முடிந்த பின், அதனை வரப்போகும் நல்ல யுகத்தின் முன் முன்னடையாளங்களில் ஒன்றாகவே கருதினான். எனவே ரஷ்ய நாட்டுத் தொழிலாளி மக்களைப்போல் அவனும் சோஷலிசத்தின் வருகையில் நம்பிக்கை இழக்காமல் அதற்காகக் காத்திருந்தான் என்றே நாம் கூறலாம்.

இந்த நம்பிக்கையின் காரணமாகத்தான் அவன் பிப்ரவரிப் புரட்சிக்குப் பின் எழுதியதும், பிங்கள ஆண்டு ஐப்பசி முதல் தேதியன்று, அதாவது 1917ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில், சரியாகச் சொன்னால், ரஷ்யாவில் சோஷலிசப் புரட்சி வெற்றி பெறுவதற்குச் சில நாட்களுக்கு முன்னால், பரலி சு. நெல்லையப்பரால் ''இதிலுள்ள பாடல்கள் தங்க ஏடுகளில் நவரத்ன எழுத்துக்களால் பொறித்தற்குரியன'' எனக் கூறும் முகவுரையோடு வெளியிடப் பட்டதுமான பாரதியின் ''முரசு''ப் பாட்டில் அவன் தனது சோஷலிசக் கருத்தை, சமத்துவக் கருத்தை வலியுறுத்திப் பின்வருமாறு பாடினான் :

வயிற்றுக்குச் சோறுண்டு கண்டீர்—இங்கு
வாழும் மனிதர் எல்லோர்க்கும்
பயிற்றித் தொழில் செய்து வாழ்வீர்!—பிறர்
பங்கைத் திருடுதல் வேண்டாம்.

பாருக்குள்ளே சமத்தன்மை – தொடர்
பற்றும் சகோதரத்தன்மை
யாருக்கும் தீமை செய்யாது – புவி
எங்கும் விடுதலை செய்யும்

(முரசு. பாடல் 23, 29)

இவ்வாறு அவன் பாடி முடித்த சின்னாட்களிலேயே, 1905ஆம் ஆண்டு ஜனுவரியில் எந்த மாரிக்கால அரண்மனையின் முன்னால் மக்கள் ஈக்களைப் போல் சுட்டுக் கொல்லப் பட்டார்களோ, அதன் காரணமாக முதல் ரஷ்யப் புரட்சி வெடித்ததோ, அதே மாரிக்கால அரண்மனையை, லெனினின் தலைமையில் செயல்பட்ட சோவியத்துக்கள் அதாவது தொழிலாளர் பிரதிநிதிக் குழுக்களைச் சேர்ந்த புரட்சிப் படையினர் தாக்கி, அங்கு சோஷலிசப் புரட்சியை வெற்றி பெறச் செய்தனர். ''புவியெங்கும் விடுதலை'' செய்யும் புரட்சியாக அது வெற்றி பெற்றதைக் கண்டான் பாரதி. எனவேதான் அந்தப் புரட்சியை,

இடிபட்ட சுவர்போலே கலி விழுந்தான்!
கிருத யுகம் எழுக மாதோ!

என்று பாடினான். இதனால் தான் அவன் தனது 'புதிய ருஷியா' என்ற பாடலை எந்தவிதத் தயக்கமும் மயக்கமும் இன்றி,

மாகாளி பராசக்தி உருசிய நாட்டினில்
கடைக் கண் வைத்தாள்; அங்கே
ஆகாவென்று எழுந்ததுபார் யுகப்புரட்சி!

என்று எடுத்த எடுப்பில் ஆகாகாரமிட்டு வரவேற்றான். அதனைத் தான் நெடுங்காலமாகக் காண்பதற்குத் தவமிருந்து காத்திருந்த யுக மாற்றமாக, கலியுகம் தொலைந்து கிருதயுகம் தோன்றிய நிகழ்ச்சி யாக வருணித்தான்; வாழ்த்தினான்; அதனை வரவேற்றுப் பாடினான்.

---

